# பூமான் நபியின் புனித வாழ்க்கை

## (முதல் பாகம் - வினா விடை)

(இருபதாம் பதிப்பு)

ஆசிரியர்:

நாவலர் S. கௌஸ் முஹியித்தீன்

வெளியீடு:

**தீன் பதிப்பகம்**

2,4/15, சீதளி வடகரை.

திருப்புத்தூர் - 623 211.

சிவகங்கை மாவட்டம்

*பொருளடக்கம்*

2

உரிமை ஆசிரியருக்கே

| | | | |
|---|---|---|---|
| முதல் பதிப்பு | : | பிப்ரவரி | 1981 |
| இரண்டாம் பதிப்பு | : | ஜூன் | 1982 |
| மூன்றாம் பதிப்பு | : | ஜூலை | 1983 |
| நான்காம் பதிப்பு | : | டிசம்பர் | 1984 |
| ஐந்தாம் பதிப்பு | : | ஜூலை | 1985 |
| ஆறாம் பதிப்பு | : | ஏப்ரல் | 1986 |
| ஏழாம் பதிப்பு | : | ஜனவரி | 1987 |
| எட்டாம் பதிப்பு | : | ஜூன் | 1988 |
| ஒன்பதாம் பதிப்பு | : | மே | 1989 |
| பத்தாம் பதிப்பு | : | மே | 1990 |
| பதினோராம் பதிப்பு | : | ஜூலை | 1991 |
| பன்னிரண்டாம் பதிப்பு | : | ஜனவரி | 1993 |
| பதிமூன்றாம் பதிப்பு | : | ஜூலை | 1993 |
| பதினான்காம் பதிப்பு | : | ஜனவரி | 1994 |
| பதினைந்தாம் பதிப்பு | : | ஆகஸ்ட் | 1994 |
| பதினாறாம் பதிப்பு | : | ஜனவரி | 1995 |
| பதினேழாம் பதிப்பு | : | ஜூலை | 1997 |
| பதினெட்டாம் பதிப்பு | : | ஜனவரி | 1998 |
| பத்தொன்பதாம் பதிப்பு | : | ஜூன் | 1998 |
| இருபதாம் பதிப்பு | : | ஜூன் | 2003 |

# வேண்டுகோள்

நபிபெருமானார் அவர்களின் வாழ்க்கை வரலாறுகளின் இப்பகுதியை எழுதி வெளியிடுவதில் மற்றவர்களுடைய நல்லாதரவு கிடைத்த போதிலும், இந்நூலை எழுதும் காரியத்தில் என்னால் முடிந்த அளவு பேணுதலாக இருந்த போதிலும், மனித இனத்திற்கு இயல்பாகவே அமைந்துள்ள குற்றங்குறைகள் என் மூலம் இதில் இடம் பெற்றிருக்கக்கூடும். ஆகையால் இதில் காணும் குற்றங்குறைகளை வாசகப் பெருமக்கள் அருள் கூர்ந்து எனக்கு அறிவிப்பீர்களானால் இன்ஷா அல்லாஹ் அடுத்தடுத்து வரும் பதிப்புகளில் அவற்றைத் திருத்திக் கொள்ள வசதியாக இருக்கும் என்று பணிவன்போடு கேட்டுக் கொள்கிறேன்.

*திருப்பத்தூர்,*

***1-6-1981***

வஸ்ஸலாம்,

**S. கௌஸ் முஹியித்தீன்**

பொருளடக்கம் ஆதார நூல்கள்

ஸீரத்துன்னபி.

முஹம்மதுர் ரசூலுல்லாஹ் - முஹம்மது ரிழா

நூருல் யகீன் - முகம்மது குளிரி பேக்

தாரீகுல் கம்ஸி - அல்லாமா ஷைகு ஹுசைன்

ஹயாத்து முஹம்மது - முஹம்மது ஹுசைன்ஹைகல்

# தமிழ் நூல்கள்

திருநபி சரித்திரம்: மர்ஹூம் மு.ந. முஹம்மது சாஹிப்

ஹஜ்ரத் முஹம்மத்: அல்லாமா S.S. அப்துல் காதிர் ஹஸ்ரத்

நபிகள் நாயகம் : அல்ஹாஜ் M.R.M. அப்துர் ரஹீம், B.

மருவிலா முழுமதி : ஜமால்

(நபிகள் நாயகம்)

*பொருளடக்கம்*

# நூல் விவரப்பட்டியல்

| | | |
|---|---|---|
| புத்தகத்தின் பெயர் | : | பூமான் நபியின் புனித வாழ்க்கை |
| பாகம் | : | முதலாம் பாகம் |
| ஆசிரியர் | : | நாவலர் சா. கௌஸ் முஹ்யித்தீன்<br>2,4/15, சீதளி வடகரை,<br>திருப்பத்தூர்–623 211, சிவகங்கை (Dt.) |
| உரிமை | : | ஆசிரியருக்கே |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | 20–வது பதிப்பு |
| வெளியீட்டாளர் | : | தீன் பதிப்பகம் |
| அச்சிட்டோர் | : | மாஹின் பிரிண்டர்ஸ்<br>28, அப்பு மேஸ்திரி தெரு, சென்னை–1.<br>போன்: 25225143 |

பொருளடக்கம்

# மாநபி (ஸல்) அவர்கள் வழங்கிய மணிமொழிகள்

## கல்வி நபிமார்களின் உரிமைப்பொருள்

### கல்வி கற்பித்தவரின் சிறப்பு

1. கல்வியைப் பற்றிப் பேசுபவன் இறைவனைப் புகழ்பவனாவான்.

2. அதைக் கற்றுக் கொடுப்பவன் தர்மமம் செய்தவனாவான்.

3. அதை செம்மையாக பரப்புபவன் இறைவனுக்கு வணக்கம் செலுத்தியவனாவான்.

4. அறியாமை என்னும் இருளை நீக்கி அறிவு என்னும் ஒளியை ஏற்றுபவனாவான்.

5. சமத்துவத்தையும், சகோதர நேயத்தையும் வளர்க்கிறார்கள்.

6. தேசியப் பற்றையும், தெய்வீகப் பற்றையும் வழங்குகிறார்கள். இன்னும் பல சிறப்புக்குரிய போதனைகளையும் கற்பிக்கிறார்கள்.

# சமர்ப்பணம்

இவ்வுலக மறு உலக வாழ்க்கை இரண்டிலும் மக்களின் நல்வாழ்வுக்கு வழி வகுத்துத் தந்தவர்களும், இறைவணக்க முறைகளையும், சீரிய நல்லொழுக் கங்களையும் மிக அழகாகக் கற்பித்துத் தந்தவர்களும், இறைவன் தந்த திருமறையை மக்களுக்குத் தெளிவாக எடுத்தோதி அதன் கட்டளைகளில் நின்றும் வழுவாது வாழ்ந்து காட்டியதின் மூலமாக மக்களை இஸ்லாத்தின் பால் ஈர்த்தவர்களும், மனிதத்துவம் என்றால் என்ன வென்பதை மானிலத்தார்க்கு எடுத்துச் சொல்லி, அழகிய முன்மாதிரியாக என்றும் அமைந்துள்ளவர் களுமான ஸய்யிதுனா முஹம்மது முஸ்தபா ரஸூலுல்லாஹி (ஸல்) அவர்களுக்கே இந்நூலை சமர்ப்பிக்கிறேன்.

யாரஸூலல்லாஹ், தங்களின் புனித வாழ்க்கையைப் பற்றி எழுதுவதற்கு நான் தகுதியற்ற வனாக இருந்தாலும், பலரின் பயான்களைக் கேட்டும், புத்தகங்களைப் படித்தும் என்னுள் எழுந்த ஆர்வத்தின் காரணத்தால், தங்களின் பரிசுத்தமான வாழ்க்கை யையும், தங்களது பண்பையும் தாங்கள் தீனுக்காக செய்த சேவையையும் பற்றி இந்தச் சிறிய நூலில் எழுத முயன்றுள்ளேன். இந்நூலை அங்கீகரித்து தங்களுடைய தொண்டர்களிலொருவனாக என்னை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற பேராவலினால் இந்நூலைத் தங்கள் சமுகமே உரித்தாக்குகிறேன்.

ஆசிரியர்.

மார்க்கப் பேரறிஞரும், பிரபல பேச்சாளரும்,
ஜமாலிய்யா அரபிக் கல்லூரியின் நாஜிருமான,
பேராசிரியர் மௌலானா மௌலவி

## முஹம்மது அப்துர் ராஃபீஃ ஹஜ்ரத்

அவர்கள் மனமுவந்து இந்நூலுக்கு வழங்கிய

# அணிந்துரை

வாசகப் பெருமக்களே!

அன்புக்குரிய நண்பரும், ஆருயிர் சகோதரருமான நாவலர் S.கௌஸ் முஹியித்தீன் அவர்களின் எழுத்தோவியத்தைப் பார்க்கக்கூடிய வாய்ப்பினை கிருபையுள்ள இறைவன் தந்தமைக்கு நன்றி செலுத்துகிறேன். நான் இதுவரைக்கும் எண்ணற்ற மௌலவிப் பெருமக்களும், சரித்திர ஆசிரியர்களும் எழுதிய, மாநபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் பார்த்தும் இருக்கின்றேன்; படித்தும் இருக்கின்றேன். ஆனால் நண்பர் அவர்களின் எழுத்தோவியம் படிப்பறியாப் பாமர மக்களும், பகுத்துணர்ந்த அறிவாளிகளும் முக்கியமாக பள்ளி மாணவ, மாணவியர் இலகுவான முறையில் கற்றுக் கொள்ளக் கூடிய இனிய தமிழ் நடையில் திருநபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாற்றின் ஒரு பகுதியை மட்டும், வினாவை ஏற்படுத்தி, அதற்குரிய விடையினையும், சிறப்பான முறையில் அமைத்துத் தந்திருக்கின்றார். இவர் அழகு மொழியாம் அரபிமொழியை, இலக்கண இலக்கியத்தோடு முறைப்படி கற்ற உலமாக்களின் பட்டியலில் இல்லாது போனாலும், அரபி மொழியைக் கற்க வேண்டும் என்ற ஆர்வமும், உலமாப் பெருமக்களுக்குப் பணிந்து செயல்படும் தன்மையும், மார்க்கத்தைப் பற்றியும், மாநபி (ஸல்) அவர்களைப் பற்றியும், இறை இல்லத்திலும், பொதுமேடைகளிலும் தக்க ஆதாரத்தோடு பேசுகின்ற

பேச்சுகளும் என் போன்ற உலமாப் பெருமக்களின் உள்ளத்தில் நன்கு பதிந்துள்ளன. இந்த இளம் வயதில் சிறப்புமிகுந்த இந்நூலை எழுதி வெளியிடும் இவருக்கு என்னுடைய நல்வாழ்த்துக்களைத் தெரிவிக்கின்றேன்.

இதில் சிறப்பான அம்சம் என்னவென்றால், ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் பல ஆங்கிலப் புத்தகங்களில் எழுதி இருப்பதும் நபி (ஸல்) அவர்களைப் பற்றி உர்தூ, அரபி போன்ற மொழிகளில் ஆதாரமான கிதாபுகளை எனக்குச் சுட்டிக் காட்டினார்.

அல்லாஹ்வின் அருளால், நிச்சயமாக நல்ல எதிர்காலம் இவருக்கு இருக்கின்றது. ''அனைத்து சக்திகளையும் தன்னகத்தே வைத்திருக்கும் இரக்கமுடைய இறைவன் நீடித்த ஆயுளையும் தீனுக்காக உழைக்கும் சக்தியையும் இவருக்குத் தந்தருள்வானாக'' என்று துஆ செய்து இந்த மதிப்புரையை வழங்குகிறேன். இதுபோன்று அரிய கருத்துள்ள பல நல்ல நூல்களை வெளியிட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

வஸ்ஸலாம்

இவண்.

முஹம்மது அப்துர் ராஃபிஃ
முதல்வர்,
மத்ரஸா ஜமாலிய்யா அரபிக் கல்லூரி,
சென்னை - 600 012.

சிறந்த பேச்சாளரும் அல் மத்ரஸத்துர் ரப்பானிய்யாவின் முதல்வருமான (நாஜிர்) மௌலவி ஹாபிஸ் காரி ஹஜ்ரத்

# முஹம்மது அலாவுத்தீன்

அவர்கள் மனமுவந்து அளித்த

# வாழ்த்துரை

அஸ்ஸலாமு அலைக்கும் (வரஹ்)

வாசகப் பெருக்களே!

பூமான் நபியின் புனித வாழ்க்கை என்ற நன் நூலை அதன் ஆசிரியரும், எனதருமை நண்பருமான நாவலர் கௌஸ் முஹியித்தீன் அவர்கள் அடியேனிடம் தந்து மதிப்புரை வழங்கும்படி வேண்டிக் கொண்டார். அடியேன் அதற்குரிய தகுதி பெற்றிலேன். இருந்த போதிலும் இப்புனித சேவையில் யானும் பங்கு பற்ற வேண்டும் என்ற நோக்கத்துடன் சில வரிகளை வரைந்தளித்தேன்.

இதன் ஆசிரியர் அருமை நண்பர் நாவலர் S. கௌஸ் முஹியித்தீன் அவர்கள் நல்ல பேச்சாளர் என்பது தமிழகம் அறிந்ததே. மேலும் நல்ல திறமையும் பேச்சு சாதுர்யமும் வாய்க்கப் பெற்றவர். அவர் தமது திறமையைப் பயன்படுத்தி இந்நூலைத் தொகுத்தளித்துள்ளார்.

அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களின் வரலாற்றை சிறார்களும், பாமரர்களும் எளிதில் புரியும் வண்ணம் எளியநடையில் அனைவரும் குறிப்பாக மாணவ, மாணவியர் புரிந்து கொள்ளும் படியாக வினா விடையுருவில் இதனை அமைத்தளித்துள்ளார் இதன் ஆசிரியர் அவர்கள். இதனை ஆரம்ப முதல் இறுதிவரை நான் படித்ததோடு அல்லாமல், இதில் உள்ள முக்கிய பகுதிகளை படித்தும் அவரால் வாசிக்கக் கேட்டும் பார்த்ததில் ஆதார பூர்வமானதாகக் கண்டு மகிழ்ச்சியடைந்தேன். இஃதோர் அருமையான முயற்சி, அரிய தொண்டு! அவர் பணி எழுத்துலகில் மேலும் சிறந்தோங்க எல்லாம் வல்ல இறைவனிடம் துஆச் செய்கிறேன். மனமார வாழ்த்துகிறேன்.

- முஹம்மது அலாவுத்தீன் (நாஜிர்)

# மதிப்புரை

அன்பிற்குரிய வாசகப் பெருமக்களே, நண்பர்களே! என் அருமை நண்பர் நாவலர் சா.கௌஸ் முஹியித்தீன் அவர்கள் அழகாகத் தொகுத்துள்ள "பூமான் நபியின் புனித வாழ்க்கை" என்ற புதுப்படைப்பில் உருவான நன் நூலைப் பார்க்கும் வாய்ப்புக் கொடுத்த வல்ல அல்லாஹ்விற்கு நன்றி செலுத்துகிறேன்.

தமிழகத்தில் எண்ணற்ற உலமாப்பெருமக்களும் சரித்திரத்தைக் கற்றுணர்ந்த பெரியார்களும் நபிகள் திலகம் முஹம்மது (ஸல்) அவர்களின் புனித வாழ்க்கை முறைகளையும் அவர்கள் மற்றவர்களுக்கு வாழ வழிவகுத்துத் தந்த சிறப்பினையும், தாங்க முடியாத துன்பத்திலும் தீனுக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட செயல் முறைகளையும் பற்றி அவரவர்கள் தங்களுக்கென உரிய பாணியில் எழுதியிருக்கும் பல நூல்களை நான் பார்த்துமிருக்கிறேன்; படித்துமிருக்கிறேன். ஆனால் நண்பர் நாவலர் சா. கௌஸ் முஹியித்தீன் அவர்கள் படைத்துள்ள இந்நன்னூல் குறிப்பாக மாணவச் செல்வங்களும், பாமரர்களும் எளிதில் புரிந்து கொள்ளுமளவிற்கு இனிய நடையில், அடுத்து என்ன நடக்கும் என்று ஆர்வத்துடன் படிக்கத் தூண்டும் அரிய பல தலைப்புகளுடன் கூடியதாக சிறப்பாக அமைந்துள்ளன.

இதிலுள்ள ஒவ்வொரு நிகழ்ச்சிகளையும் தக்க ஆதாரங்களுடன் எழுதியிருப்பது கண்டு பெருமகிழ்ச்சியடைகிறேன். அன்னாரின் முயற்சியால் தொகுக்கப்பட்ட இந்நூலுக்குப் பெருமளவில் ஆதரவுகளை அளிப்பது மக்கள் கடனும், சமுதாய நலனுமாகும்.

வல்ல நாயன் இந்நூலாசிரியருக்கும் வாசகர்களுக்கும் ஈருலக நன்மைகளையும் அருள்வானாக!

மௌலவி அஃப்லலுல் உலமா
P. மக்தூம் ஷாஹ் ஜமாலி B.Com.,
சார்பதிவாளர், மாவட்டப் பதிவகம்,
சென்னை வடக்கு, சென்னை- 1.

சென்னை
8.2.1981

பேரறிஞரும், சிறந்த மார்க்கச் சொற்பொழிவாளரும், 'பிறை'மாத இதழின் ஆசிரியருமான

**மௌலவி M. அப்துல் வஹ்ஹாப் M.A., B.Th.,**

அவர்கள் மனமுவந்து அளித்த

# முன்னுரை

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

நஹ்மதுஹூ வ நுஸல்லீ அலா ரஸூலிஹில் கரீம்

அனைத்துலகங்களுக்கும் அருள் கொடையாக அனுப்பப் பெற்ற அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களைப் பற்றிய வாழ்க்கை வரலாற்று நூல்கள் வந்த வண்ணமாகவே இருக்கின்றன. அந்தப்பட்டியலில் ஒரு புதுமையான இடத்தைப் பெறத்தக்க இந்நூலை வாழ்த்தி வரவேற்கிறேன்.

நாள்கள் தோறும் ஹிஜ்ரீ பதினைந்தாம் நூற்றாண்டுத் தொடக்க விழாக்கள் கொண்டாடப் பெற்றுவரும் இக்காலை இச்சிறப்பு நூல் வெளிவருவது மிகப் பொருத்தமுடையது.

இந்நூலின் சிறப்புக்கு இரு காரணங்களுண்டு. 1. இது யாவருக்கும் எளிதில் மனதில் தங்கும் வண்ணம் கேள்வி பதில் வடிவில் அமைந்திருப்பது; 2. ஆதாரம் மிக்க பலநூல்களின் துணைகொண்டு இது ஆக்கப்பெற்றிருப்பது.

பயன் மிக்க இந்நூலை இயற்றித் தந்திருக்கும் நாவலர் S. கௌஸ் முஹியித்தீன் நபிகள் பெருமானாரின் வாழ்க்கை வரலாறுகளில் மிகவும் ஈடுபாடுள்ளவர். அவர் பல மாதங்கள் உழைத்து, பல நூல்களை ஆய்ந்து அறிஞர் பலரிடம் உரையாடி இந்த உயர் நூலைத்தொகுத்துத் தந்திருக்கிறார்.

இதனைப் பார்வையிட்டுத் தருமாறு நாவலர் கௌஸ் முஹியித்தீன் அவர்கள் என்னிடம் தந்தபோது, அவர் குறித்துள்ள நூல்கள் போக அண்ணலெம் பெருமானாரின் தூய திருவாழ்க்கை பற்றிய முதல் வரலாற்றுத் தொகுப்பான ஸீரத் இப்னு ஹிஷாம் என்ற மூல ஆதார நூலையும் இதனைச் சரிபார்க்கும் பணியில் பயன்படுத்திக் கொண்டேன்.

மனித முயற்சியில் பிழைகள் நேராது எவ்வளவு பார்க்க முடியுமோ அவ்வளவு பார்த்து, இந்நூல் வாசகப் பெருமக்களின் திருமுன் சமர்ப்பிக்கப்படுகிறது. இறையருளால் இதற்கு வாசகர்களின் வளமான ஆதரவு நிச்சயம் கிடைக்கும் என்று நம்புகிறேன்.

இதனைத் தொடர்ந்து, ஹிஜ்ரத்துக்குப் பின்னர் பெருமானாரின் தூய திருவாழ்வு பற்றியும், அவர்களின் பொன்னான போதனைகள் பற்றியும் நூல்கள் வெளியிட நாவலர் கௌஸ் முஹியித்தீன் முனைந்திருக்கிறார். இன்ஷா அல்லாஹ் அவையும் பயன்மிக்கவையாக அமைய அல்லாஹு தஆலாவின் பேரருளும் அவனுடைய திருத்தூதர் எம்பெருமானார் முஹம்மது முஸ்தபா ரஸூல் (ஸல்) அவர்கள் நல்லாசியும் வேண்டி இச்சிறு அறிமுகத்தை நிறைவு செய்கிறேன்.

வஆகிரு தஃவானா அனில் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்!

8.4.1401 M.அப்துல் வஹ்ஹாப்
14.2.1981 சென்னை - 600 016.

# என்னுரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்.

பேரன்புக்குரிய வாசகப் பெருமக்களே! அறிவிலும் அனுபவத்திலும் சிறியவனாக இருந்தபோதிலும் இந்நூலை எழுதியவன் என்ற முறையில் என்னுடைய ஒரு சில கருத்துக்களைத் தங்கள் முன் எடுத்து வைக்கிறேன்.

உலகில் வாழ்ந்த, வாழும் மனிதர்களில் அனேகரின் வாழ்க்கை வரலாறுகள் இருக்கின்றன. இவை எதிர்கால மக்களுக்கு வழி காட்டிகளாகவும் இருக்கின்றன. இவற்றைப் படித்துப் பயனடைந்தோர் அதிகமானவர்கள் இருக்கின்றனர். இருந்த போதிலும் இவர்களில் நபிமார்களாக இருந்தவர் களையும் அவர்களைப் பின்பற்றிச் செயல்பட்டுத் தங்களின் வாழ்க்கைகளை அமைத்துக் கொண்டவர்களையும் தவிர, மற்றவர்களின் வாழ்க்கை சரித்திரங்கள் இவ்வுலக, மறுவுலக வாழ்க்கையில் மனிதன் உயர்வடைவதற்கான வழிமுறைகளைக் காட்டுவதாகத் தோன்றவில்லை.

மானிட இனத்துக்கு நேர்வழியைக் காட்டுவதற்கென்றே இறைவனால் இப்புவிக்கு அனுப்பப்பட்ட தூதர்களின் சரித்திரங்களும், அவர்களின் போதனைகளும் தான் நேர்வழியைக்காண்பிக்க முடியும் என்ற கருத்தை அறிஞர்கள் மனமார ஏற்றுக் கொள்வர்.

மக்களுக்கு நல்வழி காட்ட வந்த நபிமார்களில் நம் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்களைத் தவிர்த்து, ஏனைய நபிமார்கள் வாழ்ந்த முறைகள், அவர்களின் பிறப்பு இறப்பு அவர்கள் மக்களுக்காகச் சேவைசெய்யத் தங்களையே அர்ப்பணித்துக் கொண்ட செயல்கள் அனைத்தும் முழுமையாகக் கிடைக்க வில்லை. இதே போன்று தான், மற்றப் பெரியார்களின் முழுமையான வாழ்க்கைச் சரித்திரங்களும் கிடைக்கவில்லை.

ஆனால் நம் பெருமானார் (ஸல்) அவர்களின் நிலை அப்படியல்ல. இவர்களின் பிறப்பு, வளர்ப்பு, தாம் வாழ்ந்தது, மற்றவர்களின் வாழ்வுக்கு வழிவகுத்துத் தந்தது; நிறம், இனம், மொழி பாராமல் அவர்கள் சேவை செய்தது இவை மட்டுமல்லாமல், நபி (ஸல்) அவர்களின் முன்னோர்கள், இவர்களைப் பின் தொடர்ந்தோர் ஆகியோரைப் பற்றியும் ஆசிரியர்கள் தெள்ளத் தெளிவாக எழுதியுள்ளார்கள். முழு வாழ்க்கை நிகழ்ச்சிகள் அடங்கிய பூரணமான சரித்திரம் ஒன்று இருக்கிறதென்றால், அது நமது நாயகம் முஹம்மது (ஸல்) அவர்களுடைய சரித்திரம் ஒன்றுதான். இந்தப் புனித சரித்திரத்தை எண்ணற்ற உலமாப் பெருமக்களும், சரித்திர ஆசிரியர்களும் மாற்றுமத அறிஞர்களும் எழுதியுள்ளார்கள்.

## நான் இதை எழுதக் காரணம்

பல மாதங்களுக்கு முன்பாக தென்கிழக்காசிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்தேன், குறிப்பாக சில இஸ்லாமிய நாடுகளுக்கும் சென்றேன். அப்போது அங்கே மார்க்கத்தையும் மாநபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் பற்றியும் போதிக்கின்ற கல்விக் கூடங்களுக்குச் சென்று அவற்றை முறைப்படி கற்கும், மாணவ, மாணவியரையும் கற்றுக் கொடுக்கும் ஆசிரியப் பெருமக்களையும் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது.

அப்போது அங்கே என்னைக் கவர்ந்த நிகழ்ச்சிகள் பல. அதிலே ஒன்று என்னை வெகுவாக ஈர்த்துக்கொண்டது. அது யாதெனின், நபிகள் நாயகம், நற்குணத்தின் தாயகம், முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்து, மற்ற கணிதம், அறிவியல், புவியியல் போன்றவற்றை மனனம்செய்து ஆசிரியரிடம் பிழை இல்லாமல் ஒப்பித்து பின்பு தேர்வு எழுதுவது போன்று நம் பெருமானாரின் வாழ்க்கை வரலாறுகளையும் அப்படியே ஒப்பித்து, பின்பு தேர்வு எழுதி அதிலும் போட்டிபோட்டு வெற்றியடையும் நிகழ்ச்சிதான்.

இவர்கள் இவ்வாறு இலகுவாகப் பயிலுவதற்கு என்ன காரணம் என்று பார்க்கும்போது அதிலும் ஓர் இனிமையைக் கண்டேன். யாதெனில் பெருமானாரின் சரித்திரத்தை 4000 பக்கங்களுக்கு மேல் எழுதி அதை முதல் பாகம் இரண்டாம் பாகமென்று பல பாகங்களாகப் பிரித்து, ஒவ்வொரு பாகத்திற்கும், அதில் இடம் பெறும் வரலாறுகளுக்கும் பொருத்தமான வினாக்களை அமைத்து அதற்குரிய விடையையும் தந்திருக்கின்றார்கள். ஒவ்வொரு பகுதியையும் ஒவ்வொரு வகுப்பிற்குப் பாடமாக வைத்திருக்கின்றார்கள்.

இவ்வாறு வினா விடையாக இருப்பதால் மாணவச் செல்வங்களும், மற்றவர்களும், வினாவை நன்குபுரிந்து கொண்டு அதற்குரிய விடைகளையும் தெரிந்து கொள்ள மிகவும் தெளிவான வழியாக உள்ளது. இது இவர்களுடைய தாய்மொழியிலும், அரபியிலும், ஆங்கிலத்திலும் உள்ளது. இதைப் பார்த்த எனக்கு நாமும் இதுபோன்று ஒரு நூலை, அரபியிலும், ஆங்கிலத்திலும் எழுதாது போனாலும், தாய்மொழியாம் தமிழிலாவது நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாற்றினை பாமர மக்களும், மாணவச் செல்வங்களும் இலகுவாக கற்கும் அளவுக்கு எழுதி வெளியிடுவோம் என்ற எண்ணத்தில் எழுதினேன்.

என்னுடைய எண்ணத்தை முதன் முதலில் புதுக்கோட்டை நிஜாம் ஓரியண்டலில் அரபிப் பேராசிரியராகப் பணிபுரியும் அப்ழலுல் உலமா, முஹம்மது அலி ஜின்னா M.A., அவர்களிடம் சொன்னேன். அவர்கள், இப்புத்தகம் எழுதுவதற்குத் தேவையான, வினாக்களைத் தந்து நபி (ஸல்) அவர்களைப் பற்றிய ஆங்கிலப் புத்தகங்களையும் தந்தார். இதை எடுத்துக் கொண்டு மற்ற இஸ்லாமிய எழுத்தாளர்களிடம் சென்றேன். அவர்களும் பல நல்ல கருத்துக்களையும், அவர்களின் அனுபவங்களையும் சொன்னார்கள். பின்பு எழுதத் துவங்கினேன்.

## நன்றி செலுத்துகிறேன்

நான் எழுதி முடித்தவுடன் அந்தப் படிகளை எடுத்துக் கொண்டு நேரடியாக பெரம்பூரிலுள்ள ஜமாலியா அரபிக் கல்லூரிக்குச் சென்றேன். அக்கல்லூரியின் முதல்வர் மௌலானா மௌலவி **முஹம்மது அப்துர் ராஃபி** ஹலரத்தைச் சந்தித்து மதிப்புரை வழங்குமாறு கேட்டேன், அதற்கு அவர்கள் உடனடியாகத் தர இயலாது; குறைந்தது 40 நாட்களாவது ஆகும். நாங்கள் எப்பொழுது வரச்சொல்கிறோமோ அப்பொழுது வந்து பெற்றுக் கொள்ளுங்கள் என்று சொல்லி விட்டார்கள்.

அதே போன்று இரண்டு மாதத்திற்குப் பின் எனக்கு அழைப்பு வந்தது, நானும் அதை ஏற்றுக் கொண்டு அவர்களிடம் சென்றபோது, முதல்வரின் பொறுப்பில் அப்ழலுல் உலமாக்கள் இருவரும் ஆலிம்கள் மூவரும் இன்னும் ஓரிரு நிர்வாகஸ்தர் களும் சேர்ந்து என்னிடம் பல வினாக்கள் கேட்டு அதற்குரிய விளக்கத்தையும் சொல்லச் சொல்லி, பின்பு ஹலரத் முதல்வர் அவர்கள் மனமுவந்து மதிப்புரை வழங்கினார்கள். ஹலரத் அவர்களுக்கும் அவர்களைச் சார்ந்தவர்களுக்கும் நான் நன்றி செலுத்துகிறேன்.

இதன் பின்னர் புரசைவாக்கம் சென்று அங்கு குர்ஆனை மனனம் செய்யக் கற்பிக்கும் ஒரு தலைசிறந்த அரபிக் கல்லூரியான அல்மத்ரஸத்துர் ரப்பானிய்யாவின் முதல்வரும் நிர்வாக இயக்குனருமான மௌலான மௌலவி, ஹாபிஸ் காரி முஹம்மது அலாவுத்தீன் ஹலரத் அவர்களைச் சந்தித்து, மதிப்புரை கேட்டேன். அவர்களும், இதைப்படித்து முடித்து எனக்கு நல்ல அறிவுரைகளைக் கூறி, வாழ்த்துரை வழங்கினார்கள். அவர்களுக்கும் அவர்களைச் சார்ந்தவர் களுக்கும் துஆச் செய்து, நன்றி செலுத்துகிறேன்.

இரண்டு அரபிக் கல்லூரி முதல்வர்களிடமும், அணிந்துரை வாழ்த்துரையும் பெற்றதை எடுத்துக் கொண்டு

சிறந்த எழுத்தாளரும், மார்க்கத்தைப் பற்றியும் மாநபி (ஸல்) அவர்களைப் பற்றியும் ஆதாரத்தோடு, அழகாகப் பேசும் சிறப்பைப் பெற்ற பிறை பத்திரிகையின் ஆசிரியருமான மௌலவி **M. அப்துல் வஹ்ஹாப், M.A.B.Th.,** அவர்களிடம் சென்றேன். அவர்கள், இதைப் பார்த்தும் இதில் எழுத்துப் பிழைகள், சொற்குற்றம், பொருள் குற்றம் இல்லாமல் சரி பார்த்துத் தந்ததோடல்லாமல், குர்ஆனுடைய ஆயத்தின் தமிழ் விளக்கமும் தலைப்புகளையும் தொகுத்துத்தந்து, முன்னுரையும் வழங்கினார்கள். இப்பெரியாரவர்களுக்கு, நீடித்த ஆயுளையும் சமுதாயத்திற்காக நிறைய உழைக்கும் சக்தியையும் தந்தருள வேண்டும் என்று வல்ல அல்லாஹ்விடம் துஆ செய்வதோடு நன்றியும் செலுத்துகிறேன்.

அருமை நண்பர், அப்ழலுல் உலமா மக்தூம் ஷாஹ் ஜமாலி B.Com., அவர்கள் மனமுவந்து வழங்கியுள்ள மதிப்புரைக்கும் நான் நன்றி செலுத்துகிறேன்.

தங்கள் அன்பன்

**S. கௌஸ் முஹியித்தீன்**

# பொருளடக்கம்



# பூமான் நபியின் புனித வாழ்க்கை

## முதல் பாகம் (வினாவும், விடையும்)

## 1. மூதாதையர்

**கேள்வி : நபி (ஸல்) அவர்களின் தந்தையார் பெயர் என்ன?**

பதில் : தந்தையார் பெயர் அப்துல்லாஹ் என்பதாகும்.

**கேள்வி : நபி (ஸல்) அவர்களின் தந்தை வழிப் பாட்டனார் யார்? பாட்டியார் யார்?**

பதில் : தந்தையைப் பெற்ற பாட்டனார் பெயர் அப்துல் முத்தலிபு, பாட்டியின் பெயர் பர்ரா.

**கேள்வி: தந்தை உடன் பிறந்த ஆண்கள் எத்தனை பேர்; அவர்களுடைய பெயர்கள் என்ன?**

பதில் : 1. ஹாரிது, 2. ஜுபைர், 3. அபூதாலிப், 4. அப்துல் கஃபா, 5. அப்துல்லாஹ், 6. அபூலஹப் (அப்துல் உஸ்ஸா), 7. முகவ்விம், 8. ஹஜ்ல், 9. முஙய்ரா, 10. ஹம்ஜா, 11. ளர்ரார், 12. குதம், 13. அப்பாஸ், 14. ஙீதாக், 15. முஸ்அப் இந்த பதினைந்து பேர்களும் தந்தை உடன்பிறந்தவர்கள் ஆவர். இவர்களின் ஙீதாக் என்பவருக்கு ஹஜன் என்றும் அப்துல் கஃபா என்பவர்தான் முகவ்விம் என்றும் கூறுகின்றார்கள். குதம் என்று யாருக்குமே பெயர் இல்லை என்பதாகச் சரித்திர ஆசிரியர் சிலர் கூறுகிறார்கள்.

இவர்கள் கூறிய கூற்றுப்படிப் பார்க்கப் போனால் அப்துல்முத்தலிபு அவர்களுக்கு பன்னிரண்டு ஆண் மக்களாவார்கள்.

**கேள்வி : தந்தை உடன் பிறந்த பெண்மக்கள் எத்தனை பேர் அவர்கள் பெயர் என்ன?**

பதில் : உம்முஹகீம், பைளாஉ, உமைமா, அர்வா, பர்ரா, ஆத்திகா, ஸபிய்யா ஆகிய ஏழு பேர்களும் தந்தையுடன் பிறந்த பெண்மக்கள் ஆவர்.

## தாய் வழி உறவினர்கள்

**கேள்வி: நபி (ஸல்) அவர்களின் தாயார் பெயர் என்ன?**

பதில் : தாயார் பெயர் ஆமினா.

**கேள்வி: பெருமானாரின் தாய்வழிப் பாட்டனார், பாட்டி பெயர்கள் என்ன?**

பதில் : நபி (ஸல்) அவர்களின் தாய்வழிப்பாட்டனார் பெயர் வஹ்பு, தாயாரைப் பெற்ற பாட்டியின் பெயர் பாத்திமா.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களுக்கு சிறிய தாயார், பெரிய தாயார் உண்டா? எத்தனை பேர்கள்?**

பதில் : நபி (ஸல்) அவர்களின் சிறிய தாயார் பெயர் பாரீஷா; பெரிய தாயார் பெயர் பாக்கிதா.

**கேள்வி: ஆமினா நாச்சியாரின் சகோதரர்கள் யாவர்?**

பதில் : 1. அஸ்வத், 2. உமைர், 3. அப்து யஹூது ஆகிய மூவர்.

## குறைஷி வம்சம் யாரிலிருந்து ஆரம்பம்

**கேள்வி: குறைஷி வம்சம் யாரிலிருந்து ஆரம்பம் ?**

பதில் : பெருமானாரின் மூதாதை பிஹ்ருவிலிருந்து ஆரம்பம்.

**கேள்வி: நாயகம் (ஸல்) அவர்களின் பன்னிரண்டு தலைமுறைகளின் விவரமென்ன?**

பதில் : குறைஷி வம்ச ஆரம்பம் பிஹ்ருவிலிருந்து 1. பிஹ்ரு, 2. காலிப், 3. லுவய்யு, 4. கஃபு, 5. முர்ரா, 6. கிலாப், 7.குஸைய், 8.அப்துல்மனாப், 9.ஹாஷிம்,10.அப்துல்முத்தலிபு, 11.அப்துல்லாஹ், 12.அப்துல்லாஹ் வினுடைய அருமைப் புதல்வர் தான் நாயகம் (ஸல்) அவர்கள்.

*(ஆதாரம் : ஸீரத்துஇப்னு ஹிஷாம்)*

## 2. யானைப்படை

**கேள்வி: யானைச் சண்டை என்பதென்ன? இது எங்கே, எப்பொழுது நடந்தது?**

பதில் : அபிசீனிய நாட்டரசனின் பிரதிநிதியாக விளங்கிய (எமன் தேசத்தில்) அப்ரஹாவின் யானைப் படைக்கும், கஃபாவின் தலைவராக விளங்கிய ஹலரத் அப்துல் முத்தலிபின் குடிமக்களுக்கும் இடையே நடந்தபோர் தான் யானைச் சண்டை எனப்படும். இது நடந்த வருடத்தை யானை வருடம் என்று சொல்லப்படுகின்றது. இது கி.பி. 570ம் ஆண்டு, மக்காவின் எல்லையில் நடந்தது

இந்தச் சண்டை நபிகள் நாயகம் (ஸல்) பிறப்பதற்குச் சில மாதங்களுக்கு முன்பாக நடந்தது. எமன் மாகாணம் அபிஸீனியா தேசத்து அரசன் ஆட்சியின் கீழ் கொஞ்ச காலம் இருந்தது. அப்போது அந்த அரசனின் பிரதிநிதியாக அப்ரஹா என்பான் இருந்தான். அவன் பதவிக்கு வருவதற்கு முன் அரியாத் என்பவர் எமன் தேசத்தை ஆண்டு வந்தார். அப்ரஹாவின் சூழ்ச்சியால் அரியாத் கொல்லப்பட்டார். இதன் பின்னர்தான் அப்ரஹா அரசப் பிரதிநிதியானான். இது அபிஸீனியா நாட்டு மன்னனுக்குத் தெரிந்துவிட்டது. மன்னனுடைய வருத்தத்தைப் போக்கி, மன்னனைத் திருப்தி

செய்வதற்காகத் தன் தலைநகரில் ஒரு தேவாலயத்தைக் கட்டி, அனைவரும் அந்த ஆலயத்தில் வந்துதான் வழிபட வேண்டும் என்று தன் குடிமக்களுக்கு கட்டளையிட்டான். அன்றியும் ஹஜ்ஜு செய்ய வருவோரும் இந்த தேவாலயத்திற்கு வந்து போக வேண்டுமென்று அறிவித்தான்.

இந்தக் கோவிலை பல விதத்திலும் அழகுபடுத்தி வைத்தான். ஹஜ்ஜு செய்ய வருவோர் அனைவரும் இந்த தேவாலயத்திற்கு வந்தால் அரபு நாட்டு மக்களின் செல்வங்களில் கணிசமான ஒரு பகுதி இவ்வாலயத்திற்கு வருமானமாகக் கிடைக்கும் என்பது அவன் எண்ணம். இந்தச் செய்தி அரபு நாட்டு மக்கள் எல்லோருக்கும் தெரிய வந்தது.

**கேள்வி: ஜுஹைருப்னு பத்ர் என்பவர் செய்த சூழ்ச்சி என்ன?**

பதில் : அரபு நாட்டு மக்கள் செய்தியறிந்து மன வேதனையுடன் இருக்கும் நேரத்தில், ஜுஹைருப்னு பத்ர் என்பார், அப்ரஹா கட்டிய தேவாலயத்தை அசிங்கப் படுத்துவேன் என்று சபதம் செய்து கொண்டு, நேரடியாக ஸன்ஆவுக்கு வந்து, அவ்வாலயத்தில் பயபக்தியுடன் வணங்குவது போல் நடித்தார். இவருடைய நடிப்பை உணராத தேவாலயத்தை சார்ந்தோர் அங்குள்ள ஊழியர்களில் ஒருவராக அவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். இதன் பின்னர் ஜுஹைர் தக்க தருணத்தில் தம் சபதத்தை நிறைவேற்றி அந்த ஆலயத்தை அசுத்தப்படுத்தி விட்டு மறைந்துவிட்டார்.

**கேள்வி: இச்செய்தி அறிந்த அப்ரஹா என்ன செய்தான்?**

பதில் : தாங்க முடியாத அளவுக்கு ஆவேசமும், ஆத்திரமும் அடைந்து திருமக்காவிலுள்ள கஃபாவை இடித்தெறிந்தால் தான் இவ்வவமதிப்புக்குத் தக்க பரிகாரம் ஆகும் என முடிவு கட்டினான். மேலும் கஃபா இருக்கும் வரையில் தன் தேவாலயத்திற்கு எந்த மதிப்பும் இராது என்பதை உணர்ந்து, அபிஸீனிய மன்னனுக்குச் செய்தி

தெரிவித்து, மாபெரும் படையோடு மக்காவை நோக்கிப் புறப்பட்டான்.

**கேள்வி: மக்காவிற்குப் படைகளை கூட்டிச் செல்ல வழிகாட்டியாக இருந்தது யார்?**

பதில் : தகீபு கோத்திரத்தின் தலைவன் அபுரிகால் என்பவனைப் படைக்கு வழிகாட்டுவதற்காக நியமித்தான். இவன் வழியிலேயே இறந்து போனான். இறந்த இடத்திலேயே அடக்கம் செய்தார்கள். எமன் தேசத்திலிருந்து வரும் ஹாஜிகள் இவன் சமாதியைப் பார்த்தவுடன் கல்லால் அடித்து விட்டுத்தான் வருவார்கள்.

**கேள்வி: அப்ரஹாவின் படையெடுப்பைப் பார்த்த அரபு கோத்திரத்தார் என்ன செய்தார்கள்?**

பதில் : புனித கஃபாவை இடிப்பதற்காக அப்ரஹா படையெடுத்து வருவதை அறிந்த அரபு கோத்திரத்தார் பலர் அப்ரஹாவின் படைகளை வழிமறித்து எதிர்த்தனர். முறைப்படி சண்டைப் பயிற்சி பெறாத அரபு கோத்திரத்தார் தோல்வியடைந்து சிதறடிக்கப்பட்டார்கள். ஆனால் தாயிப் நகரமக்கள், அப்ரஹாவுடன் ஒத்துழைத்து அவனுக்கு வழி காட்டுவதற்காக ஒரு நபரையும் அனுப்பி வைத்தார்கள்.

**கேள்வி: மக்கத்து மக்களின் மனநிலையை அறிய யாரை வேவு பார்க்க அனுப்பி வைத்தான்?**

பதில் : மக்கத்து மக்களின் மனநிலையை அறிய அல் அஸ்வதுப்னு மக்ஸூத் என்ற அபிசீனியரின் தலைமையில் சிலரை வேவு பார்க்க அனுப்பி வைத்தான்.

**கேள்வி: வேவு பார்க்கச் சென்றவர்கள் என்ன செய்தார்கள்?**

பதில் : மக்காவிற்கு அருகாமையில் மேய்ந்து கொண்டிருந்த அப்துல் முத்தலிபின் ஒட்டகங்களையும்,

மற்றவர்களின் கால்நடைகளையும் ஓட்டிக் கொண்டு சென்று விட்டனர்.

**கேள்வி: அப்ரஹாவிற்கு கஃபாவைப் பற்றி இடையில் தோன்றிய நல்லெண்ணம் யாது?**

பதில் : மக்கத்து மக்கள் யாராவது வந்து தன்னிடத்தில் மிகத் தயவோடு கேட்டுக் கொண்டால் மக்காவை நாசப் படுத்தாமல் சென்று விடலாம் என்று எண்ணிய அப்ரஹா ஹுனாதத்துல் ஹிம்யரீ என்பவரைத் திருமக்கா விற்கு தூது அனுப்பினான்.

தூதின் விபரம் : 1. அரசப் பிரதிநிதியான அப்ரஹா தங்களோடு சண்டைக்கு வரவில்லை. கஃபாவை இடிப் பதற்காகத்தான் வந்திருப்பதாகவும் அவர்களின் தலைவர் எவரையேனும் பேச்சு வார்த்தைகளுக்காகத் தன்னிடம் அனுப்பும் படியும் தூதனுப்பினான். இந்தச் செய்தியானது, அப்போது கஃபாவின் முத்தவல்லியாக இருந்த அப்துல் முத்தலிபுக்கும், அவரைச் சார்ந்தோருக்கும் தெரிவிக்கப் பட்டது.

**கேள்வி: செய்தி அறிந்த அப்துல் முத்தலிபு எடுத்த நடவடிக்கை என்ன?**

பதில் : அப்துல் முத்தலிபு ஹாஷிம் குடும்பத்தார் சிலரைத் தம்மோடு அழைத்துக் கொண்டு அப்ரஹாவைப் பார்க்கச் சென்றார்.

## அப்ரஹாவின் ஏமாற்றம்

கஃபாவை இடிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்வதற்காகத் தான் அப்துல் முத்தலிபும் அவருடைய ஆட்களும் வந்திருக்கின்றார்கள் என்று எண்ணி பெருமகிழ்ச்சி அடைந்து அப்துல் முத்தலிபையும், அவரோடு வந்திருப்பவர் களையும், அப்ரஹா மரியாதையாக வரவேற்றுத் தன் அரியாசனத்தை விட்டு இறங்கித் தரையில் விரிக்கப்பட்டிருந்த விரிப்பில் அப்துல் முத்தலிப்புக்கு அருகில் அமர்ந்து சிரித்த

முகத்தோடு, ''அப்துல் முத்தலிபு அவர்களே! தாங்கள் இங்கு வந்த நோக்கம் என்ன?'' என்று கேட்டான்.

அதற்கு அப்துல் முத்தலிபு: ''அரசே! என்னுடைய ஒட்டகங்கள் காட்டில் மேய்ந்து கொண்டிருந்தன. அவற்றைத் தங்களுடைய ஆட்கள் ஓட்டிக் கொண்டு வந்து விட்டனர். அவற்றை எங்களிடத்தில் ஒப்படைத்து விட வேண்டும் என்று சொல்லித்தாங்கள் அவர்களுக்குக் கட்டளை இடவேண்டும் என்று சொல்லத்தான் நான் தங்களைப் பார்க்க வந்தேன்'' என்றார்.

இதைக் கேட்ட அப்ரஹா ஆச்சரியத்துடன் '' தாங்கள் கஃபாவைப் பற்றி எந்தப் பேச்சுமே பேசவில்லையே ஏன்? அதனை இடிப்பதற்குத் தானே நான் வந்திருக்கின்றேன். பூர்வீக காலமாகவே இதில் தானே உங்களது பெருமையும், சிறப்பும் அடங்கியுள்ளது. இதன் காரணமாகத்தானே உங்களுக்குப் பாதுகாவல் இருந்து வருகின்றது. அதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் கேட்கின்றீர்களே?'' என்றான்.

அதற்கு அப்துல் முத்தலிபு அவர்கள்: ''ஒட்டகைக்கு நான் சொந்தக்காரன். கஃபாவிற்கு நான் சொந்தக்காரன் அல்லன். அதற்குரியவன் வேறு. இதற்கு முன்பு ஸைபுன்னு தீயத்னைன், இஸ்ரா போன்றாரை விட்டும் அவன் தான் காப்பாற்றினான்! இப்போதும் அவனே அதைக் காப்பாற்றிக் கொள்வான்!'' என்றார்கள்.

அப்ரஹா இதைக் கேட்டு கடுங்கோபங் கொண்டு அதிகாரிகளைப் பார்த்து, ''அப்துல் முத்தலிபின் ஒட்டகங்களைத் திருப்பிக் கொடுத்து விடுங்கள். என்னைத் தவிர இந்த கஃபாவை யார் காப்பாற்றுவார்? என்பதை அவர் பார்க்கட்டும்'' என்றான்.

அப்துல் முத்தலிபு தம் ஒட்டகங்களை ஓட்டிக் கொண்டு மக்காவிற்கு வந்து விட்டார்.

**கேள்வி: அப்துல் முத்தலிபின் பிரார்த்தனை யாது?**

பதில் : தம் ஒட்டகங்களை ஓட்டிக் கொண்டு மக்காவிற்கு வந்த அப்துல் முத்தலிபு அப்ரஹாவிடம் நடந்த உரையாடலைப் பற்றிச் சொல்லி விட்டு "உங்களுடைய பொருள்களையும், குடும்பத்தார்களையும் அப்புறப்படுத்தி, மக்காவிற்கு வெளியில் சென்று மலைகளிலும் கணவாய்களிலும் மறைந்து கொள்ளுங்கள்" என்று கட்டளையிட்டார்.

பின்பு நேராக கஃபாவிற்கு வந்து அதன் வளையத்தைப் பிடித்துக் கொண்டு இறைவனிடம் பிரார்த்தித்தார். அப்பொழுது நூதனமான பல பறவைகள் வானில் பறந்தன. இதற்கு முன்பு இவர் அது மாதிரிப் பறவைகளைப் பார்த்ததே இல்லை.

"இந்தப் பறவைகள் நஜ்தையோ, திஹாமாவையோ சேர்ந்தவையாகத் தெரியவில்லை. இறைவனின் மீது ஆணையாகச் சொல்கிறேன். இந்தப் பறவைகளுக்கு ஏதோ வேலை இருக்கின்றது!" என்று சொல்லிவிட்டுத் தம் சகாக்களை அழைத்துக் கொண்டு மலைமீது ஏறி இருந்து கொண்டு, அப்ரஹாவின் படை வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

அப்துல் முத்தலிபின் பிரார்த்தனையை ஏற்றுக் கொண்ட இறைவன் சிறிது நேரத்திற்குள்ளாக, கரியமேனியும், மஞ்சள்நிற மூக்கும் உள்ள பறவைக் கூட்டங்களை அனுப்பினான். இவற்றின் கழுத்துக்கள் பச்சை நிறத்தில் இருந்தன. இவை ஒவ்வொன்றின் வாயில் ஒரு கல்லும் இரு கால்களிலும் இரண்டு கற்களும் இருந்தன. இந்தக் கற்கள் கடலையைவிடச் சிறியவைகளாகவும், பருப்பபைவிடச் சற்றுப் பெரியவையாகவும் இருந்தன.

**கேள்வி: அப்ரஹாவின் நிலை என்ன ஆயிற்று?**

பதில் : திருமக்காவினுள் நுழைவதற்கு அப்ரஹா தயாராகி முதன் முதலில் தன்னுடைய படைகளில் இருந்த

யானைகளை முன்னே செல்லக் கட்டளையிட்டான். இந்த யானைகளில் தலைமையானதும், பல சண்டைகளுக்குச் சென்று வந்ததுமான யானையின் பெயர் மஹ்மூது என்பதாகும்.

இந்த யானையை மக்காவின் திசையை நோக்கி ஓட்டும் போதெல்லாம் அது வேறு திசையிலே செல்லும். மீண்டும் இதை மக்காவை நோக்கித் திருப்பிவிட்டால் அது ஹரம் எல்லையில் படுத்துக் கொள்ளும். இந்த யானையைப் பின்பற்றி மற்ற யானைகளும் அப்படியே செய்தன. இந் நிலையில் இறைவனால் அனுப்பப்பட்ட அந்தப் பறவைக் கூட்டங்கள் தங்கள் வாயிலும், கால்கள் இரண்டிலும் வைத்திருந்த கற்களை அப்படை வீரர்களின் மீது வீசின.

இந்தக் கற்கள் இரும்புக் கவசங்களையும் துளைத்துக் கொண்டு உடம்பில் பாயும் சக்தியை பெற்றவையாக இருந்தன. பறவைகளின் கல்லடி தாங்க முடியாமல், படைகள் நாலாபக்கமும் சிதறி ஓடின. பெரும்பாலான படை வீரர்கள் அடிதாங்க முடியாமல் மடிந்தனர். உயிர் தப்பியவர்களும், அப்ரஹாவும் எமன் நாட்டின் திசை நோக்கிச் சென்றனர்.

ஆனால் பறவைகள் அப்ரஹாவையும் விட்டு வைக்கவில்லை. அவனுக்கு பலத்த அடி கொடுத்ததில் அவனது உடம்பெல்லாம் இனங் காணமுடியாத கடுமையான நோய் ஏற்பட்டு, விரல்களெல்லாம் துண்டு துண்டாக விழுந்து விட்டன. சிறகு ஒடிந்த பறவையைப் போல் தன்னுடைய நாட்டிற்குச் சென்று, சில நாட்களில் மரணமடைந்தான்.

மலைமீது இருந்து கொண்டு, படைவரும் திசையை எதிர்பார்த்த வண்ணமிருந்த அப்துல் முத்தலிபு, "படைகள் ஏன் வரவில்லை" என்று அறிவதற்காகத் தாமே அப்ரஹாவின் படைவீரர்கள் இருந்த இடத்திற்குப் போனார். அங்கு முஸ்தலிபாவிற்குப் பக்கத்தில் ஹரம் ஷரீபின் எல்லையோரத்தில் அவர்கள் பெரும்பாலோர் இறந்து கிடப்பதைப் பார்த்தார்.

பின்னர் அந்த அப்ரஹாவின் படை வீரர்கள் விட்டுச் சென்ற, முக்கிய தளவாடங்களையும் தங்கம், வெள்ளி சாமான்களையும் எடுத்துக் கொண்டு மறைந்திருந்த மக்கத்து மக்களுக்குச் செய்தியைச் சொல்லி அவர்களை ஊருக்குள் அழைத்து வந்தார்.

அன்புள்ள வாசகப் பெருமக்களே! கஃபாவை இடிக்க வேண்டும் என்ற நோக்கோடு பெரும் படைகளை திரட்டிக் கொண்டு வந்தான் அப்ரஹா. அவனுடைய எண்ணம் மட்டும் நிறைவேறி இருந்தால், அன்றே மக்காவில் அபிசீனிய ஆட்சி நுழைந்திருக்கும். அரபு நாட்டு மக்கள் அபிசீனிய அடிமையாக வாழ்ந்து, தம் அரசியல் சுதந்திரத்தையும் இழந்திருப்பார்கள். எனவே தாங்கள் காப்பாற்றப்பட்ட இந்த நிகழ்ச்சியை அரபு மக்கள் பெரிதென மதித்து, அரபி வருடத்தை கணித்தார்கள். இந்த சம்பவம் பற்றி அருள் மறையாம் திருமறையில் ஸூரத்துல்பீல் என்ற அத்தியாயத்திலும் குறிப்பிடப் பட்டுள்ளது.

# 3. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பிறப்பு

**கேள்வி: நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எப்பொழுது எந்த நாட்டில் எங்கு பிறந்தார்கள்?**

பதில் : நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அரபு நாட்டில் மக்காவில் யானைச் சண்டை நடந்த வருடம் ரபீஉல் அவ்வல் மாதம் 12ஆம் தேதி அதாவது கி.பி. 570 வருடம் ஆகஸ்ட் மாதம் திங்கட்கிழமை (20ஆம் தேதி) அதிகாலையில் பிறந்தார்கள்.

**கேள்வி: நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவிலே எந்த இடத்தில் பிறந்தார்கள்?**

பதில் : நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஸூகுல்லைல் (மாலைக் கடைவீதி) என்ற கடைத் தெருவில் (பிற்காலத்தில்

ஹஜ்ஜாஜ்ப்னு யூசுபின் சகோதரர்) முஹம்மதிப்னு யூசுப் வீடு என்ற யாவராலும் அழைக்கப்பட்டு வந்த வீட்டில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்தார்கள். இந்த வீடு நபிகள் பெருமானாரின் பாட்டனார் அப்துல் முத்தலிபுக்கு உரிமையான வீடாக இருந்தது, அப்புறம் அபூதாலிப் அவர்களும், அவர்களுக்குப் பின்னர் அவருடைய மகன் அகீலும் (உகைலும்) சொந்தமாக்கிக் கொண்டார்கள். இந்த வீட்டை அப்பாஸிய கலீபாக்களான ஹாதி, ஹாரூன் ரஷீத் ஆகியோரின் தாயாரான கைஜ்ரான் என்பவர் அதிகப் பணம் கொடுத்து வாங்கி, மஸ்ஜிதாக மாற்றினார்.

**கேள்வி: நபிகள் நாயகம் (ஸல்) பிறப்பு எவ்வாறு அமைந்திருந்தது?**

பதில் : சீறாப்புறாணத்திலே உமறுப் புலவர் அவர்கள் இது பற்றித் தருகின்ற பாடல்களைத் தருகின்றோம்.

1. கோதறப் பழுத்து மதுரமே கனிந்த
   கொவ்வைவா யரம்பையர் வாழ்த்தித்
   தீதற நெருங்கி யேவல்செய் திருப்பச்
   செழுங்கம லாசனத் திருந்த
   மாதருக் கரசி யாமினா வுதர
   மனையிடத் திருந்துமா நிலத்தி
   லாதரம் பெருக நல்வழிப் பொருளா
   யஹ்மது தோன்றின ரன்றே.

(சிறிதும் சக்கையில்லாத தேன் சிந்துமளவு கனிந்துள்ள கொவ்வைப் பழம் போன்ற சிவந்த உதடுகளை உடைய இளம் பெண்கள் (ஹூருல்ஈன்கள்), தாமரை மலர் போன்ற அழகிய இருக்கையில் அமர்ந்திருந்த அன்னை ஆமினா அவர் களுக்குப் பேறு காலத்திற்கான பணிகளைச் செவ்வனே செய்ய இவ்வுலக மெங்கிலும் அன்பு பொங்கிட நல்வழிப் பொருளாய் ஆமினா அவர்கள் மணி வயிற்றிலிருந்து அஹ்மது நபியவர்கள் பிறந்தார்கள்)

2. கிடந்தொளி பரப்பி வாசங்கொப் பளித்து
கிளர்கிபு லாவை முன்னோக்கி
யிடங்கொளந் தரநேர் சிரசினை யுயர்த்தி
யெழில்பெற ஸுஜூது செய் திணைத்தாட்
டிடம்பெற மடித்துக் குறியிடக் கையாற்
சேர்த்தொளிர் வலக்கைக்கான் மேல்வைத்
துடனணி கலிமா விரலினை யுயர்த்தி
யுதித்தனர் முஹம்மது நபியே.

(அன்னை ஆமினாவின் திருவயிற்றிலிருந்து வெளிப் பட்டபோது, அவ்விடமெங்கும் ஒளிபரப்பி, நறுமணம் கமழ்ந்தவர்களாகக் கிப்லாவை முன்னோக்கி, நேர்சிரசை உயர்த்தி அழகாக ஸுஜூது செய்து கால்கள் இரண்டையும் உறுதியாக மடித்து மறைவிடத்தை இடது கையால் மறைத்து, ஒளி மிக்க வலது கையினைக் கால்மேல் வைத்து கலிமா விரலினை உயர்த்திய நிலையில் முஹம்மது நபியவர்கள் பிறந்தார்கள்.)

3. சிரசினி னெய்தோய்த் திருவிழிக் கருமை
சிறந்திடக் கொப்புழுங் கொயலாய்
மருவுசுன் னத்துஞ் செய்யலாய்த் துடக்கின்
வருங்குறி யொன்றுமில் லாதாய்ப்
பரவுகஸ் தூரி மனையெலா நிறைந்த
பரிமளங் கமகம கமெனப்
பெருகிய வொளிவு வானமட் டுலவப்
பிறந்தனர் முஹம்மது நபியே.

(தலையில் நறு நெய்யினால் தேய்க்கப் பெற்று விழிகளில் அழகிய மையூட்டப்பெற்று, கொப்பூழ் அறுத்தும், சுன்னா செய்யப்பட்டவர்களாகவும், குழந்தை பெற்றவர்களுக் குண்டாகும் பெருந்துடக்கிற்கு (தீட்டு) உரிய அசுத்தங்கள் ஏதும் காணப்படாத சூழ்நிலையில் பெருகிய கஸ்தூரி மணம் வீடெலாம் நிரம்ப வானளவும் பரவக்கூடிய ஒளி பொருந்தி யவர் களாக முஹம்மது நபியவர்கள் பிறந்தார்கள்.)

4. செம்மையங் கோட்டுக் கடகரிக் கலகந்
தீர்ந்தபி னைம்பதா நாளி
லம்மதி மாசத் தொகையினில் ரபீவு
லவ்வலிற் பனிரண்டாந் தேதி
யெம்மனைக் கும்பே றெனவரும் பொருளா
யிசைத்திடுந் திங்களி ராவின்
மும்மையென் றுரைக்கும் புவனமும் புரக்க
முஹம்மது நபிபிறந் தனரே.

(பெரிய வளைந்த தந்தங்களை உடைய வலிமைமிக்க 'யானைப்போர்' நடந்து முடிந்த ஐம்பதாம் நாளில் ரபீஉல் அவ்வல் மாதம் பன்னிரண்டாம் தேதியன்று உலகெங்கும் திங்களின் ஒளி நிரம்பித் திகழும் திங்கட்கிழமை இரவில் மூன்றென்று சொல்லப்படும் உலகம் முழுமையும் இரட்சித்து அருள்வதற்காக முஹம்மது நபியவர்கள் பிறந்தார்கள்.)

5. நெறிநிலை திரியா மருண்மத மிகுந்து
நெடுநில மெங்கணும் பரந்து
துறவறந் தவறி யில்லற மடிந்து
சுடரிலா மனையது போலக்
குறைபடுங் கால மிருளெனுங் குபிரின்
குலமறுத் தறநெறி விளக்க
மறுவிலா தெழுந்த முழுமதி போல
முஹம்மது நபிபிறந் தனரே.

6. பானுவின் கதிரா லிடருறுங் காலம்
படர்தரு தருநிழ லெனலா
யீனமும் கொலையும் விளைத்திடும் பலநோ
யிடர்தவிர்த் திடுமரு மருந்தாய்த்
தீனெனும் பயிர்க்கோர் செழுமழை யெனலாய்
குறைஷியிற் றிலதமே யெனலாய்
மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
முஹம்மது நபிபிறந் தனரே

**பிறப்பின் சிறப்பு**

(பரந்த பூமியானது சன்மார்க்க நெறியில் மாறுபட்டு அஞ்ஞானம் என்னும் இருளானது எல்லா இடங்களிலும் பரவி, துறவறம் தவறி இல்லறம் அழிந்து வெளிச்சம் தரும் விளக்கு இல்லாத வீட்டைப் போன்று இருக்கும் காலத்தில் இருள் என்று சொல்லப்பட்ட குபிரின் கூட்டத்தை அழித்து, தவறிப்போன இரண்டுவித அறங்களின் நெறியை விளங்கச் செய்யும்படி உதயமான களங்கமில்லாத பூரண சந்திரனைப் போலவும், இன்னும் உயிரினங்கள் சூரியனின் கொடிய வெப்பத்தால் அவதிப்படும் காலத்தில் அவர்களுக்காக ஆதரவாய் படர்ந்து நிழல் தரும் மரத்தைப் போலவும் இழிவையும் கொலையையும் விளைவிக்கக் கூடிய பாவ மென்னும் கொடிய நோய்க்கு ஓர் அருமையான மருந்தைப் போலவும் தீன் நன்னெறி என்று சொல்லப்படும் பயிருக்கு நல்ல செழுமையை உண்டாக்கக் கூடிய மழையைப் போலவும் குறைஷிக் குலத்திற்கே அழகிய திலகம் போலவும், வழி தவறிப்போன மானிட வார்க்கத்திற்கு நல்லவழி எது? தீய வழி எது என்று பகுத்துக் காட்டுகின்ற மாசு இல்லாத மணி விளக்கைப் போலவும் முஹம்மது முஸ்தபா (ஸல்) அவர்கள் இவ்வுலகத்தில் பிறந்தார்கள்.)

7. செங்கதிர் பரப்பி யுலகெல்லாம் விளக்கித்
திரிதின கரனும்வெண் ணமுதந்
தங்கிய கிரணச் சசியுமந் தரத்திற்
றவழ்தரு முடுக்குல மனைத்தும்
பொங்கொளி யெவையுஞ் சுவனநா டனைத்தும்
பூதலம் விசும்புமற் றனவு
மிங்கெழின் முஹம்ம தொளிவினி லென்றா
லிவர்க்கெவை யுவமைசொல் லுவதே.

(செங்கதிர்களால் உலகெல்லாம் ஒளிபரப்பும் கதிரவனும், சந்திரனும் மற்றும் வானில் காட்சி தருகின்ற நட்சத்திரங்கள் அனைத்தும் சுவர்க்க லோகமும் இவ்வுலகமும்,

ஆகாயம் அனைத்தும் முஹம்மது நபியினுடைய ஒளியில் இருந்துதான் ஒளி பெற்றுத் திகழ்கின்றன என்றால் இவர் களுக்கு வேறு எதை உவமை கூற முடியும்?)

*(நபியவதாரப் படலம் பாடல்கள் 86-89,91-93)*

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு தாயாருக்கு உதவி செய்த பெண்மணி யார்?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் சுவர்க்கவாதிகள் என்று அறிவித்த பத்துப் பேர்களில் ஒருவரான ஹலரத் அப்துர் ரஹ்மானிப்னு அவ்ஃப் (ரலி) அவர்களின் அருமைத் தாயார்தான் நபி (ஸல்) அவர்கள் பிறப்பதற்கு ஆமினா நாச்சியாருக்கு உதவி செய்தார்கள்.

**கேள்வி: பெருமானார் தாய் வயிற்றிலிருந்து வரும்பொழுது (பிறக்கும் பொழுது) எந்தக் கோலத்தில் வந்தார்கள்?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் தாய் வயிற்றிலிருந்து இப்புவிக்கு வந்த பொழுது விண்ணை நோக்கியவர்களாக தரையில் தங்களது கையை வைத்துப் பிறந்தார்கள். மேலும் அவர்கள் தாயார் கர்ப்பவதியாக இருக்கும்பொழுது ஏனைய கர்ப்பிணிகள் பிரசவ சமயத்தில் அடையும் வேதனை களையோ, சிரமங்களையோ தாம் அடைந்ததில்லை என்று ஆமினா அம்மாள் அவர்கள் கூறுகிறார்கள்.

*(ஆதாரம்: தாரீகுல் ஹம்ஸ் அரபி)*

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் பிறந்த செய்தியை உறவினர்களுக்கும் மக்கத்து மக்களுக்கும் தெரிவித்தது யார்?**

பதில் : பெருமானாரின் சிறிய தந்தையான அபூ லஹபின் அடிமைப் பெண்ணான துவைபா என்பவரால் முதன் முதலாக இச்செய்தி நபி (ஸல்) அவர்களின் பாட்டனாரான அப்துல் முத்தலிபுக்குத் தெரிவிக்கப்பட்டது.

**கேள்வி: அப்பொழுது அப்துல் முத்தலிபு அவர்கள் எங்கிருந்தார்கள்?**

பதில் : அப்துல் முத்தலிபு கஃபாவை தவாபு செய்து கொண்டிருந்தார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) பிறந்த செய்தியைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த அப்துல் முத்தலிபு என்ன செய்தார்?**

பதில் : தம் மகன் அப்துல்லாஹ்விற்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது என்ற செய்தியைக் கேட்டவுடன் அப்துல் முத்தலிபு நேரடியாக குழந்தை இருக்கும் இடத்திற்குச் சென்றார்கள். அவர்களைக் கண்டதும் ஆமினா அவர்கள் அப்துல் முத்தலிபைப் பார்த்து ''அபுல் ஹாரிதே தங்கள் மகனுக்கு அழகு மிகுந்ததும் அதிசயப்படக்கூடியதுமான ஆண் குழந்தை பிறந்திருக்கிறது'' என்றார்கள். இதைக் கேட்டவுடன் ஆமினாவின் வார்த்தையைப் புரிந்து கொள்ள முடியாமல் அப்துல் முத்தலிபு அவர்கள் திகைத்துப் போய் ''ஏன் குழந்தை முழு உறுப்புகளோடு இல்லையா?(அங்கங்களோடு இல்லையா?)'' என்று கேட்டார். அதற்கு ''பூரணமான குழந்தைதான்'' என்று சொன்னார்கள். இருந்தபோதிலும் மற்றக் குழந்தைகள் பிறந்ததைப் போல் அல்லாமல் ஸுஜூது (வணக்கம்) செய்தவராகவும், தம் நெற்றியைத் தரையில் வைத்தவராகப் பிறந்து பின்பு தம்தலையையும் விரல்கள் இரண்டையும் வானத்தின் பால் உயர்த்தியவாறும் பிறந்தார் என்ற செய்தியை நேருக்கு நேராக சொல்லிய வண்ணம் குழந்தையை எடுத்து பாட்டனாரான அப்துல்முத்தலிபு அவர்கள் கையில் கொடுத்தார்.

**கேள்வி: குழந்தையைத் தம் கைகளில் வாங்கிய பாட்டனார் என்ன செய்தார்?**

பதில் : அப்துல் முத்தலிபிடம் குழந்தையை ஆமினா அம்மாள் அவர்கள் கொடுத்ததும் தம் இரு கரங்களாலும் மகிழ்வோடு ஏந்தி அடங்காத மகிழ்ச்சியுடையவராக இரு

கன்னங்களிலும் முத்தம் கொடுத்தார். பின்பு அங்கிருந்து குழந்தையை தூக்கிக் கொண்டு கஃபாவை "தவாபு" செய்து இறைவனுக்கு நன்றி செலுத்தினார். குழந்தைக்காக இறைவனிடத்தில் பிரார்த்தனை செய்தார்.

**கேள்வி: இறைவனிடத்தில் எவ்வாறு பிரார்த்தனை செய்தார்?**

பதில் : கருணையுள்ள இறைவனே! இக்குழந்தைக்கு நீதான் முழுப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்று மனமுருகப் பிரார்த்தித்தார்.

## உலகில் நடந்த அற்புதங்கள்

**கேள்வி: நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்த அன்று உலகில் நடந்த அற்புதங்கள் யாவை?**

பதில் : நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்த வருஷம் குறைஷி மக்களுக்கு மாபெரும் வெற்றிகிடைத்த வருஷமாக இருந்தது. மேலும் நல்ல செழிப்பாகவும் இருந்தது. இதற்கு முன்னர் குறைஷியர் பஞ்சத்தால் கஷ்டப்பட்டனர். நபி (ஸல்) பிறந்த வருஷத்தில் நல்ல மழை பெய்ததால், மரங்கள் தளிர்த்து பூத்துக் கனிகளை அதிகமாகத் தந்தன.

ஈரான் சக்கரவர்த்தியான கிஸ்ராவின் மாளிகை மாபெரும் அதிர்ச்சிக்குள்ளாகி அதிலுள்ள பதினான்கு ஸ்தூபிகளும் விழுந்துவிட்டன. இதற்குப் பின்பு நடந்த நிகழ்ச்சிகளை கவனிக்கும் போது இன்னும் பதினான்கு பேர்கள் தான் அந்த நாட்டு அரியணையில் அமர்ந்து அரசாட்சி செலுத்துவார்கள். அதற்குப் பின்பு அந்த அரசாங்கமே இல்லாமல் போய்விடும் என்பதற்கு முன்னறி விப்பாக இருந்தது என்று சொல்லப்படு கின்றது. நபி (ஸல்) அவர்கள் பிறந்ததிலிருந்து நான்கு ஆண்டுகளில் பத்துப் பேர் ஒருவர் பின் ஒருவராக மாறி மாறி பட்டத்துக்கு வந்தார்கள்.

இதற்கப்புறம் ஹலரத் உதுமான் (ரலி) அவர்கள் கலீபாவாக பதவி வகிக்கும் காலம் வரையில் நால்வர் பட்டத்துக்கு வந்தார்கள். பின்பு அந்த நாடு முஸ்லிம் அரசாங்கத்தின் ஒரு பாகமாக மாறி மாமன்னன் கிஸ்ராவின் அரசாங்கம் நிரந்தரமாக மறைந்துவிட்டது.

பலஸ்தீனத்திலுள்ள தப்ரியா நகரிலுள்ள ஏரியில் தண்ணீர் வற்றி வறண்டு போய்விட்டது. இப்பிரதேச மக்களுக்கு பெரும் போர் ஏற்பட்டு கஷ்டம் வரும் என்பதற்கு இது முன்னறிவிப்பாக இருந்தது. அதேபோல பின்னர் ஹலரத் உமர் பாருக் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் போர் ஏற்பட்டு முஸ்லிம்கள் வெற்றி பெற்றார்கள்.

பாரசீகக்காரர்கள், பெரும்பாலும் நெருப்பை வணங்கக் கூடியவர்களாக இருந்தார்கள். இவர்கள் வணங்கி வந்த பெரும் நெருப்புக்குண்டம் அணைந்துவிட்டது. இது ஆயிரம் ஆண்டுகளாக அவர்களால் பாதுகாக்கப்பட்ட நெருப்புக் குண்டமாகும். இந்நெருப்பு அணைந்ததானது, எதிர்காலத்தில் இவர்களின் மதத்திற்கு எந்தவித செல்வாக்கும் இல்லாமல் போகும் என்பதற்கு முன் அடையாளமாக இருந்தது.

வானில் எரிகொள்ளிகள் அதிகமாயின. இதற்கு முன்னரும் இருந்தன. ஆனால் அவ்வளவு அதிகமாக இல்லை. ஏனென்றால் ஷைத்தான்கள் வானத்திற்குச் செல்வது தடுக்கப் பட்டிருப்பதாகவும், ஷைத்தான்கள் அங்கு செல்லும் போதெல்லாம் மலக்குகள் அவர்களை எரிகொள்ளிகளால் துரத்தியதாகவும் சொல்லப்படுகிறது. ஏனென்றால் இவ் வுலகத்தில் நடக்கப்போகும் செய்திகளை திருட்டுத் தனமாக கேட்டு வந்து குறிசொல்பவர்கள் கோடாங்கி காரர்களிடமும் அச்செய்திகளை கூட்டிக் குறைத்துச் சொல்லி பாமர மக்களை வழி தவறச் செய்து கொண்டிருந்தனர்.

# 4. பெருமானாருக்குப் பெயர் சூட்டுதல்

**கேள்வி: அரேபியரின் வழக்கம் என்ன?**

பதில் : அரபு நாட்டிலே அரேபியர்களுக்கு குழந்தை பிறந்தவுடன் ஏழாம் நாள் ஒரு கிடாய் அறுத்து அகீக்கா கொடுப்பது வழக்கமாக இருந்தது. நபி (ஸல்) அவர்களுக்கு அவர்களின் அருமை பாட்டனார் ஒரு நல்ல கொழுத்த கிடாய் அறுத்து, அகீக்கா கொடுத்ததோடல்லாமல், மக்காவிலுள்ள மக்களுக்கும் தம் உறவினர்கள் அனைவருக்கும் மாபெரும் விருந்து ஒன்றினை நடத்தினார்.

## விருந்து

பேரக் குழந்தைக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் விருந்தின் காரணமாக மக்கா நகரில் மகிழ்ச்சியும் ஆனந்த களிப்பாட்டமும் மிகுந்திருந்தன. மகிழ்ச்சிப் பெருக்கினால் ஆண்களும், பெண்களும் ஒருவர் மற்றொருவர் கையைக் கோர்த்து ஆனந்த நடனமாடினார்கள். இசை முழக்கம் அதிகமாக இருந்தது. விருந்து நடக்கும் நேரம் வந்துவிட்டது. அப்துல் முத்தலிபின் உறவினர்கள், செல்வந்தர்கள், அவரவர் ஆட்களோடு கூட்டங் கூட்டமாக வந்தார்கள். இதைத் தவிர்த்து விருந்து நடக்கும் மாளிகையில் மக்கள் கூட்டம் வரிசை வரிசையாக அமர்ந்திருந்தார்கள். இன்னும் மக்காவிலிருக்கும் குறைஷித் தலைவர்களெல்லாம் ஒரு பக்கமாகவும், வர்த்தகப் பெருமக்களெல்லாம் மற்றொரு பக்கமாகவும், கற்ற பெருமக்கள், குருமார்கள், படைத் தளபதிகள் ஆகியோர் இன்னொரு பக்கமாகவும் தோரணம் தொடுத்தாற்போன்று வரிசையாக அமர்ந்திருந்த காட்சி அழகாக இருந்தது. இக்கூட்டத்தினருக்கு மத்தியில்அறுசுவை உணவு கொண்டு வந்து வைக்கப்பட்டது. அவர்கள் அனைவரும் மகிழ்ச்சியோடு அதன் சுவையையும், உணவு

பரிமாறுகின்ற சிறப்பையும் பற்றி ஒருவர் மற்றவரோடு உரையாடிக் கொண்டே வயிறு நிறைய உணவு உண் கிறார்கள். விருந்து அனைவரும் மனதிருப்தி அடையும் விதத்தில் நல்லபடியாக நடந்து முடிந்தது.

## பெயர் சூட்டல்

விருந்துக்கு வந்த பெருமக்கள் அனைவரும் உணவு அருந்திவிட்டு மகிழ்ச்சியாக அமர்ந்திருந்தார்கள். அப்போது அங்கே தேனினும் மேலான சுவையுடைய நல்ல காட்சியைக் காணுகின்றார்கள். என்னவென்றால் கருமையே உருவான அடிமைப் பெண்ணொருத்தி பூரண சந்திரனைப் போன்ற பிரகாசத்தையுடையதும், அழகிற்கு அதற்கு நிகர் யாருமில்லை என்று தோன்றுமளவிற்கு பச்சிளங் குழந்தையை தன் இரு கரங்களில் ஏந்திய வண்ணமாய் வந்தாள். அவளுக்கு அருகாமையில் அப்துல் முத்தலிபும் வந்தார். சபையில் அனைவருக்கும் மத்தியில் வந்தவுடன் அன்புக்குரிய விருந்தினர்களே, இவள் கையில் இருக்கும் பிரகாசம் யாரென்று தெரியுமா? என் செல்வ மகன் அப்துல்லாஹ் விற்குப் பிறந்த ஆண் குழந்தை; என் அருமைப் பேரக் குழந்தை என்றார். இக்குழந்தைக்கு ''முஹம்மது'' என்று இச்சபையோருக்கு முன்பாகப் பெயர் சூட்டுகிறேன் என்று உடலிலிருந்தும் உள்ளத்திலிருந்தும் பீறிட்டெழுந்த உணர்ச்சிப் பெருக்கால் சொன்னார்.

அடிக்கடி தாமரை மலர்போன்று காட்சியளிக்கும் தம் பேரக்குழந்தையின் கன்னத்தைத் தொட்டுத் தொட்டு முத்தம் கொடுத்தார்.

**கேள்வி: முஹம்மது என்றால் பொருள் என்ன?**

பதில் : முஹம்மது என்றால் புகழ்ச்சிக்குரியவர். புகழத் தகுதியினையுடையவர் என்பது பொருள்.

**கேள்வி: முஹம்மது என்று பெயர் சூட்டக் காரணம் என்ன?**

பதில் : அன்னை ஆமினா கர்ப்பவதியாக இருக்கும் பொழுது கனவில் வானவர்கள் (மலக்குகள்) வந்து "உமக்கு அழகுமிகுந்த ஆண் குழந்தை பிறக்கும்; அதற்கு அஹ்மது என்றும், முஹம்மது என்றும் பெயர் சூட்டுங்கள்" என்று அறிவித்ததாகவும், அந்தக் கனவை ஆமினாவின் மூலமாக அப்துல் முத்தலிபு அவர்கள் அறிந்து அதன்படியே குழந்தைக்கு முஹம்மது என்ற பெயரைச் சூட்டினார்கள். அப்பொழுது அங்கிருந்த குறைஷித் தலைவர்கள் "உங்களுடைய முன்னோர்கள் எவருக்கும் முஹம்மது என்ற பெயர் இல்லையே இக்குழந்தைக்கு முஹம்மது என்ற பெயரிடக் காரணம் என்ன?" என்று கேட்டபொழுது, மேற்கூறிய கனவைச் சொன்னதோடு அல்லாமல், புவியில் உள்ள யாவராலும் புகழப்பட வேண்டும் என்பதற்காக என் பேரக் குழந்தைக்கு இப்பெயரைச் சூட்டுகிறேன் என்பதாகவும் சொன்னார்கள். பேரக் குழந்தை தம் அருமை மகன் அப்துல்லாஹ்வைப் போன்று சிவந்த மேனியும், சந்திரனைப் போன்ற பிரகாசமும் உள்ள முகத்தைப் பார்த்து, அடிக்கடி தம் மகனையே நினைத்த வண்ணமாக குழந்தை முஹம்மதுவுக்கு முத்தம் கொடுத்துக் கொண்டே "முஹம்மத் முஹம்மத்" என்று கூறினார்.

இவருடைய வார்த்தையைக் கேட்ட சபையில் உள்ள மக்கள் அனைவரும் கூறிய வாழ்த்தொலிகள் விருந்து மாளிகையே அதிர்வது போன்றிருந்தன.

## ஆமினாவின் நினைவலைகள்

விருந்து மாளிகையில் நடக்கும் ஆடம்பர விருந்தும் இன்னிசை முழக்கமும் வீட்டிற்குள் இருந்த ஆமினா அவர்களின் செவிகளைத் துளைத்த வண்ணமாக இருந்தது. என்னதான் மற்றவர்கள் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினாலும்,

அவருடைய மனமோ தாங்க முடியாத கவலையில் மூழ்கி இருந்தது.

ஓராண்டுக்கு முன்பு இதே போன்று தான் ஓர் இரவில், உயர்ந்த வகையான பட்டாடைகள் அணிந்து, பலவிதமான தினுசுகளில் நகை அணிந்து, நறுமணம் தரும் வாசனை களைப் பூசி மணப்பெண்ணாக தாம் வீற்றிருந்த தையும், இன்று கணவனை இழந்த கைம்பெண்ணாக (விதவை) இருப்பதையும் எண்ணி கண்ணீரை வடித்தவராக இருந்தார். இருந்தாலும், நமது மனக் கவலையைப் போக்க இறைவன் இந்த அன்புச் செல்வத்தையேனும் தந்தானே என்று நினைத்து ஆறுதல் அடைந்து கொள்வார். இவர் இவ்வித கவலையோடு இருப்பதைப் பார்த்த ஆமினாவின் அண்ணன் வந்து; "ஆமினா வருந்தாதே, உன்னுடைய இந்தக் குழந்தையானது ஒரு காலத்தில் பெரிய மதத்தலைவராகவும், அரசராகவும் கூட வருவார்" என்று சொல்லித் தேற்றினார். மேலும், தம் அருமைக் கணவர், செல்வ மகனுக்கு ஐந்து ஒட்டகைகளையும் ஓர் அடிமையையும் தான் சொத்தாக வைத்துச் சென்றிருக் கிறார் என்பதையெல்லாம் நினைத்து வருந்துவார்.

## குழந்தை வளர்ப்பு

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் பிறந்ததும் யார் பாலூட்டினார்கள்?**

பதில் : முதல் இரண்டு நாட்கள் வரை அன்புத் தாயாரான ஆமினா அம்மாள் பாலூட்டினார்கள். பின்னர் அவர்களின் பெரிய தந்தை அபூலஹபின் அடிமைப் பெண்ணான துவைபா பால் கொடுத்தார்கள். அதன்பின் பெருமானாரின் தந்தை அப்துல்லாஹ் அவர்களின் அடிமை யான உம்மு அய்மன் பால் கொடுத்தார். பின்னர் நபி (ஸல்) அவர்களுக்கு யார் யார் பால் கொடுத்தார்கள் என்பதைக் கீழே காணலாம்.

## ஹலீமா நாச்சியார்

**கேள்வி: செவிலித்தாய் என்றால் யார்?**

பதில் : அக்கால அரபு மக்களின் வழக்கப்படி அரபியர் செல்வந்தர்கள் தம் குழந்தைகளுக்கு பால் கொடுத்துப் பக்குவமாக வளர்ப்பதற்காக கிராமங்களிலே இருக்கும் செவிலித் தாய்மார்களைத் தம் வீட்டிற்கு அழைத்து வந்தோ, அல்லது அவர்கள் தேடிவரும்போது அவர்களிடத்தில் தம் குழந்தைகளை ஒப்படைத்தோ அவர்கள் ஆரோக்கியத்துடன் வளர ஏற்பாடு செய்வார்கள். அதற்கு தகுந்த ஊதியமும் கொடுப்பார்கள். அவர்கள் வருடத்திற்கு இரண்டு மூன்று முறை, அல்லது பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைப் பார்க்க விருப்பப்படும் பொழுது குழந்தையைக் கொண்டு வந்து காண்பித்துவிட்டு, அதற்குரிய ஊதியங்களையும் பெற்றுக் கொண்டு செல்வார்கள். இவ்வாறு பிறர் குழந்தைகளை பால் கொடுத்துப் பக்குவமாக வளர்க்கும் தாய்மார்களுக்குத் தான் செவிலித்தாய் என்று பெயர்.

**கேள்வி: நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பால் கொடுத்த செவிலித்தாய் யார்?**

பதில் : ஹலீமா ஸஃதிய்யா என்ற பெண்மணி.

**கேள்வி: அப்பெண்மணி யார்? இவர் எந்த கோத் திரத்தைச் சேர்ந்தவர்?**

பதில்:நபிபெருமானாருக்கு அன்போடும், ஆதரவோடும் பாலூட்டி வளர்த்த ஹலீமா நாச்சியார் ஹவாஸின் என்ற கூட்டத்தைச் சார்ந்த பனூ ஸஃத் கோத்திரத்துப் பெண். இவருடைய தந்தையின் பெயர் அபூதுவைப்.

**கேள்வி: ஹலீமா அம்மாளின் கணவர் பெயர் என்ன?**

பதில் : ஹாரிதுப்னு அப்தில் உஸ்ஸா என்பார்.

**கேள்வி: ஹலீமா எப்படிப்பட்டவர்?**

பதில்: வறுமையில் தோய்ந்த, இளகிய மனம் படைத்த,

கொடுத்த வாக்கைக் காப்பாற்றுகின்ற திறமையுள்ள ஒரு பெண்மணியாக இருந்தார்.

**கேள்வி: ஹலீமா அவர்களுக்கு எத்தனை குழந்தைகள்?**

பதில் : ஹலீமா அவர்களுக்கு அப்துல்லாஹ் என்ற ஆண் குழந்தையும், அஹீஸா, ஜுதாமா என்ற இரு பெண்குழந்தைகளும் இருந்தனர். ஜுதாமா என்ற மகளுக்கு ஷீமா என்ற மற்றொரு பெயருமுண்டு. அப்துல்லாஹ் என்ற ஆண் குழந்தை பால் குடிக்கும் சமயத்தில்தான் பெருமானாரும் இவர்களிடத்தில் பால் அருந்தினார்கள்.

## மக்காவிற்கு ஹலீமா வருகை

**கேள்வி: எந்த நிலையில் ஹலீமா மக்கா வந்தார்கள்?**

பதில் : மக்காவுக்கு அருகாமையிலே இருக்கக் கூடிய கிராமங்களிலிருந்து பால் கொடுத்து பக்குவமாக வளர்க்கும் நற்பேற்றினைப் பெற்ற செவிலித் தாய்மாரின் கூட்டத்தாரோடு பனூ ஸஃத் கோத்திரத்தைச் சேர்ந்த பெண்களும் வந்தார்கள். (இவர்கள் பால் குடிக்கும் குழந்தைகளை பெற்றுச் சென்று வளர்க்கலாம் என்ற எண்ணத்தோடு வந்தார்கள்).

இப்பேர்ப்பட்ட பெண்களோடு ஹலீமா, அவர்களின் கணவர், பால் குடி குழந்தை அப்துல்லாஹ், ஹலீமா அவர்களின் உடன் பிறந்த சகோதரியின் மகன் ஆகியோரும் வந்தனர். ஆனால் வரும் வழியில் அவர்கள் ஏறிவந்த கோவேறு கழுதை களைத்து நின்றுவிட்டது. மற்ற பெண்கள் எல்லாம் இவர்களை விட்டுவிட்டு மக்காவிற்குச் சென்று விட்டார்கள். வழியில் தங்கிய இவர்கள் அடுத்த நாள் காலையில் மக்கா வந்தடைந்தார்கள்.

முன்னதாக வந்த பெண்கள் அங்குள்ள செல்வச் சீமான்களின் குழந்தைகளை எல்லாம் பெற்று, அதற்குரிய வளர்ப்புக் கூலியையும் பேசிக் கொண்டார்கள். மேலும் முன்னதாகவே, எல்லாச் செவிலித் தாய்மார்களுமே பெருமானாரின் வீட்டுக்கு வந்து, ஆமினா நாச்சியாரிடத்தில்

குழந்தையைப் பற்றி விசாரித்தார்கள். ''குழந்தை செல்வம் பொருந்தியதா?'' என்று கேட்டார்கள். அந்தக் குழந்தைக்கு பால் கொடுத்தால், எவ்வளவு ஊதியம் கொடுப்பீர்கள் என்றும் கேட்டார்கள்.

ஆனால், ஆமினா அம்மாள் அவர்களோ இக் குழந்தைக்குத் தந்தை இல்லை. போதிய சொத்துக்களும் இல்லை. வளர்க்கின்ற செவிலித் தாய்மார்களுக்கு குறிப்பிட்ட அளவு ஊதியம் கொடுப்பதற்கு வசதியும் இல்லை என்பதாகச் சொன்னார்கள். இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் அந்தப் பெண்கள் அனைவரும் வேறு இடங்களைத் தேடிச் சென்று விட்டார்கள்.

ஹலீமா அவர்களும் இக்குழந்தையை, நபி (ஸல்) அவர்களை வந்து பார்த்தார்கள். இவர்களிடத்திலும் ஆமினா நாச்சியார் குழந்தைக்குத் தந்தை இல்லை; போதிய சொத்துக்கள் இல்லை. இதை யார் பாலூட்டி வளர்த்தாலும் அவர்களுக்கு ஊதியம் கொடுப்பதற்குப் போதிய பண வசதியும் இல்லை என்றே சொன்னார்கள்.

இதைக் கேட்டதும் இவரும் வேறு இடத்தில் எங்காவது குழந்தை கிடைத்தால், அதை வளர்த்து ஏதாவது ஊதியம் பெறலாம் என்று சொல்லிப் போய்விட்டார்கள். இவர்களுக்கு முன்னே சென்ற பெண்களுக்கு எல்லாம் ஒவ்வோர் பெண்ணுக்கும் ஒவ்வொரு குழந்தை கிடைத்தது. அந்தக் குழந்தைகளுக்கு உரிய ஊதியத்தையும் பேசிக் கொண்டார்கள். ஆனால் ஹலீமா அவர்களுக்கு எந்தக் குழந்தையும் கிடைக்கவில்லை. மக்காவிலேயே சில நாட்கள் தங்கிவிட்டார்கள்.

எந்தக் குழந்தையும் கிடைக்காமல் ஹலீமா அவர்களுக்குச் சும்மா ஊருக்குத் திரும்பிச் செல்ல மனமில்லை. அவர் தம் கணவர் ஹாரிதிடம் ''அந்த அநாதைக் குழந்தையையாவது வாங்கிச் செல்லலாம் என்று நினைக் கிறேன்'' என்றார்கள்.

அதற்கு கணவர், "ஏன் அப்படி திடீரென்று மனம் மாறியது?" என்று கேட்டார்கள்.

அதற்கு ஹலீமா அவர்கள்: "எல்லா ஸஃத் குலத்துப் பெண்களும் தங்கள் கைகளில் குழந்தையை ஏந்தி மகிழ்வோடு அவரவர் இடத்திற்குச் செல்வார்கள். நான் மட்டும் குழந்தை இல்லாமல் வெறும் கையோடு செல்வதா? அதனால்தான் தந்தையற்ற இந்த அநாதைக் குழந்தையை எடுத்துச் செல்லலாம் என நினைக்கிறேன்" என்றார்.

அதற்கு அவருடைய கணவர், "ஹலீமா, உனக்குப் பிரியமிருந்தால், அந்தக் குழந்தையைத் தாராளமாக எடுத்துவா, நான் மறுப்புத் தெரிவிக்க மாட்டேன். அந்த அநாதைக் குழந்தையை வளர்ப்பதால், அதற்கு நீ பால் கொடுக்கும் பொருட்டால், நமக்கு நல்ல செல்வாக்கையும், சுபிட்சத்தையும் இறைவன் தருவான் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்று கூறினார்.

ஆனால் ஹலீமாவின் சகோதரி மகனோ "போயும் போயும் இந்த அநாதைக் குழந்தையையா வளர்க்கப் போகின்றீர்? இதை முன்னிட்டு உமக்கென்ன ஊதியம் கிடைக்கப் போகிறது?" என்று கேட்டார்.

அவருக்கும் ஹலீமா நாச்சியார் ஆறுதலைக் கூறினார்கள். பின்னர் மனமுவந்து குழந்தையை அன்போடு ஆமினா அவர்களிடத்திலிருந்து பெற்றுக் கொண்டார்கள்.

**கேள்வி: ஹலீமா அவர்கள் தம் ஊரிலிருந்து மக்கா நகருக்கு வந்து, பின்னர் தம் ஊருக்குத் திரும்பியபோது என்ன மாற்றங்கள் ஏற்பட்டன?**

பதில் : இதை அவர்களே கூறுகிறார்கள்:

"நான் மக்கா நகருக்கு வரும்பொழுது எங்களூரில் கடுமையான பஞ்சம், குடிப்பதற்குத் தண்ணீர் இல்லை. மழை என்பதே கிடையாது. எங்களிடத்தில் இருந்ததெல்லாம்

செலவாகிவிட்டது. ஒரு நேரம் உணவுக்கும் கூட எதுவுமில்லை. இந்த நிலையில் என்னிடத்திலிருந்த ஒரு பெண் கழுதையின் மீது புறப்பட்டு வந்தேன். இது சற்று வெண்மையாக இருக்கும். இதனுடன் நாங்கள் வைத்திருந்த, பாரத்தை அதிகம் சுமக்கக் கூடிய ஒரு ஒட்டகையானது ஒரு துளி பால்கூடக் கறப்பதற்கு வழியில்லாமல் இருந்தது. எங்களிடத்தில் இருந்த எங்கள் அருமைக் குழந்தை அப்துல்லாஹ் பசி தாங்க முடியாமல் இரவெல்லாம் அழுது கொண்டே இருக்கும். அதற்கு நான் பால் கொடுக்கலாம் என்று நினைத்தால் என்னுடைய மார்பிலிருந்து போதிய அளவு பால் இராது.

குழந்தை அழுகின்ற சப்தத்தினால் நாங்கள் மன வேதனையுடன் சிறிது நேரம் கண் அயர்ந்து தூங்கு வதற்குக்கூட வழியில்லாமல் விழித்துக் கொண்டே இருப்போம். "எப்பொழுது மழை வரும்? அதனால் நமது வறுமை நீங்கும்?" என்ற எண்ணத்திலே இருந்தோம். நாங்கள் ஏறி வந்த அந்தப் பெண் கழுதையும், அது பலஹீனமாக இருந்ததால், எங்களைச் சுமந்து கொண்டு அதனால் வேகமாக நடக்க முடியவில்லை. இதனால் மற்ற அனைவரோடும் சேர்ந்தாற்போல் போக முடியவில்லை. அவர்கள் எல்லோருக்கும் நல்ல வாகனம் இருந்ததால், எங்களுக்கு முன்னமேயே மக்கா சென்று விட்டார்கள்." இவ்வாறாக, ஹலீமா அவர்கள், பெருமானாரை பால் கொடுப்பதற்கு ஏற்றுக் கொள்வதற்கு முன்பாக இருந்த நிலைமையை சொல்கிறார்கள்.

## மறுமலர்ச்சி

**கேள்வி: நபி (ஸல்) அவர்களை ஹலீமா பால் கொடுப்பதற்காக ஏற்றுக் கொண்ட பின் நடந்த வற்றை (மறுமலர்ச்சியை) எவ்வாறு கூறினார்கள்?**

பதில் : நபி (ஸல்) அவர்களை பால் கொடுத்து வளர்ப்பதற்காக பல்வேறு கஷ்டங்களுக்கு மத்தியில் ஹலீமா அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். ஏற்றுக் கொண்டவுடன்

அவர்கள் இருக்கும் இடத்திற்குச் சென்று (மக்காவில் தங்கியிருந்த இடத்திற்கு) குழந்தைக்கு பால் கொடுத்தார்கள். குழந்தை இறைவனின் உதவியால் தன் பசிதீரும் வரைக்கும் பால் குடித்தது.

அதற்கப்புறம் ஹலீமா அவர்களிடத்தில் பால் குடிக்குழந்தையாக இருந்த அப்துல்லாஹ்வும் பால் குடித்து அமைதியாக இருவரும் உறங்கினார்கள். இது வரை கணவனும், மனைவியும் இவ்வாறு நிம்மதியாக உறங்கியது கிடையாது. குழந்தை அப்துல்லாஹ் பாலில்லாமல் பசியால் துடிக்கும்.

இதற்கப்புறம் என் கணவரும் நானும் நாங்கள் ஓட்டிவந்த கிழட்டுப் பெண் ஒட்டகையினிடத்தில் சென்றோம். அதன் மார்புக் காம்புகளில் பால் சுரந்திருப்பதைப் பார்த்து என் கணவர் பால் கறந்தார். அந்தப் பாலானது நாங்கள் இருவரும் வயிறு நிரம்ப அருந்துவதற்குப் போது மானதாக இருந்தது. நாங்கள் இருவரும் பசி தீர்ந்து அந்த இரவை அமைதியாகவும் சந்தோஷத்துடனும் கழித்தோம்.

அதிகாலை எழுந்ததும் கணவர் என்னைப் பார்த்து ''ஹலீமா, இப்பொழுது நீ புரிந்து கொண்டாயா? நீ பரக்கத்தான, பாக்கியமிக்கதை அடைந்துவிட்டாய் என்பதை?'' என்றார்.

''நானும் அப்படித்தான் கருதுகிறேன்'' என்று அவர்களுக்கு மகிழ்வோடு பதில் சொன்னேன். அதற்கப்புறம் நானும் என் கணவரும், குழந்தை அப்துல்லாஹ்வும் பால் கொடுத்து வளர்ப்பதற்காக பொறுப்போடு எடுத்துச் செல்லும் குழந்தை முஹம்மது (ஸல்) அவர்களும் நாங்கள் வந்த பெண்கழுதையின் மீது ஏறினோம். குழந்தைகளும் என்னுடன் இருந்தன. இப்பொழுது என்னுடைய கழுதை மற்றவர் களுடைய கழுதைகள் பின் தொடர்ந்து வரமுடியாத அளவுக்கு அதிக வேகமாகச் சென்றது.

எங்களுக்குப் பின்னே வந்தவர்கள் ''ஹலீமா மெதுவாகச் செல்லமாட்டாயா?'' என்று கேட்டார்கள். மேலும், ''இதுதானா நீ வரும்போது ஏறி வந்த பெண் கழுதை?'' என்று கேட்டார்கள். அதற்கு நானும் ''ஆம் அதே கழுதைதான்'' என்று சொன்னேன்.

அதற்கு அவர்கள், ''இந்த கழுதைக்கு இப்பொழுது எப்படி திடீரென்று இவ்வளவு சக்தி உண்டாயிற்று?'' என்று தமக்குள்ளாகவே பேசிக் கொண்டார்கள். இப்படியாக நாங்கள் முன்செல்ல எங்களைத் தொடர்ந்து அவர்கள் பின்னே வர பனூஸஃது கோத்திரத்தார் பிரதேசத்திலுள்ள எங்களிடத்துக்கு வந்து சேர்ந்தோம்.

நான் எத்தனையோ ஊர்களைப் பார்த்திருக்கிறேன். என்னுடைய நாட்டைப் போன்று வறட்சியுள்ள நாட்டைப் பார்த்ததே கிடையாது. அப்படியிருந்தும் இப்பொழுது நான் வளர்க்கும் ஆடுகள் வயிறு நிறைய மேய்ந்து பாலை சுரந்து வீட்டுக்கு வரும். அதிலே நாங்கள் பாலை அதிகம் கறந்து எங்களது பசியைத் தீர்த்துக் கொள்வோம். இதனைத் தெரிந்து மற்ற மக்கள் அனைவரும் அவர்களுடைய ஆடுகளை மேய்க்கின்றவர்களிடம் எங்களுடைய ஆடு எந்த இடத்தில் மேய்கின்றதோ அந்த இடத்திற்கே அவர்களுடைய ஆடுகளையும் ஓட்டிச் செல்லுமாறு கட்டளையிடுவார்கள்.

''இதுபோன்று இரண்டு வருஷ காலம் எங்களுக்கு வாழ்க்கை நிம்மதியாகக் கழிந்தது. குழந்தையும், பால் குடி மறந்து, நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது. மற்றக் குழந்தைகள் இரண்டு வருடங்களில் வளர்வதைப் போலல்லாமல், அதிகத் திறமையுள்ள வர்களாகவும், நேர்த்தியான வளர்த்தியுள்ளவர்களாகவும், பிரகாசமுள்ள முகத்தைப் பெற்றவர்களாகவும் வளர்ந்தார்கள்'' என்பதாக, ஹலீமா அம்மாள் நபி (ஸல்) அவர்களைப் பால் கொடுப்பதற்காக எடுத்துச் சென்றதற்கு அப்புறம் நடந்த முன்னேற்றத்தைக் கூறுகிறார்கள்.

மேலும் கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்களைப் பால் கொடுப்பதற்கு ஏற்றுக் கொண்டதற்கு அப்பறம் எங்கள் வாழ்க்கையிலேயே முன்னர் நாங்கள் பட்ட கஷ்டத்தையும் துன்பத்தையும் விட்டு நீங்கி எங்கள் வாழ்க்கை நல்ல அபிவிருத்தி அடைந்தது .

**கேள்வி: ஹலீமா அவர்கள் எத்தனை வருடம் பால் கொடுத்தார்கள்?**

பதில் : ஹலீமா அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு இரண்டு ஆண்டுகள் பால் கொடுத்தார்கள். அதற்கப்புறம் தம் நாட்டு வழக்கப்படி ஆறு மாதம் அல்லது ஒரு வருடம். இதற்கு மத்தியில் குழந்தைகளைக் கொண்டு வந்து வந்து தாய்மார்களிடந்தில் காட்டுவார்கள். அது போன்று ஹலீமா அவர்களும் நபி (ஸல்) அவர்களை ஆமினா அம்மாள் அவர்களிடத்தில் கொண்டு வந்து ஒப்புவித்தார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களை ஆமினா அம்மாள் ஏன் மீண்டும் ஹலீமாவிடம் கொடுத்தார்கள்?**

பதில் : பெருமானார் அவர்களை ஹலீமா அவர்கள் கொண்டு வந்து தம் தாயாரிடம் ஒப்படைக்கும் பொழுது அங்கு வெப்பதட்ப நிலை சரியில்லை என்பதற்காகவும் மக்காவில் (அம்மை) நோய் பரவியிருந்ததாகவும், அந்த அம்மை நோய் தம் குழந்தைக்கு பரவும் என்ற அச்சத்தினாலும் அவர்களிடத்திலேயே ஆமினா நாச்சியார் குழந்தையை ஒப்படைத்தார்கள் என்பதாக சரித்திர ஆசிரியர்கள் எழுதியிருக் கிறார்கள்.

## 5. நபி [ஸல்] அவர்களின் தந்தையின் மரணம்

**கேள்வி: பெருமானாரின் தந்தை மரணிக்கும் பொழுது அவருக்கு எத்தனை வயது?**

பதில் : இருபத்து ஐந்து வயது.

**கேள்வி: அன்னார் எங்கு, எப்பொழுது மரணித்தார்?**

பதில் : நபி (ஸல்) அவர்களின் பாட்டனார் அப்துல் முத்தலிபின் கட்டளையின் படி அப்துல்லாஹ் ஷாம் தேசத்திற்கு வியாபாரத்திற்காகச் சென்றார். அங்கு வியாபாரத்தை முடித்துக் கொண்டு தம் நாட்டிற்குத் திரும்பி வரும் வழியில் விலை உயர்ந்த பேரீச்சம் பழங்களை கொள்முதல் செய்வதற்காக மதீனாவில் தங்கினார். அங்கு தந்தை வழி உறவினர்களாகிய பனூ நஜ்ஜார் கோத்திரத்தாரின் வீட்டில் ஒரு மாத காலம் வரை கடுமையான நோயின் காரணமாகத் தங்கி அங்கேயே மரணித்துவிட்டார். அவரது உடலை நாபிஙா என்பவரின் வீட்டில் அடக்கம் செய்தனர். அப்துல்லாஹ்வின் இந்த அடக்கத்தலம் இன்றைய மதீனாவில் மஸ்ஜிதுந் நபவிக்கு வடமேற்குத் திசையில் சுமார் இரண்டு பர்லாங்கு தூரத்தில் ஒரு வீட்டினுள் இருக்கிறது.

**கேள்வி: இறக்கும் பொழுது தந்தை அப்துல்லாஹ் ஏதாகிலும் சொத்துகள் வைத்திருந்தாரா?**

பதில் : ஐந்து ஒட்டகங்கள், உம்மு ஐமன் என்ற அடிமைப் பெண் ஆகியவை தாம் அவர் வீட்டுச் சென்ற சொத்துக்கள்.

**கேள்வி: அன்னாரின் சிறப்பான குணங்கள் யாவை?**

பதில் : ஹலரத் அப்துல்லாஹ் மிகவும் அடக்கமானவர். அவர் சரீர இச்சைகளை கட்டுப்படுத்திக் கொள்ளும் தன்மையைப் பெற்றவர். இவர் ஒழுக்கம் மிக்கவர் என்பதை கீழே கூறப்படும் ஒரு நிகழ்ச்சி எடுத்துக் காட்டும்.

அப்துல்லாஹ்வின் தந்தை அப்துல் முத்தலிபு தம் மகனுக்காக நூறு ஒட்டகங்களை பலி கொடுத்துவிட்டு, தம் அருமை மகனை பலிபீடத்திலிருந்து அழைத்துக் கொண்டு வந்தார்கள். தந்தை முன்னே போகின்றார். பின்னே ஹலரத் அப்துல்லாஹ் அவர்கள் நேர்த்தியான அழகோடும், அடக்கமான நடையோடும் தந்தைக்குப் பின்னே வரு கிறார்கள்.

இவர்களது முக கவர்ச்சியையும் அங்க வடிவினையும் பார்த்து அஸதீ கோத்திரத்தைச் சேர்ந்த பாத்திமா என்ற பெண்மணி, "அப்துல்லாஹ்! இப்போது எங்கு செல்கிறீர்கள்" என்று கேட்டார். அதற்கு அப்துல்லாஹ் "நான் என் தந்தையோடு செல்கின்றேன்," என்று சொன்னார்கள்.

"உம் உயிருக்குப் பதிலாக பலியிட்ட நூறு ஒட்டகங்களையும் உமக்கு நான் வெகுமதியாகத் தருகிறேன். அதை நீர் பெற்றுக் கொண்டு அதற்காக நீர் என்னோடு உடலின்பம் கொள்ள வேண்டும்" என்று தயவோடு கேட்டார். இந்த வார்த்தையினைக் கேட்ட அப்துல்லாஹ்,

"என் தந்தை முன்னே செல்லுகிறார். மேலும், தகாத செயலினை செய்வதைவிட என் உயிரை விடுவது மேலான காரியம், இன்னும் உயர் குடியில் பிறந்தவன், என்னுடைய சுயமரியாதையையும், என்னுடைய மத பக்தியையும் காப்பாற்றிக் கொள்வதுதான் அவசியம்" என்று கவிதைகளை கூறியவாறு அப்பெண்ணுக்கு இணங்க மறுத்துவிட்டார்.

**கேள்வி: அப்துல்லாஹ் அவர்கள் மீண்டும் பாத்திமாவை சந்திக்கும்போது பாத்திமா ஏன் முகங்கொடுத்துப் பேசவில்லை?**

பதில் : அப்துல்லாஹ் அவர்கள் ஆமினா அவர்களை திருமணம் செய்து கொண்டார்கள். அவர்கள் கர்ப்பம் தரித்திருக்கும் பொழுது, மேலே கூறப்பட்ட பாத்திமாவை ஒரு தடவை சந்திக்க நேர்ந்தது. ஆனால், பாத்திமாவோ முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

அப்துல்லாஹ் அவர்கள்: "அன்று என்னை விருப்பத்தோடு அழைத்தாய். இன்று முகத்தைத் திருப்பிக் கொண்டாயே ஏன்?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவள், "அன்று உம்மிடமிருந்த அந்தப் பூரணப் பிரகாசம் இன்று உம்மிடம் இல்லை. அந்தப் பிரகாசம் வேறொரு இடத்திற்குச் சென்று விட்டது. ஆனபடியால் நீர் எனக்குத் தேவையில்லை" என்று மறுமொழி கூறினாள்.

ஆரம்ப காலத்தில் அவள் அப்துல்லாஹ்வை அழைத்ததற்குக் காரணம் என்னவென்றால், அப்துல்லாஹ் வின் வர்க்கத்தில் ஒரு நபி தோன்றுவார் என்பதாக இவருடைய சகோதரர் வரக்கத்துப்னு நவ்பல் என்ற ஞானி அடிக்கடி கூறுவதை இவள் கேள்விப்பட்டிருக்கிறாள். ஆதலால், அந்தப் பிரகாசம் தன் கர்ப்பத்தில் வந்தால் நன்றாக இருக்குமே. தன் வயிற்றில் ஒரு புனிதமானவர் பிறந்தார் என்ற பெயர் இருக்குமே என்பதற்காக இவள் அழைத்தாள் என்பதாகச் சொல்லப்படுகிறது.

## 6. இலாஞ்சனை தரித்தல்

**கேள்வி: நபி (ஸல்) அவர்களுக்கு எத்தனை வயதில் இலாஞ்சனை தரிக்கப்பட்டது?**

பதில் : குழந்தை முஹம்மது பால் குடித்து முடிந்ததற்குப் பின் அன்னை ஆமினாவிடம் கொண்டுவந்து ஒப்படைத்தார்கள் ஹலீமா. தட்பவெப்பநிலை சரியில்லாத காரணத்தால் மீண்டும் ஹலீமாவிடமே வளர்ப்பதற்கு ஆமினா அம்மாள் ஒப்படைத்ததார்கள். இப்படி மீண்டும் குழந்தையை வளர்ப்பதற்கு ஏற்றபின், ஒரு நாள் குழந்தை முஹம்மது வளர்ப்புத் தாய் ஹலீமாவை பார்த்து, ''அண்ணன்மார்கள் எங்கே?'' எனக் கேட்டார்கள். அதற்கு ஹலீமா அவர்கள் ''ஆடு மேய்க்கச் சென்று விடுவார்கள், மாலையில்தான் வீடு திரும்புவார்கள்'' என்று சொன்னார். இதைக் கேட்டதும் குழந்தை முஹம்மது அவர்கள் இவ்வேலையை நானும் செய்யலாமே என்று சொன்னார்கள். மறுநாளிலிருந்து வீட்டுக்குப் பின்புறத்திலுள்ள தோட்டத்தில் ஆட்டுக் குட்டிகளை மேய்ப்பதற்கு தம் குழந்தைகளோடு குழந்தை முஹம்மது அவர்களையும் அனுப்பினார்கள்.

**கேள்வி: ஆடு மேய்த்த இடத்தில் நடந்தது என்ன?**

பதில் : ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்த பொழுது, ஹலீமாவின் மகன் அப்துல்லாஹ் ஓடோடி வந்து, ''அம்மா!

அந்த குறைஷி குலத்துச் சகோதரரை இரண்டு பேர் பிடித்து படுக்க வைத்து, வயிற்றைப் பிளந்து பின்பு ஒட்டிவிட்டார்கள்'' என்பதாகச் சொன்னார். அதைக் கேட்டவுடன் ஹலீமாவும் அவர் கணவர் ஹாரிதும் வேகமாக ஓடிச்சென்று அங்கு பார்த்த பொழுது குழந்தை முஹம்மது அவர்கள் குளிரால் நடுங்குவது போன்று நடுங்கிக் கொண்டு நின்றார்கள். முகமெல்லாம் நிறம் மாறியிருந்தது. உடனே ஹலீமாவும், ஹாரிதும் தங்கள் மடியின் மீது வைத்துக் கொண்டு, ''உமக்கு என்ன செய்கிறது? இங்கு என்ன நடந்தது மகனே!'' என்று கேட்டார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் கூறியது என்ன?**

பதில் : அதற்கு குழந்தை முஹம்மது அவர்கள், ''வெள்ளையுடை அணிந்திருந்த இருவர் என்னிடம் வந்தார்கள். வந்தவர்கள் என்னைப் படுக்க வைத்து வயிற்றைப் பிளந்து எதையோ எடுத்தார்கள். அது என்ன வென்று எனக்குத் தெரியாது'' என்றார்கள்.

பின்னர் இருவரும் குழந்தையைத் தங்களுடைய இருப்பிடத்துக்குக் கொண்டு வந்தார்கள். குழந்தைக்கு ஜின்னோ ஏதோ பிடித்திருக்கலாம் என்பது ஹாரிதினுடைய எண்ணம். அதை முன்னிட்டு குழந்தைக்குத் தீங்கு ஏற்படு வதற்கு முன்பு உரியவர்களிடத்தில் ஒப்படைத்து விட்டால் நல்லது என்ற விபரத்தை ஹலீமாவிடம் சொன்னார். கணவனுடைய கட்டளையை ஏற்று ஹலீமாவும் குழந்தையை எடுத்துக் கொண்டு மக்காவிற்கு மாதா ஆமினாவிடம் வந்தார்கள். எதிர்பாரா வண்ணம் ஹலீமா குழந்தை முஹம் மதுவைக் கொண்டு வந்ததைப் பார்த்து, ஆச்சர்யம் அடைந்தவர்களாக ''ஹலீமா! குழந்தையைத் திரும்பி எடுத்துச் செல்ல பிரியப்பட்டாயே, இப்போது திடீரென்று கொண்டு வந்துவிட்டாயே, என்ன?'' எனக் கேட்டார்கள்.

''குழந்தைக்குச் சீக்கு, பிணி வருமோ என்று நான் பயந்துவிட்டேன். நீங்களும் குழந்தை மீது அதிகம் பாசமாக

இருக்கின்றீர்கள்'' என்று ஹலீமா சொன்னார். இவ்வார்த்தைகளை கேட்ட மாதா ஆமினா அவர்கள்:

''ஹலீமா! குழந்தையை ஜின் ஏதோ தீண்டி விட்டது என்று நினைக்கின்றாயோ? ஒரு போதும் தீண்டும் என்று எண்ணாதே, தீண்டுவதற்கு அதற்கு சக்தி இல்லை. மேலும் என்னுடைய குழந்தை அதிசயமானது. அதைப் பற்றியும் நீ தெரிந்து கொள். நான் கர்ப்பவதியாக இருக்கும்போது ஷாம் தேசத்தில் புஸ்ராவில் இருக்கும் கட்டிடத்தைப் பார்த்தேன். நான் கர்ப்பவதியாக இருக்கையில் மற்ற கர்ப்ப ஸ்திரீகள் அடையும் வேதனையும், சிரமமும் அடையவில்லை. குழந்தை பிறக்கும் போதும் எந்தக் கஷ்டமும் உண்டாகவில்லை.

குழந்தை பிறக்கும்போது தரையின் மீது இரண்டு கைகளையும் வைத்து வானத்தின்பால் தலையை உயர்த்திய வண்ணம் பிறந்தார். இப்பேர்ப்பட்ட குழந்தையை எதுவும் தீண்டும் என்ற எண்ணத்தை விட்டுவிடு. குழந்தையை மீண்டும் நீயே எடுத்துச் சென்று வளர்ப்பாயாக,'' என்றார்கள். இந்தச் சம்பவம் நடக்கும்போது குழந்தைக்கு மூன்று அல்லது நான்கு வயதிருக்கும்.

**கேள்வி: ஹலீமா அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் எத்தனை ஆண்டுகள் வளர்ந்தார்கள்?**

பதில் : பெருமானார் ஹலீமா அம்மாள் அவர்களிடம் நான்கு ஆண்டுகள் வளர்ந்தார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களுக்குப் பாலூட்டிய செவிலித் தாய்மார்கள் யார், யார்?**

பதில் : குழந்தை பிறந்தது முதல் இரண்டு நாட்கள் வரைக்கும் தாயார் ஆமினா அம்மாள் பால் கொடுத்தார்கள். அதற்கு அப்புறம் அபூலஹபின் அடிமையான துவைபாவும், பின்னர் அடிமையான உம்முஐமனும், பிறகு கவ்லாபின்து முன்திர் இன்னும் பனூஸஃதீ கோத்திரத்தைச் சேர்ந்த பெண்கள் ஆக எட்டுப் பேர் பால் கொடுத்தனர்.

## வளர்ப்பால் ஏற்பட்ட பயன்

**கேள்வி: ஹலீமா அவர்களிடம் பெருமானார் வளர்ந்ததினால் என்ன பயன்கள் விளைந்தன?**

பதில் : நபிகள் நாயகம் (ஸல்) இளமையில் ஹலீமாவால் வளர்க்கப்பட்டதனால் அவர்களுக்கு உடலுறுதியும், எதையும் தனிமையில் செயலாற்றும் திறமையும் உண்டாயிற்று. பட்டினங்களில் அழகு மொழியாம் அரபி மொழியை கொச்சையாகத்தான் பேசுவார்கள். ஆனால் பனூஸஃது கோத்திரமான ஹலீமாவின் குலத்தில் தூய்மையான முறையில் அரபி மொழி பேசுவார்கள். இவர்களிடம் நபிகள் நாயகம் வளர்ந்ததால் தான் அவர்கள் அழகாகவும், திறமையாகவும் சொற்குற்றம், பொருள் குற்றம் இல்லாமலும் பேசும் திறமையைப் பெற்றிருந்தார்கள். இந்தச் சொல்லழகால் பிற்காலத்தில் மற்ற மக்களைக் கவர்ந்தார்கள் என்றால், அதற்கு இச்சொல்லழகும் ஒரு காரணமாக அமைந்திருந்தது. ''பனூஸஃது கோத்திரத்தில் நான் வளர்ந்ததனால்தான் அரபி மொழியை அழகாகப் பேசக் கற்றுக் கொண்டேன்'' என்று பெருமானாரே கூறியுள்ளார்கள்.

இவை தான் நாயகம் (ஸல்) ஹலீமா நாச்சியாரிடம் வளர்ந்ததால் ஏற்பட்ட பலன்கள்.

# 7. நபி [ஸல்] அவர்கள் தாயார் ஆமினா அவர்களிடம் வளர்தல்

**கேள்வி: பெருமானாரின் தாயார் ஆமினா அம்மாள் ஏன் மதீனாவிற்குப் பயணமானார்கள்?**

பதில் : ஹலீமா நாச்சியார் நாயகம் (ஸல்) அவர்களை அன்னை ஆமினாவிடம் ஒப்படைத்த பிறகு தம் தாயாரிடத்திலேயே வளர்ந்தார்கள். அப்போது அழகு மிகுந்த அரபு

மொழியை இனிமையாகப் பேசும் தன்மை யுடையவர்களாக இருந்தார்கள். பூரணச் சந்திரனைப் போன்று அவர்களது முகம் பிரகாசமாக இருக்கும். நேர்த்தியான வளர்த்தியுடை யவர்களாக இருப்பார்கள். அன்பு மகனார் பேசும் வார்த்தைகளைக் கேட்டுக் கேட்டு ஆமினா பூரிப்படை வார்கள். தம் செல்வ மகனைப் பார்க்கும் போதெல்லாம் அன்புக் கணவர் அப்துல்லாஹ்வின் நினைவு வந்துவிடும். இறுதியாக ஒரு முடிவுக்கு வந்தார்கள். அன்புக் கணவரின் அடக்கத் தலத்தைப் பார்த்து வருவோம். தந்தை முகம் பார்த்தறியா மகனுக்கு அன்னாரின் கபுரையாவது காட்டி வருவோம். இன்னும் நம் செல்வக் குழந்தைக்கு அவருடைய சொந்த மாமன் மாமி முதலியோரையும் காட்டிவிட்டு வரலாம் என்ற நோக்கத்தோடு யத்ரிபுக்கு தாமும், அன்பு மகனும் அடிமைப் பெண் உம்மு ஐமனும் புறப்பட்டுப் போனார்கள். (யத்ரிபு தான் பிற்காலத்தில் மதீனா எனப் பெயர் பெற்றது).

**கேள்வி: நபிகள் நாயகம் மதீனாவில் கண்டது என்ன?**

பதில் : தம் தந்தையின் உறவினர்களைப்பார்த்தார்கள். பின்பு ஆமினா பிரியமுள்ள மகனுக்கு தம் அருமைக்கணவர் அப்துல்லாஹ்வின் கப்ரைக் கொண்டு போய்க் காண்பித்தார்கள். அன்னார் அங்கு அடக்கப்பட வேண்டிய காரணங்களைச் செல்வ மகனுக்கு எடுத்துரைத்தார்கள். ஒரு மாதம் தங்கினார்கள்.

## 8. ஆமினா மரணம்

**கேள்வி: ஆமினா நாச்சியார் எங்கு எப்பொழுது மரணித்தார்கள்?**

பதில் : தாங்கள் தங்கி இருந்த வீட்டிலிருந்து, மக்காவிற்கு வருவதற்காக எல்லா சாமான்களையும் எடுத்துக் கொண்டு, ஒட்டகையில் புறப்பட்டார்கள். தாங்க முடியாத வெயிலில் பாலைவன மணலில் ஒட்டகை நடந்தது. மக்கா செல்வதற்கு இன்னும் பாதி தூரம் இருக்கும். ஒட்டகம்

திடீரென்று ஓரிடத்தில் நின்றது. ஏனென்றால் ஆமினா அம்மாளுக்கு நோய் ஏற்பட்டு விட்டது. நேரம் ஆக ஆக நோயின் வேகம் அதிகமாகிக் கொண்டே போகின்றது. உம்மு ஐமன் தமக்குத் தெரிந்த வைத்திய உதவிகளைச் செய்தார். எதுவும் பலனளிக்கவில்லை. சிறிது நேரத்தில் ஆமினா அவர்கள், அருமை மகன் முஹம்மதுவை விட்டு விட்டு, அந்த இடத்திலேயே மரணித்தார்கள். அங்கேயே அடக்கம் செய்யப் பட்டார்கள். அந்த இடத்திற்குப் பெயர் அல்அப்வஉ. இது ஒரு கிராமமாகும். அவர்கள் இறக்கும் போது வயது முப்பது. பெருமானாருக்கு ஆறு வயது. ஆமினா இறந்தவுடன் அடிமை உம்முஐமன் குழந்தையை மக்காவில் பாட்டனார் அப்துல் முத்தலிபிடம் ஒப்படைத்தார்.

# 9. பாட்டனார் அப்துல் முத்தலிபின் வளர்ப்பில்

**கேள்வி: அப்துல் முத்தலிபு அவர்களின் இயற்பெயர் என்ன?**

பதில் : நபிகள் பெருமானாருடைய பாட்டனாரான அப்துல் முத்தலிபு அவர்களுக்கு, அவர்களின் தாயார் இட்ட பெயர் ஆமிர் என்பதாகும். இவர் பிறக்கும் பொழுது தலையில் நெற்றியில் முடி நரைத்து இருந்ததால், ஷைபா (தலை நரைத்தவர்) என்று அழைப்பார்கள். இவர் எப்பொழுதும் உணவு அருந்துவதற்கு முன் தம் உணவிலிருந்து பறவை களுக்கு அன்போடு கொடுத்து மகிழ்வார். இதனால், மக்கள் இவரை முத்யிமுத் தைர் அதாவது பறவைகளுக்கு உணவளிப்பவர் என்றும் சொல்வார்கள். அரபு நாட்டில் மழையின்றி மக்கள் கஷ்டப்பட்ட நேரத்தில், குறைஷி மக்களுக்கு தாராளமாக நல்ல உதவிகளைச் செய்து வந்தார். மேலும், பொது மக்களின் கஷ்டங்களைப் போக்குவதிலும் தீவிரமாகப் பாடுபடுவார். இதனால் இவருக்கு பய்யாஸ் (கொடை வள்ளல்) என்ற பெயரும்உண்டு. குறைஷியர்களால்

மிகவும் அன்போடு வரவேற்கக் கூடிய மாபெரும் தலைவராக வும் விளங்கினார்.

**கேள்வி: இவருடைய சிறப்பான குணங்கள் யாவை?**

பதில் : இவர் இறைபக்தி மிகுந்தவர். ரமலான் மாதம் பிறந்தால், ஹிரா மலைக்குச் சென்று தனிமையிலிருந்து வணங்குவார். அங்கு வரும் எளிய மக்களுக்கு உணவளித்து பொருள்களும் கொடுப்பார். தம்முடைய கடைசி காலத்தில் சிலை வணக்கத்தை விட்டு விலகி, ஏகதெய்வ வணக்கஸ்தராக மாறினார். அக்கிரமம் செய்தல், மற்ற மக்களுக்கு தீங்கிழைத்தல், அநியாயம் செய்தல், பிறருடைய சொத்துக்களை அபகரித்தல் ஆகியவற்றை விலக்கியதுடன் உயர்ந்த மக்கள் மதிக்கத்தக்க நடைமுறைகளைப் பின்பற்ற வேண்டும் என்றும் தம் மக்களிடம் வலியுறுத்தினார். வேண்டுதல் செய்தால் (இறைவனின் பெயரில்) அதனைப் பரிபூரணமாக நிறைவேற்ற வேண்டும். மணம் செய்ய தகுதியில்லா உறவுப் பெண்களை நிக்காஹ் செய்யக் கூடாது. மதுபானம் அருந்தலாகாது. குழந்தைகளை பலியிடுதல் கூடாது. விபச்சாரம் செய்யலாகாது. விபச்சாரம் செய்பவர் களுக்குச் சவுக்கடி கொடுக்க வேண்டும். சங்கை பொருந்திய நான்கு மாதங்களில் போர் செய்தல், கொள்ளையடித்தல், கொலை செய்தல் கூடாது. இதற்கு மாறுதலாக நடக்கும் கொலைக் குற்றத்திற்கு நூறு ஒட்டகங்களை நஷ்ட ஈடாகக் கொடுக்க வேண்டும் போன்றவை இவருடைய உபதேசங்களாகும்.

ஜம்ஜம் கிணறு வெட்டும் பொழுது, எத்தனையோ தகராறுகள் நடந்த போதிலும், அதிலிருந்து ஊறிய தண்ணீரை அனைத்து மக்களும் பருகிக் கொள்ள ஏற்பாடு செய்தார்.

இவருடைய நெற்றியில் ஒரு விதமான பிரகாசம் தென்பட்டதால், அரசர்களும், முக்கிய பிரதானிகளும் இவருக்குப் பெரும் மரியாதை செய்வார்கள். கொடுத்த வாக்கை நிறைவேற்றுகின்ற உயர்ந்த எண்ணத்தைக் கொண்டவராக இருந்தார்.

கொடுத்த வாக்கைக் காப்பாற்றுகின்றவர் என்பதற்கு எடுத்துக் காட்டாக ஒரு நிகழ்ச்சியினை இங்கு குறிப்பிடு கிறோம். அதாவது ஹலரத் இஸ்மாயீல் (அலை) அவர்கள் காரணமாக கட்டப்பட்ட ஜம்ஜம் கிணறு மக்காவை ஆட்சி செய்த ஒரு சிலரால் மூடப்பட்டது. பின்பு அதைத் திறப்பதற்கு எந்தக்கோத்திரத்தாரும் முன் வரவில்லை. அந்த நேரத்தில் அப்துல் முத்தலிபு அவர்களும் அவர்களுடைய மூத்தமகன் ஹாரிதும் அதைத் தோண்டினார்கள். மூன்று நாட்களுக்கு அப்புறம் பனூ ஜுர்ஹும் கோத்திரத்தார் ஒரு காலத்தில் இக்கிணற்றில் போட்ட ஆயுதங்கள் வெளிவந்தன.

இதைப் பார்த்தவுடன் மற்ற மக்கள் எல்லோரும் இந்த கிணற்றின் மீது உரிமை கொண்டாடி, வேலை செய்ய வந்தனர். ஆனால் அப்துல் முத்தலிபு இவர்கள் வந்து வேலை செய்வதை விரும்பவில்லை. இதனால் தகராறு ஏற்பட்டது. அவர்களுடைய தகராறு தாங்கமுடியாமலும், ஒத்துழைப்பதற்கு ஆட்கள் இல்லாத கஷ்டநிலை தாங்க முடியாமலும், இறைவனிடத்தில்; ''கிருபையுயர்ந்த இறைவனே! வாலிபமான எனக்கு பத்துப் புதல்வர்கள் இருந்தால் இப்பேர்ப்பட்ட கஷ்டம் வராதே! பத்துப் புதல்வர்களும் எனக்கு இருந்து அவர்கள் வாலிபர்களானால், அவர்களில் ஒருவரை அறுத்து பலி இடுகிறேன்'' என்று வேண்டுதல் செய்து கொண்டார். மாபெரும் தகராறுகளுக்குப் பின்பு பழைய கிணற்றைப் புதுப்பிக்கும் வேலை இவரால் பூர்த்தியாயிற்று.

இவர் இறைவனிடம் வேண்டிக் கொண்டதற்கிணங்க பத்துக்கும் அதிகமான ஆண் குழந்தைகளுக்குத் தந்தையாகி விட்டபடியால், வேண்டுதலை நிறைவேற்றிட வேண்டும் என முடிவு செய்து தன் அருமை ஆண்மக்கள் அனைவரையும் அழைத்து தாம் இறைவனிடம் வேண்டுதல் செய்திருந்ததைப் பற்றிக் கூறினார். அதற்கு அந்த மக்கள் அனைவருமே ஒரே குரலில் நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று தந்தையைக் கேட்டார்கள்.

அதற்கு, தந்தை அவர்கள், ''உங்களில் ஒவ்வொருவரும் ஓர் அம்பை எடுத்து அதில் உங்கள்பெயரை எழுதிக் கொள்ளுங்கள்,'' என்றார். அவர்களும் அவ்வாறே செய்தார்கள். இவை அனைத்தையும் எடுத்து கஃபாவில் ஹுபல் என்ற சாமியின் பக்கத்தில் வைத்து அம்புக்குறி பார்ப்பவர்களிடத்தில் நம் வேண்டுதலைக் கூறி தம் புதல்வர்களின் பெயர்கள் எழுதப்பட்டிருக்கும் அம்புகளின் மீது அவரது அம்பை எய்யும்படி கேட்டுக் கொண்டார்.

அவர் அதற்கு இணங்கி, அவரது அம்பை எய்தார். அந்த அம்பானது, அப்துல்லாஹ் என்று எழுதப்பட்டிருந்த அம்பின் மீது நேராகப் பாய்ந்து நின்றது. இதே போன்று ஒரு முறையல்ல, இரு முறையல்ல, மூன்று முறை செய்யப்பட்டது. மூன்று முறையும் அப்துல்லாஹ்வின் பெயர் எழுதப்பட்ட அம்பின் மீது அவருடைய அம்பானது தைத்து நின்றது.

இதைப் பார்த்தவுடன் அப்துல் முத்தலிபானவர் தம் செல்வ மகன் கரத்தைப் பிடித்துக் கொண்டு குறைஷியர் அக்காலத்தில் சிறப்பாக வணங்கி வந்த அஸாப், நாயிலா என்ற விக்கிரகங்கள் இருந்த இடத்துக்கு வந்தார். அங்குதான் எப்பொழுதும் பலியிடுவது வழக்கம்.

இவர் வருகின்ற வேகத்தைப் பார்த்தவுடன் அங்குள்ள குறைஷி மக்களும் உறவினர்களும், ''இவ்வளவு வேகமாக எங்கு செல்கின்றீர்கள்?'' என்று கேட்டனர். ''என் மகனை அறுத்துப் பலியிடுவதற்காகச் செல்கிறேன். இதற்கு என் மகனும் ஒத்துக் கொண்டார்,'' என்று சொன்னார். இருந்த போதிலும் குறைஷியரும், அவர் உறவினர்களும் இதை எதிர்த்தார்கள். இன்றைக்கு இந்த பலியை நீர் செய்வீரானால், எதிர்காலத்தில் தோன்றுகிற நம்குலத்தவர்கள் தாம் பெற்ற குழந்தைகளையே அறுத்து பலியிடத் தொடங்கிவிடுவார்கள். இதை ஒரு பரம்பரை வழக்கமாக அவர்கள் கருதிக் கொள்வார்கள்'' என்று சொல்லித் தடுத்தார்கள்.

இதற்குப் பதிலாக, வேறொரு பரிகாரத்தைக் கண்டு பிடிக்கலாம். அதற்கு எங்களுடைய பொருளுதவி தேவைப்

பட்டாலும், நாங்கள் தரத் தயாராக இருக்கிறோம் என்று பெரியவர்கள் ஒரு சிலர் கூறினார்கள்.

ஆனால், அப்துல் முத்தலிபின் மற்ற மக்கள் பத்து ஒட்டகங்களை அறுத்துப் பலியிடலாம் என்று தம்தந்தையிடம் கூறினார்கள். அந்தக் காலத்தில் கொலைக் குற்றத்துக்குப் பரிகாரமாகப் பத்து ஒட்டகங்களை (நஷ்ட ஈடாக) கொடுப்பது வழக்கமாக இருந்தது. ஆனபடியால், ஒருகுறிகாரியிடம் சென்றார்கள். பத்து ஒட்டகங்கள் என்று எழுதிய ஒரு சீட்டையும் வைத்து அம்புக்குறி பார்த்தார்கள். அப்துல்லாஹ் வின் பெயர் விழுந்துவிட்டால், மேலும் பத்து ஒட்டகங்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இவ்வாறாக நூறு ஒட்டகங்கள் என்ற சீட்டு போடப்பட்டபோது தான் ஒட்டகையின் பெயருக்குச் சீட்டு விழுந்தது. நூறு ஒட்டகங்களை அறுத்து பலியிட்டு தம் வேண்டுதலை நிறைவேற்றினார்.

அன்று முதல் மக்காவில் கொலைக்கு நஷ்டஈடு நூறு ஒட்டகங்கள் என்று வழக்கத்தில் வந்துவிட்டது. இதிலிருந்து அப்துல் முத்தலிபு அவர்கள் தெய்வத்திற்குக் கொடுத்த வாக்காக இருந்தாலும் சரி, மனிதர்களுக்கு கொடுக்கும் வாக்காக இருந்தாலும் சரி, அதனை முறையோடு செய்து முடித்து விடுவார் என்பது புலனாகிறது.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களை பாட்டனார் அப்துல் முத்தலிபு தம் பராமரிப்பில் எவ்வளவு காலம் வைத்திருந்தார்கள்?**

பதில் : ஆமினா அம்மாள் இறந்த பின் பெருமானார், அப்துல் முத்தலிபிடம் சுமார் இரண்டு ஆண்டுகள் இருந்தார்கள்.

# 10. ஸைபுப்னு தூயஸின் அல்ஹிம்யரீ

**கேள்வி: ஸைபுப்னு தூயஸின் என்பவர் யார்?**

பதில் : இவர் ஹிம்யர் என்ற அரச குடும்பத்தைச் சேர்ந்தவர். இவருடைய உதவியினால் தான் எமன் தேசத்து மக்கள் அபிஸீனியரை எதிர்த்துப் போர் புரிந்தார்கள். இவருடைய முழு உதவியோடு, அபிஸீனியரை எதிர்த்து எமன் தேசத்து மக்களுக்கு நாட்டைத் திருப்பிக் கொடுத்ததால் இவரே எமன் தேசத்து அதிபதியானார். இவரை அபூமுர்ரா என்றும் அழைப்பார்கள்.

**கேள்வி: எமன் தேசம் சுதந்திரம் பெற்ற போது அரபி மக்கள் என்ன செய்தார்கள்?**

பதில் : பாரசீகர்களின் உதவியோடு நாட்டினைக் கைப்பற்றி எமன் தேசத்து மக்கள் சுயேச்சை அடைந்ததைக் குறித்து, அரபு நாட்டு மக்கள் குதூகலமடைந்தனர். அரபு நாட்டின் பல கோத்திரத்தாரும் தங்களுடைய தூதுவர்களை புது அதிபரான ஸைபுப்னு தூயஸினுக்கு வாழ்த்துச் செய்திகளுடன் அனுப்பினர். அக்காலத்தில் திருமக்காவின் தலைவராக இருந்த அப்துல் முத்தலிபும் குறைஷித் தலைவர்களில் அஸதுப்னு அப்தில் உஸ்ஸா போன்ற இன்னும் மூன்று தலைவர்களும், அடங்கிய தூதுக்கோஷ்டி ஒன்று எமன் நாட்டிற்குச் சென்று ‘ஸன்ஆ’ விலுள்ள கும்தான் என்ற அரச மாளிகைக்குச் சென்று அதிபரைக் கண்டு தம் வாழ்த்துக் களைத் தெரிவித்துக் கொண்டனர். அதிபரும் இவர்களின் வாழ்த்துக்களைப் பெற்றுக் கொண்டு, ஒரு மாதம் அவர்களைத் தம் சொந்த விருந்தினராக வைத்துக் கொண்டார்.

## இருவரும் தனிமையில் ஆற்றிய உரை

**கேள்வி: அதிபருக்கும் அப்துல் முத்தலிபுக்கும் தனி மையில் நடந்த பேச்சுகள் என்ன?**

பதில் : அதிபர் ஸைபு, அப்துல் முத்தலிபை தனிமையில் அழைத்து எனக்குத் தெரிந்த ஒரு நல்ல விஷயத்தை உங்களுக்கு சொல்லப் போகிறேன். இது வரைக்கும் இந்த விஷயத்தை நான் யாரிடத்திலும் வெளியிட்டதில்லை. ஏனென்றால், இந்தச் செய்திக்குப் பொருத்தமானவரும், உரிமையானவரும், நீங்கள் தான். இதனால் உங்களிடத்தில் நான் அறிவிக்கிறேன். இந்தச் செய்தியானது அதுவாக வெளியாகும் காலத்தில் நல்லபடி வெளிவரட்டும். எங்களிடத்தில் முக்கியமான ஒரு செய்தி இருக்கிறது. அந்த நூலை அடுத்த மதத்தினர்களுக்கு நாங்கள் காட்டமாட்டோம். அப்பேர்ப்பட்ட செய்தி உங்களுக்குச் சொந்தமாகவும் உங்கள் சமூகத்தாருக்குப் பொதுவாகவும் இருக்கிறது.

இதைக் கேட்டவுடன், அப்துல் முத்தலிபு அதிபர் ஸைபை நோக்கி, ''அரசே! நல்லது அந்த விஷயத்தை அறிவியுங்கள்'' என்றார் ஆவலோடு.

''அப்துல் முத்தலிபே! மக்காவில் ஒரு குழந்தை பிறக்கும். அதன் இரண்டு தோள்களுக்கும் மத்தியில் ஓர் அடையாளக்குறி இருக்கும். இந்த உலகம் முடியும் வரையில், அக்குழந்தைக்கு தலைமைப்பதவி இருக்கும்'' என்று சொன்னார் ஸைபு.

இதைக் கேட்ட அப்துல் முத்தலிபு அவர்கள், அதிபரைப் பார்த்து, ''இக்குழந்தையைப் பற்றி மேலும் தாங்கள் அறிந்த விபரங்களை கூறுவீர்களேயானால் நலமாக இருக்கும்'' என்றார்.

அதற்கு அதிபர், அப்துல் முத்தலிபு அவர்களே, அப்பேர்ப்பட்ட புனிதமான ஆண் குழந்தை பிறப்பதற்குரிய காலம் இதுதான். இதற்குள்ளாக அந்த குழந்தை பிறந்தி

ருந்தாலும் பிறந்திருக்கலாம். அக்குழந்தையை வளர்க்கும் பொறுப்பை, தந்தையைப் பெற்ற பாட்டனும், தந்தை உடன் பிறந்தவர்களும் பொறுப்பாக ஏற்று வளர்ப்பார்கள். இவ்வாறாக நாங்கள் பலமுறை எங்களது வேதத்தினைக் கற்ற பெரியார்கள் சொல்லக் கேள்விப் பட்டிருக்கிறோம். இந்தச் செய்தியினை மக்களுக்கு அறிவிக்கின்றவன் எல்லம் வல்ல இறைவனாக இருக்கின்றான். எங்களிலிருந்தும் உதவி செய்வதற்கு அவருக்கு ஆட்கள் முன்வருவார்கள். அவர்களை எந்தப் பகைவர்கள் எதிர்க்கின்றார்களோ, அந்தப் பகைவர்கள், அவராலே தோல்வி அடைவார்கள். இன்னும் தம் திறமையைக் கொண்டு பல நாடுகளை வெற்றி கொள்வார். இவ்வாறு வெல்லப்பட்ட மக்கள் அவர் பின்பற்றுகின்ற மதத்தில் இணைந்து கொள்வர்.

உருவ வணக்க வழிபாடுகள் மறையும். அவருடைய சொல் எப்பொழுதும் உறுதியாகவும் மக்களுக்கு நல்லதொரு தீர்ப்பாகவும் இருக்கும். அவருடைய கட்டளை நீதியின் அடிப்படையில் இருக்கும். நல்லதைச் செய்யச் சொல்லி மக்களை ஏவுவார். தீயவற்றைக் கண்டு தாம் ஒதுங்கி நடப்பதோடு, தம்மைப் பின்பற்றி நடக்கும் மக்களையும் அவற்றிலிருந்து விலகச் செய்வார் என்பதாகச் சொன்னார்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட அப்துல் முத்தலிபு அவர்கள் மலர்ந்த முகத்தோடு புன் சிரிப்புச் சிரித்தார். மீண்டும் அதிபர் குறி சொல்பவர்களைப் போன்று ''நான் மேல் சொன்ன அடையாளங்கள் யாவும் அப்துல் முத்தலிபு அவர்களே, உங்களுடைய பேரனுக்குத்தான் இருக்கிறது. இது முற்றிலும் உண்மை'' என்றார். உடனே அப்துல் முத்தலிபு எழுந்து, அதிபருக்கு நன்றி தெரிவித்துச் சொன்னார்கள்.

''அதிபர் அவர்களே! எனக்கொரு செல்வ மகன் இருந்தார். அவருடைய பெயர் அப்துல்லாஹ். அவருக்கு எங்களது வம்சத்திலே உயர்ந்த குடும்பத்தில் வஹ்புடைய மகள் ஆமினா என்ற பெண்ணைத் திருமணம் செய்து வைத்தேன். அவர்கள் இருவருக்கும் பிறந்ததுதான் என்னி

டத்தில் இப்பொழுது இருக்கும் என் பிரியமுள்ள பேரன் முஹம்மது என்பவர். நீங்கள் இப்போது சொன்ன அடையாளங்கள் அனைத்தும் அவர் பெற்றிருக்கிறார். ஆனால் அவருடைய தந்தையும், தாயும் காலமாகிவிட்டனர். நானும் எனது மகன், அதாவது அவருடைய பெரிய தந்தை அபூதாலிபும் அவரைப் பாதுகாத்து வருகிறோம்'' என்றார்.

இதனைக் கேட்ட அதிபர்; ''நான் சொன்ன அத்தனையும் உண்மை என்பதை நீங்கள் ஒப்புக் கொண்டீர்கள். இந்தக் குழந்தையை நல்ல பாதுகாப்பாக வளர்த்துக் கொள்ளுங்கள். ஏனென்றால் யூதர்களால் இக்குழந்தைக்குத் தீங்கு ஏற்படலாம். ஆனால், இறைவன் இவர்களுக்கு தக்க பாதுகாப்பு அளிப்பான். அவர் புனிதமானவர். சிறந்த மேதை. ஆனால், அவர் அதிகாரத்திற்கு வரக்கூடிய நாளையிலே மரணம் என்னைப் பற்றிக் கொள்ளும். அப்படி அந்நேரம் நான் மரணிக்காமல் இருப்பேனேயானால்நிச்சயமாக என் குதிரைப் படையுடன் அவருக்கு உதவியாக இருக்கும் நாடான யத்ரிபுக்குச் சென்று அவருக்கு எந்தவிதமான ஆபத்தும் வராமல் பாதுகாத்துக் கொள்வேன். அவருக்கு ஆபத்து வரவேண்டும் என்று நான் நினைத்திருப்பேனேயானால், இப்பொழுது உங்களிடம் சொன்ன எதையும் உங்களிடம் தனித்துக் கூறாமல் நான் பகிரங்கமாக அறிவித்திருப்பேன். உடனே இந்த அறிவிப்பைக் கேட்டவுடன் இவரைப் பலி வாங்க மக்கள் பின் தொடர்ந்து வரக்கூடும். ஆகையால் இக் குழந்தையை பக்குவமாக பத்திரமாக வளர்த்து வரவேண்டும்'' என்று சொன்னார்.

**கேள்வி: வாழ்த்துச் செய்தியைக் கொண்டு வந்த குறைஷித் தூதுவர்களுக்கு அதிபர் ஸைபு என்ன அன்பளிப்புக் கொடுத்தார்?**

பதில் : வாழ்த்துச் செய்தி கொண்டு வந்த குறைஷி தூதுக் கோஷ்டியினர் ஒவ்வொருவருக்கும் தனித் தனியாகப் பத்து அடிமைகளையும், பத்து வெள்ளாட்டிகளையும் ஐந்து

ராத்தல் வெள்ளியையும், எமன் தேச உடைகள் இரண்டினையும், வாசனைக் குடுவை ஒன்றையும் வெகுமதியாக அளித்தார். இன்னும் பல பொருட்களையும் வெகுமதி அளித்ததாக சரித்திர ஆசிரியர்கள் கூறுகிறார்கள்.

**கேள்வி: அப்துல் முத்தலிபு அவர்களுக்கு அன்பளிப்பாக கொடுக்கப்பட்டவை என்ன?**

பதில் : குறைஷித் தூதுவர் ஒவ்வொருவருக்கும் கொடுத்த பங்கைப் போன்று பத்து மடங்கு கொடுத்து, ஒரு வருடத்திற்கப்புறம் ''இந்தக் குழந்தையினுடைய முன்னேற்றத்தைப் பற்றிச் செய்தி அனுப்ப வேண்டும்'' என்று சொன்னார். ஆனால் மறுவருடமே அதிபர் ஸைபுப்னுதீயஸின் மரணமாகிவிட்டார்.

**தனிக்கவனம்**

**கேள்வி: எமன் தேசத்திற்கு சென்று வந்த பின் அப்துல் முத்தபு நாயகம் (ஸல்) அவர்களை எவ்விதம் வளர்த்தார்?**

பதில் : எமன் தேசத்திற்குச் சென்று வந்தபின் அப்துல் முத்தலிபு தம் பேரன் முஹம்மது (ஸல்) அவர்களை மிக்க கவனத்தோடும் 'தந்தை இல்லையே' என்ற எண்ணம் வராத அளவுக்கு சீரும், சிறப்புமாக வளர்ந்து வந்தார். அப்துல் முத்தலிபு அவர்கள் குறைஷித் தலைவராக இருந்த காரணத்தால், பொது இடங்களுக்குச் செல்லும்போது, தம் செல்லப்பேரனைக் கூடவே அழைத்துச் செல்வார்.

அப்துல் முத்தலிபு அவர்கள் கஃபத்துல்லாவிற்குச் சென்றால் கஃபாவின் முன் வந்து அவர் அமர்ந்தால், அவருக்கென ஓரிடம் தனியாக ஒதுக்கி வைககப்படுவது வழக்கம். அவருக்கு எதிரில்தான் மற்ற யாவரும் மரியாதையோடு அமர்வார்கள். அவரோடு சரிசமமாக யாரும் அமரமாட்டார்கள். அப்பேர்ப்பட்ட இடங்களுக்குச் செல்லும் பொழுது, நபி (ஸல்) அவர்களை தமக்கு அருகாமையிலேயே

அமர்த்திக் கொள்வார்கள். "ஏன் இப்படி அருகாமையில் அமர்த்திக் கொள்ளுகிறீர்கள்?" என்று தம் குழந்தைகள் கேட்டால்; "இவருடைய எதிர்காலத்தைப் பற்றி, உங்களுக்குத் தெரியாது. உங்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ள இடங்களில் நீங்கள் இருந்து கொள்ளுங்கள். பேரன் முஹம்மது என்னுடனேயே இருந்து கொள்ளட்டும்" என்பார். இதுபோன்று அனைத்து விஷயத்திலும் இளமையிலேயே பெருமானாருக்கு பாட்டனார் உயர்ந்த மதிப்புக் கொடுத்து வளர்த்தார்கள். நாளடைவில் அப்துல் முத்தலிபுக்கு வயது அதிகமாக, உடல் தளரலாயிற்று. "பேரக் குழந்தையை தமக்குப் பின்னே தம்மைப் போல் சீரும், சிறப்புமாக யார் வளர்ப்பார்கள்? தம் மக்களில் யாரிடம் இக்குழந்தையை ஒப்படைப்பது?" என்பதை அறிவதற்காக தம் ஆண்மக்கள் அனைவரையும் அழைத்து வந்து குழந்தையை வளர்ப்பதற்குத் தகுதியானவர் யார் என்று தேர்ந்தெடுக்கிறார்.

## 11. நபி (ஸல்) அவர்களை வளர்ப்பதற்கு தகுதியானவர் யார்?

**கேள்வி: பெருமானாரை வளர்ப்பதற்கு அபூதாலிப் அவர்கள் தாம் சிறந்தவர் என்று எவ்வாறு அப்துல் முத்தலிபு தேர்ந்தெடுத்தார்?**

பதில் : ஒரு நாள் அப்துல் முத்தலிபுக்குத் தம் பேரன் முஹம்மது நபி (ஸல்) அவர்களைத் தம் மரணத்திற்குப் பின் யாரும் பொறுப்புடன் வளர்க்க மாட்டார்களோ, என்ற எண்ணம் உண்டாயிற்று. இருந்த போதிலும் தாம் உயிருடன் இருக்கும்போதே இந்த தாயும், தந்தையும் அற்ற ஏழைக் குழந்தையைப் பொறுப்புள்ள தம் மக்கள் யாராவது ஒருவரிடத்தில் ஒப்படைத்துவிட வேண்டும் என்பதற்காகத் தம் ஆண் மக்கள் அனைவரையும் அழைத்து ஆலோசனை செய்தார்.

"இந்தக் குழந்தையை எனது மரணத்திற்குப் பின்பு யார் பாதுகாத்து வளர்ப்பார்கள்?" என்று கேட்டார். முதன் முதலில் அபூலஹப் என்பவர் அக்குழந்தையை வளர்க்கும் பொறுப்பை தாம் ஏற்றுக் கொள்வதாகச் சொன்னார். அதற்கு அப்துல் முத்தலிபு அவர்கள் "நீயோ, பெரிய பணக்காரன், உன் மனம் இரக்கமற்றது. உடைக்க முடியாத கல்லைப் போன்றது. ஆதலால் தாய், தந்தையில்லா இந்தக் குழந்தையை நீ திருப்திகரமாக வளர்க்க முடியாது. உன்னுடைய ஈவு இரக்கமற்ற எண்ணத்தினாலும் கடினமான குணத்தாலும் இந்தக் குழந்தைக்கு ஏதாவது சஞ்சலம் உண்டாகும் என்று நான் அஞ்சுகிறேன். ஆகவே, இந்தக் குழந்தையை வளர்க்கும் பொறுப்பை நீ ஏற்றுக் கொள்ளமுடியாது" என்று அப்துல் முத்தலிபு சொல்லிவிட்டார்.

அடுத்து ஹம்ஸா (ரலி) அவர்கள் பொறுப்பைத் தாம் ஏற்றுக் கொள்வதாகச் சொன்னார்கள். அதற்கு அப்துல் முத்தலிபு "நீ இதுவரைக்கும் குழந்தைப் பாக்கியம் இல்லாதிருக்கின்றாய். எனவே இந்த அனாதைக் குழந்தை யினுடைய பரிதாப நிலையை உணர மாட்டாய். ஆகையால் நீயும் இதை வளர்ப்பதற்குத் தகுதியற்றவனாகிவிட்டாய், "என்று அப்துல் முத்தலிபு சொன்னார். பின்னர், ஹலரத் அப்பாஸ் அவர்கள்; "குழந்தையை நல்லபடியாக வளர்க்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன் தந்தையே!" என்று கூறினார்கள். அதற்கு அப்துல் முத்தலிபு; "அப்பாஸ், உனக்குக் குழந்தைகள் அதிகம். தாய் தகப்பனற்ற இந்தக் குழந்தையை அந்தக் குழந்தைகளோடு நிம்மதியாக வளர்க்க இயலாது," என்று கூறிவிட்டார். கடைசியாக அபூதாலிபின் முறை வந்தது.

அபூதாலிப் பின்வருமாறு கூறினார் : "அன்புத் தந்தையே! உங்களுக்குத் தெரியும். நான் அதிகம் செல்வம் படைத்தவனோ பல பிள்ளைகள் உள்ளவனோ அல்லன். இந்தக் குழந்தையை வளர்ப்பதற்கு நான் தகுதி உள்ளவன் என்று உங்களுக்கு தோன்றினால், என்னிடம் ஒப்படைக்

கலாம். நான் முழுமனதுடன் அப்பொறுப்பை ஏற்றுக் கொள்வேன்.'' உடனே அப்துல்முத்தலிபு, 'இந்தக் குழந்தையை வளர்க்கும் திறமை உனக்கு இருக்கிறது. மேலும் நீயும் அப்துல்லாஹ்வும் ஒரு தாய்க்குப் பிறந்தவர்கள். ஆகவே சகோதரனின் மகன் என்ற பாசமும் உனக்கு இருக்கும் என்பது எனக்குத் தெரியும். இருந்தபோதிலும் இந்தக் குழந்தையே யாரிடத்தில் வளரப் பிரியமுள்ளதாக இருக்கிறது என்பதை முடிவு செய்யட்டும்!'' என்றார்.

அதன் பிறகு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை அழைத்து, ''என் கண்மணியே! எனக்கு வயது அதிகமாகி நரம்புகள் தளர்ந்து போயின. அதிக நாள் வாழ்வேன் என்ற நம்பிக்கை எனக்கில்லை. உம் சிறிய, பெரிய தந்தைமார்கள் எனக்குப் பின் உம்மைப் பொறுப்பேற்று நல்லமுறையில் வளர்ப்பதாகச் சொல்கிறார்கள். இவர்களில் எவரிடம் நீர் வளர்வதற்குப் பிரியப்படுகிறீர்?'' என்று கேட்டார்.

உடனே பெருமானார் (ஸல்) தம் பெரிய தந்தை அபூதாலிப் அவர்களது மடியில் சிரித்த முகத்துடன் அமர்ந்து கொண்டார்கள். இந்தக் காட்சியைக் கண்டவுடன் பாட்டனார் அப்துல் முத்தலிபு கண்களிலிருந்து நீர் சொரிய தம் மகனை நோக்கி, ''அபூதாலிப்! எந்தப் பாவமும் அறியா இக் குழந்தையை வளர்க்கும் பொறுப்பை நீரே ஏற்றுக் கொள்வீராக! தந்தையினுடைய அன்பும், பாசமும், இப்படித் தான் இருக்கும் என்பதை அறியா என் கண்மணியை நீர் நல்லபடியாக, எந்தக் குறையும் இல்லாது வளர்த்து வரவேண்டும்,'' என்று அபூதாலிபிடம் ஒப்படைத்தார். ஜம்ஜம் கிணறு அப்துல் முத்தலிபு அவர்களால் மீண்டும் தோண்டி, புனரமைக்கப் பெற்றது. இப்போது, இதனுடைய முழு உரிமையும் அப்துல் முத்தலிபிடமே இருக்கிறது. ஆகவே தம் மரணத்திற்குப் பின்னும் இந்தக் கிணற்று நீரை வினியோகம் செய்யும் உரிமையை அருமை மகனார் அபூதாலிப் அவர்களுக்கு கொடுத்தார். தம்முடைய அடுத்த மகனான

ஜுபைர் என்பவருக்கு கஃபாவின் நிர்வாகத்தினையும் தலைமைப் பதவியையும் ஒப்புவித்தார்.

**கேள்வி: அப்துல் முத்தலிபு அவர்கள் எப்பொழுது மரணித்தார்கள்? அப்பொழுது வயது என்ன? அவரது உடல் எங்கு அடக்கம் செய்யப்பட்டது?**

பதில் : நபி (ஸல்) அவர்களின் எட்டாவது வயதில் பாட்டனார் அப்துல் முத்தலிபு மக்காவில் கி.பி. 578ஆம் வருடம் (அதாவது யானைச் சண்டை நடந்து முடிந்த எட்டாம் ஆண்டில்) காலமானார். அப்பொழுது அன்னாருக்கு வயது எண்பது என்று இப்னு ஹிஷாம் போன்ற வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். அப்துல் முத்தலிபின் ஜனாஸா மக்காவின் ஹஜூன் என்ற இடத்தில், அவருடைய பாட்டனார் கிலாபின் கப்ருக்கு அருகாமையில் அடக்கம் செய்யப்பட்டது.

## 12. நபி [ஸல்] அவர்கள் அபூதாலிபிடம் வளர்தல்

**கேள்வி: அபூதாலிப், நபி (ஸல்) அவர்களை வளர்த்த முறை யாது?**

பதில் : அபூதாலிப் பெருமானாரைத் தாம் பெற்ற மக்களைவிட உயிருக்கு உயிராகப் பாதுகாத்து வளர்த்தார்கள். தம் பிள்ளைகளை விட நபி பெருமானாருக்கே அவர் முக்கியத்துவம் கொடுப்பார். தூங்கச் செல்லும் பொழுதுகூட பெருமானார் அவர்களைத் தம்முடன் தூங்க வைப்பார். வெளியில் செல்வதாக இருந்தாலும், அவர்களை அழைத்துச் செல்வார்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் சிறு குழந்தையாக இருக்கும் போது விளையாடுவார்களா?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் சிறு பிராயமாக இருக்கும் போது அவர்கள் வயதை ஒத்த குழந்தைகள் கூப்பிட்டால்

''மனிதன் இந்த உலகத்தில் நன்மையைத் தருகின்ற மேன்மையான காரியங்களுக்காக படைக்கப் பட்டிருக் கின்றானே அன்றி, நகைப்புத் தரக்கூடிய விளையாட்டுக் காரியங்களில் ஈடுபடுவதற்குப் படைக்கப்படவில்லை'' என்று கூறிவிடுவார்கள். இளம் வயதிலேயே இவர்கள் புத்தி கூர்மையுள்ளவராகவும், சுறுசுறுப்பு மிக்கவர்களாகவும் திகழ்ந்தார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் கல்வி கற்றிருக் கிறார்களா?**

பதில் : இல்லை. துன்யாவின் கல்வி கற்காத ஒரு காரணத்தால் இவர்களை உம்மி நபி என்று சொல்வார்கள். உம்மி நபி என்றால் கல்விச் சாலையில் படித்தறியா நபி என்று பொருள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் இளமையில் ஆடு மேய்த்தார்களா?**

பதில் : ஆம், ஆடு மேய்த்தார்கள். அபூதாலிப் அவர்களிடத்தில் இருக்கும்போது அவர்களோடு சேர்ந்து ஆடு மேய்த்தார்கள். ஹலீமா வளர்க்கும்போது அவருடைய குழந்தைகளோடு நபி (ஸல்) அவர்களும் ஆடு மேய்த்திருக் கிறார்கள்.

## மழைக்காக துஆ கேட்டல்

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் சிறு பிராயத்தில் எதற்காக துஆக் கேட்டார்கள்?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் தம்முடைய பெரிய தந்தை அபூதாலிப் அவர்களிடம் வளர்ந்து வரும்போது, மக்காவில் கடுமையான பஞ்சம் ஏற்பட்டது. மழையில்லாத நீரோடைகள் எல்லாம் வறண்டு விட்டன. குடிப்பதற்குக் கூடத் தண்ணீர் இல்லை. இப்படி இருக்கும்பொழுது, குறைஷியர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து, ''அபூதாலிப் அவர்களே, ''வாருங்கள்! மழைக்காகப் பிரார்த்தனை செய்வோம்'' என்று

அழைத்தனர். அதற்கு அபூதாலிப் அவர்களும் வருவதாகச் சொல்லித் தாம் வளர்க்கும் அன்பு மகன் முஹம்மது நபி (ஸல்) அவர்களையும் அழைத்துக் கொண்டு, கஃபாவின் முன் சென்றார்கள். அங்கு அந்த சமயம் வானம் மேகமின்றித் தெளிவாக இருந்தது. அப்பொழுது பெருமானாரை அபூதாலிப் மழை வேண்டுமென்று பிரார்த்தனை செய்யச் சொன்னார்கள். உடனே, நபி (ஸல்) அவர்கள் தம் இருகரத்தையும் ஏந்தி, வலக்கரத்தின் இரண்டு விரல்களாலும் வானத்தினை நோக்கி சமிக்ஞை செய்தார்கள். உடனே மேகக்கூட்டங்கள் விரைந்து வந்து இருள் சூழ்ந்ததைப் போன்று ஆகிவிட்டது. பலத்த மழை பெய்தது. ஓடைகளில் நீர் பெருக்கெடுத்தது. மக்கமா நகரத்தில் வறண்டு போயிருந்த பாலைவனப் பகுதி களெல்லாம் நன்கு செழித்தன.

இதேபோன்று, அப்துல் முத்தலிபு உயிருடன் இருக்கும் போது, குறைஷியர்களும், அப்துல் முத்தலிபும் அபூகுபைஸ் என்ற மலையின் மீது ஏறி மழைக்காகப் பிரார்த்திக்கும்போது, அப்துல் முத்தலிபு பெருமானாரைத் தம் தோளில் தூக்கி வைத்துக் கொண்டார். நபி (ஸல்) அவர்கள் குழந்தையாக இருக்கும்போதே மழைக்காகப் பிரார்த்தனை செய்தார்கள் என்பதாகச் சரித்திர ஆசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள்.

## 13. ஷாம் தேசம் புறப்படுதல்

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் ஷாம் தேசத்திற்கு எப்பொழுது யாருடன் ஏன் சென்றார்கள்?**

பதில் : நபி(ஸல்)அவர்களுக்குப் பன்னிரண்டு வயதான போது அபூதாலிப் அவர்களோடு வியாபாரத்துக்காக மக்காவை விட்டு, முதன் முதலாக ஷாம் தேசம் சென்றார்கள். அப்போது ஷாம் தேசம் ரோமானியர்களின் ஆதிக்கத்திலுள்ள அரபு நாட்டுடன் இணைந்த பகுதியாக பெரிய பட்டணமாக

இருந்தது. அங்கு கிறிஸ்துவ மத அறிஞர்களும், பெரியார்களும் இருந்தனர்.

## புஹைறா

### கேள்வி: புஹைறா (பஹீறா) என்பவர் யார்?

பதில் : புஹைறா என்பவர் ஷாம் தேசத்தில் புஸ்றா என்ற ஊரிலிருந்த கிறிஸ்துவ ஆசிரமத்தின் மாபெரும் தலைவராவார். மக்காவிலிருந்து வியாபாரத்திற்காக ஷாம் தேசத்திற்கு வரும்பொழுதும் வர்த்தகத்தை முடித்துவிட்டு திரும்பித் தம் நாட்டிற்குச் செல்லும் பொழுதும் குறைஷியர் இவர் இருக்கின்ற ஆசிரமத்திற்கு அருகாமையில் தங்கிச் செல்வார்கள். அவர்களுக்கு இந்த தவசியானவர் (பாதிரியார்) எந்தத் தொந்தரவுகளும் கொடுக்க மாட்டார். யாரிடத்திலும் எதுவும் பேசவும் மாட்டார். அமைதியான முறையில் இருப்பார்.

### கேள்வி: புஹைறா யார் யாருக்கு விருந்து கொடுத்தார்?

பதில் : அபூதாலிப் அவர்களுடன் சென்றிருந்த வியாபாரிகள் அனைவருக்கும் விருந்து கொடுத்தார். இதில் சிறப்பு விருந்தினராக நபி (ஸல்) அவர்கள் கடைசியாகக் கலந்து கொண்டார்கள்.

### கேள்வி: நபி (ஸல்) அவர்கள் மட்டும் ஏன் கடைசி விருந்தினராக அழைக்கப்பட்டார்கள்?

பதில் : வியாபாரிகள் அனைவரும் தங்கள் வர்த்தகப் பொருள்களை ஆசிரமத்திற்கு அருகாமையிலுள்ள மரத்தடியில் வைத்துவிட்டு விருந்திற்குச் சென்றார்கள். அத்தோடு அபூதாலிபும் அவர்களைச் சேர்ந்த அனைவரும் சென்றார்கள். நபி (ஸல்) அவர்களை வர்த்தகப் பொருட்கள் அனைத்தையும் பாதுகாத்துக் கொள்வதற்காக, காவலுக்கு வைத்துவிட்டு சென்றார்கள்.

விருந்துக்கு எல்லோரும் வந்துவிட்டார்களா? என்று புஹைறா கேட்டார். அதற்கு அபூதாலிப் "நாங்கள் எல்லோரும் வந்துவிட்டோம். எங்களோடு வந்த சிறுவரை மட்டும் எங்களுடைய சாமான்களைப் பாதுகாப்பதற்காக மரத்திற்கு அருகாமையில் விட்டுவிட்டு வந்திருக்கிறோம்'' என்றார். இதைக் கேட்டதும் புஹைறா "உடனடியாக அந்தக் குழந்தையை அழைத்துக் கொண்டு வாருங்கள். உங்களோடு சேர்த்து அவருக்கும் தான் விருந்து வைத்திருக்கிறேன், அவரும் உங்களோடு உட்கார்ந்து சாப்பிடட்டும். உடனே அழைத்து வாருங்கள்,'' என்று சொன்னார். அதன்படி, நபி (ஸல்) அவர்கள் எல்லோரோடும் சேர்ந்து விருந்துண்டார்கள்.

விருந்து முடிந்ததும் புஹைறா, நபி (ஸல்) அவர்களின் முகத்தோற்றத்தையும் அங்க வடிவங்களையும் கூர்ந்து கவனித்தார்.

எல்லோரும் எழுந்து செல்லும் வேளையில் புஹைறா நபி (ஸல்) அவர்களைப் பார்த்து "அன்புக்குரிய பிள்ளாய்! உம்மை நான் சில கேள்விகள் கேட்க விரும்புகிறேன். நீர் சரியான விடையளிக்க வேண்டும்.'' என்று தயவோடு கேட்டுக் கொண்டார். புஹைறா கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பெருமானார் நல்லமுறையில் பதில் சொல்லி, தமது முதுகில் உள்ள மச்சத்தையும் திறந்து காட்டினார்கள். இந்நிகழ்ச்சி புஹைறா பாதிரியாரை மட்டற்ற மகிழ்ச்சியில் மூழ்கச் செய்தது.

பின்பு அவர் அபூதாலிபைப் பார்த்து, "இந்தக் குழந்தை உங்களுக்கு என்ன உறவு முறை வேண்டும்?'' எனக் கேட்டார். அதற்கு அபூதாலிப் என்னுடைய மகன் என்று சொன்னார். உடனே, அவர் "இந்தக் குழந்தைக்கு தந்தை இன்னுமா இருக்கின்றார்?'' என்று வியப்போடு வினவினார். அப்பொழுது அபூதாலிப், "இவர் என் சகோதரர் அப்துல்லாஹ்வின் அருமைப் புதல்வராவார். இவர் பிறப்பதற்கு முன்னரே தந்தை காலமாகிவிட்டார். பின்பு என்னுடைய தந்தையிடம் (அப்துல் முத்தலிபு) வளர்த்தார். அவரது மரணத்திற்குப் பின்பு, இவரை

வளர்க்கின்ற பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டிருக்கிறேன்,'' என்றார். இதை செவிமடுத்ததும் புஹைறா, ''அபூதாலிப் அவர்களே! இக்குழந்தையின் மகிழ்வான முகத்தோற்றத்தையும், திறமையாக பேசுகின்ற பேச்சையும் இவருடைய அறிவின் நுட்பத்தையும் கண்டு நான் ஆச்சரியமடைகிறேன். இந்தக் குழந்தையைத் தாங்கள் கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். இக்குழந்தை அரேபியாவில் இருக்கும் சிலை வணக்கத்தை அடியோடு ஒழிக்கும். ஹலரத் ஈஸா நபி அவர்களின் முன்னெச்சரிக்கையின்படி இறைவனால் அனுப்பப்படுகின்ற கடைசித் தூதர் இவராகத்தான் இருக்க முடியும் என்பதை நான் தெரிந்து கொண்டதைப் போன்று பிறரும் தெரிந்து கொண்டால், யூதர்களினால், இவருக்கு அதிக இடைஞ்சல் வரும். ஆனபடியினால், இக்குழந்தையை பத்திரமாக வளர்த்துக் கொள்ளுங்கள்,'' என்றார்.

## 14. ஹர்புல் ஃபுஜ்ஜார்

**கேள்வி: அக்கிரமக்காரர்களின் போர் என்று எதற்குச் சொல்வார்கள்?**

பதில் : அரபு மக்களிடையே நீண்ட நாட்களாக ஒரு பழக்கம் இருந்து வந்தது. அதாவது ரஜபு, துல்கஃதா, துல்ஹஜ்ஜு, முஹர்ரம் ஆகிய நான்கு மாதங்களிலும் போரிடவோ, கொலை, கொள்ளை போன்ற அக்கிரமங்களைச் செய்யவோ மாட்டார்கள், ஹர்புல் புஜ்ஜார் என்ற போர் புனிதமாகக் கருதப்பட்ட இந்த நான்கு மாதங்களில் தொடங்கப் பெற்றதால் இதற்கு இப்பெயர் வந்தது.

**கேள்வி: இது எத்தனை முறை நடந்தது?**

பதில் : இந்தப் போர் மொத்தம் நான்கு தடவை நடந்தது. முதல் போர், கினானா கோத்திரத்துக்கும், ஹவாஸின் கோத்திரத்துக்கும் இடையே நடந்தது. இரண்டாவது போர், குறைஷியருக்கும், கினானா கோத்திரத்தாருக்கும் இடையே நடந்தது. மூன்றாவது போர், கினானா, நள்று

கோத்திரத்தாருக்கிடையே நிகழ்ந்தது. நான்காம் போர், குறைஷியர், கினானா கோத்திரத்தார் அனைவரும் ஹவாஸின் கோத்திரத்தை எதிர்த்து நின்றனர்.

**கேள்வி: இப்போரில் பெருமானார் கலந்து கொண் டார்களா?**

பதில் : நான்காவது போரில் நாயகம் (ஸல்) கலந்து கொண்டார்கள். அப்பொழுது பெருமானாருக்கு வயது பதினைந்து (இப்னு ஹிஷாம் இருபது என்று கூறுகிறார்.) இப்போரிலும் அவர்கள் நேரிடையாக ஈடுபடவில்லை. தம் சிறிய, பெரிய தந்தையர்க்கு அம்புகளை எடுத்துக் கொடுக்கும் பணிதான் செய்தார்கள்.

**கேள்வி: இந்த நான்கு யுத்தங்களினாலும் நாட்டில் ஏற்பட்ட விளைவுகள் யாவை?**

பதில் : நாட்டின் அமைதி குலைந்தது. இதனால் மக்கள் பெருந்துன்பத்திற்கு ஆளானார்கள். சண்டையில் பலர் கொல்லப்பட்டனர். இதனால் அநாதைகளும், அகதிகளும் பெருகினர். அவர்களின் அவல நிலையைப் போக்க எவரும் முன்வரவில்லை. மாறாக, ஒரு சிலர் அவர்களிடம் எஞ்சிய பொருள்களை அனுமதி இல்லாமல் எடுத்து, உண்டு, உடுத்தி வாழ்ந்தனர்.

வலிமையற்ற ஆதரவற்ற முதியோருக்குத் தங்கும் இடங்கூடக் கொடுக்க மறுத்தனர். ஏழைகளை விரட்டியடித்தனர். இந்நிலையைக் கண்ட அண்ணலெம் பெருமானார் ஆறாத் துயர் அடைந்தார்கள். துன்பத்துக்கும், கொடுமைக்கும் ஆளான இம்மக்களுக்கு எவ்விதத்திலாவது புது வாழ்வு கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் அவர்கள் இதயத்தில் ஆழப் பதிந்தது.

**கேள்வி: இது பற்றி ஒப்பந்தம் எவ்வாறு ஏற்பட்டது?**

பதில் : நான்காம் போர் முடிந்ததும், அதில் ஒரு தரப்பினராக இருந்த குறைஷியர், போரில் ஏற்பட்ட பெருஞ்சேத்தைக் கண்டு, இனிமேல் இம்மாதிரியான போராட்டங்களும், அழிவுகளும் உண்டாகாமல் இருப்பதற்கான நடவடிக்கை எடுக்க முன் வந்தனர்.

இதில் முதன் முதலில் கவனம் செலுத்திய உயர்ந்த மனிதர் ஹாஷிம் குலப் பெருந்தகை அப்துல் முத்தலிபின் மகனார் ஜுபைர் என்பவராவர். அவருடைய கருத்தை ஹாஷிம் குலத்தாரும், ஜுஹ்ரா, தைம் கோத்திரத்தாரும் ஏற்றுக் கொண்டனர்.

இவர்கள் எல்லோரும் அப்துல்லாஹ் இப்னு ஜத்ஆன் என்பாரின் இல்லத்தில் கூடிப் பேசி முடிவெடுத்து ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார்கள்.

**உடன் படிக்கைகளின் நிபந்தனைகள் பின்வருமாறு:-**

1. துன்மார்க்கத்தை ஒழித்தல்
2. மக்கள் பயமில்லாமல் வாழ வழி செய்தல்
3. வழிப்போக்கர்களுக்கு வேண்டிய வசதி செய்து கொடுப்பதோடு, அவர்களுக்குத் தக்கபாதுகாப்பும் அளித்தல்
4. பிறரை துன்புறுத்துவோரை தண்டித்து துன்பப்பட்டோர் துயர்துடைக்க வழிவகுத்தல்
5. ஏழை எளியோர் அநாதைகள் ஆகியோர் நல்வாழ்வுக்கு வழிகாட்டுதல் ஹில்புல் ஃபுலூல் என்ற இவ்வுடன்படிக்கை நிறைவேறுவதற்கு நாயகம் (ஸல்) பெரும் பொறுப்பேற்றுக் கொண்டார்கள்.

# 15. இளமைப் பருவம்

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் இளமையில் வேடிக்கை களையும், களியாட்டங்களையும் பார்த்தார்களா?**

பதில் : இல்லை, நபி (ஸல்) அவர்களை எல்லாம் வல்ல இறைவன் இப்பூவுலகின் கண் நல்லவற்றைச் செய்யச் சொல்லி மக்களைத் தூண்டுவதற்கும், தீயவற்றில் இருந்து தடுப்பதற்கும் தான் அனுப்பினான். எனவேதான் இறைவன் நபி (ஸல்) அவர்களுக்கு மற்றவர்கள் பார்த்து வியக்கும் வண்ணம், நற்பண்புகளை அருளினான். அண்ணல் அவர்கள் இளம்வயதிலேயே சிறந்தவர்களாகவும், தீயவற்றை வெறுக்கக் கூடியவர்களாகவும் இருந்து வந்தார்கள். வேடிக்கைக்காகக் கூடப் பொய் கூறமாட்டார்கள். வீண் விளையாட்டுகளில் ஈடுபடுவது, வலிமையற்றவர்களைப் பரிகசிப்பது போன்ற தீச்செயல்களை விட்டும் ஒதுங்கியிருந்தார்கள்.

வாலிபப் பருவம் எய்தியும், வாலிபத்தின் தீச்செயல்களை விட்டும் நீங்கியிருந்தார்கள். இறைத்தூதரின் கண்ணியத்திற்கு இழுக்கு நேரும் செயல் ஏற்பட்டால் அவர்களை அக்கணமே இறைவன் அச்செயல்களிலிருந்து நீக்கிவிடுவான். இவர்கள் இளமையில் ஒருமுறை ஆடு மேய்த்துக்கொண்டிருக்கும்போது, தம் ஆடுகளை ஒரு பையனிடம் ஒப்புவித்து, ''சிறுவனே, இந்த ஆடுகள் அனைத்தையும் சிறிது நேரம் (இன்றிரவு) மட்டும் கவனித்துக் கொள். நான் இன்றிரவு வேடிக்கை பார்த்துவிட்டு வரலாம் என்று நினைக்கிறேன்'' என்று சொன்னார்கள். அந்த இளைஞர் இதற்குச் சம்மதித்தார்.

உடனே, நபி (ஸல்) அவர்கள் மக்காவிற்கு வந்தார்கள். வந்ததும், மேளதாளங்கள் முழங்குகின்ற பெரும் சப்தத்தைக் கேட்டார்கள். அப்பொழுது அங்கே நின்றவர்களைப் பார்த்து, ''இது என்ன சப்தம்?'' எனக் கேட்டார்கள். அப்பொழுது அங்கிருந்தவர்கள், ஒரு வீட்டிலே திருமணம் நடந்து கொண்டிருப்பதாகக் கூறினார்கள்.

அந்த மேளதாள வாத்தியங்களைக் கேட்கவேண்டு மென்பது எனக்கு ஆசை, ஆனால் எனக்கு திடீரென்று நித்திரை வந்துவிட்டது. அந்த இடத்திலேயே அப்படியே உறங்கி விட்டேன். மறுநாள் காலை கதிரவனின் வெண்மையான பிரகாசக் கிரணங்கள் தான் என்னை எழுப்பிவிட்டன'' என்று பெருமானார் பின்னர் கூறினார்கள்.

இது போன்றுதான், மற்றொருமுறை கஃபாவின் சுவரைப் புதுப்பிக்கும் வேலையில், எல்லா இளைஞர்களும், சிறுவர் களெல்லாம் தங்கள் ஆடைகளைக் களைந்து தோளின்மீது வைத்து, கற்களைச் சுமந்து கொண்டு சென்றனர்.

நாயகம் (ஸல்) அவர்களும், கற்களைச் சுமந்தார்கள். இந்த வேலையில் அண்ணல் நபியின் சிறிய தந்தையின் வற்புறுத்தலால், தம் ஆடையைக் களைந்து, தோளின் மீது வைத்து மற்ற இளைஞர்களைப் போன்று, கல்லைச் சுமக்க ஆயத்தமானார்கள். ஆனால் சில நொடிகளில் அவர்களுக்கு நாணம் ஏற்பட்டு நாணத்தின் காரணத்தால் திடீரென்று மயங்கி உணர்விழந்து கீழே விழுந்துவிட்டார்கள். இது போன்று அவர்கள், இளமையிலேயே நாணத்தையுடையவர்களாக இருந்தார்கள்.

இதுபோன்றுதான், வாலிபப் பருவம் அடைந்த அண்ணலாரின் தோழர்கள் வீண் விளையாட்டு, வேடிக்கைகளுக்காக பொழுது போக்கு மன்றம் ஒன்றை ஏற்படுத்தி இருந்தார்கள். அந்த மன்றத்திற்குச் செல்லலாம் என நபி (ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். ஆனால், வழியிலேயே, மயங்கிய நிலையில் கீழே விழுந்துவிட்டார்கள். இவ்வாறு இறைவன், நாயகம் (ஸல்) அவர்களை கேளிக்கைகளிலிருந்தும், வீணான வேடிக்கைகளிலிருந்தும் காப்பாற்றினான்.

## இளமையிலும் சிலை வணக்கம் செய்ததில்லை

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் இளம் குழந்தையாக இருக்கும்போது, தம் குடும்பத்தாரோடு சேர்ந்து சிலை வணக்கம் செய்திருக்கிறார்களா?**

பதில் : ஒரு போதும் இல்லை. ஒருமுறை திருமக்கா நகரில், பவ்வானா என்றொரு பிரசித்தி பெற்ற விக்கிரகம் இருந்தது. இதனை குறைஷியர் அனைவரும் பெருமதிப்போடு வணங்கி வந்தார்கள். இந்த விக்கிரகத்திற்கு வருடந்தோறும் சிறப்பான முறையில் திருவிழா நடத்துவார்கள். அங்கு அதிக விலை கொடுத்து மிருகங்களை வாங்கி வந்து பலியிடுவார்கள். அந்தத் திருவிழாவிற்கு அபூதாலிப் அவர்களும், அவர்களுடைய உறவுக்காரர்களும் கலந்து கொள்வார்கள்.

ஒருநாள் அபூதாலிப் அவர்கள் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து, ''அன்பு மகனே! என்னோடு நீரும் சேர்ந்து இந்த திருவிழாவைக் காண்பதற்கு வரவேண்டும்'' என்றார்கள். சிறுவராக இருந்த நபி (ஸல்) அவர்கள் வரமுடியாது என்று மறுத்துவிட்டார்கள். இதனையறிந்த நபி (ஸல்) அவர்களின் மாமியார்களான ஆத்திக்கா, பைலாஉ, ஸபிய்யா இன்னும் பலரும் சேர்ந்து, 'முஹம்மதே! நம்முடைய தெய்வங்களுக்காக நடத்தப்படுகின்ற இச்சிறப்பு மிகுந்த விழாக்களில் கலந்து கொள்ளாமல் நீர் மட்டும் விலகியிருப்பதால், உமக்கு இந்த தெய்வத்தால் ஏதேனும் தீங்கு வந்துவிடுமோ என்று நாங்கள் பயப்படுகிறோம்' என்று நபி (ஸல்) அவர்களை கட்டாயப் படுத்தி அழைத்துச் சென்றார்கள். சென்ற பொழுதிலும், நபி (ஸல்) அவர்கள் அவர்களுடனிருந்து, அவர்களின் நடவடிக்கை களில் கலந்துகொள்ளாமல் திரும்பி விட்டார்கள்.

ஒருமுறை, நபி (ஸல்) அவர்களிடத்தில் 'சிலை வணக்கம் செய்திருக்கிறீர்களா?'' என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள்; ''இளமையிலேயே நான் மறந்தும் இதைச்

செய்ததில்லை'' என்றார்கள். மேலும், விக்கிரகங்களுக்காக பலியிடப்பட்ட பிராணிகளின் மாமிசங்களையும் நான் சாப்பிட்டதில்லை என்றார்கள். இதன் பின்னர், நபி (ஸல்) அவர்களிடத்தில் மதுபானம் அருந்தியிருக்கின்றீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் வேதம் என்பது என்னவென்றும் மார்க்கம் ஈமான் (விசுவாசம் கொள்ளுதல்) என்றால் என்னவென்றும், அறிவதற்கு அதாவது நபித்துவப் பதவி வருவதற்கு முன்பாகவே, அவர்கள், மதுபானம் அருந்துவது பாவமானது என்பதை உணர்ந்திருந்ததாகக் கூறினார்கள்.

## 16. அல் அமீன் அஸ்ஸாதிக்

**கேள்வி: இளமையில் பெருமானாரை மக்கள் எப்படி அழைத்தார்கள்?**

பதில் : நபி (ஸல்) அவர்களின் இளமையான அழகும், கவர்ச்சிகரமான முகத்தோற்றமும், கம்பீரமான பார்வையும், தேன் ஒழுகுகின்ற மொழியும், நேர்மையுடன் கூடிய திறமையும், மக்காவிலுள்ள அனைத்து மக்களின் உள்ளங்களையும் கவர்ந்தன. தலையே போயினும் சரி, பொய் பேசாதவர்களாகவும், கொடுத்த வாக்குறுதிகளைக் காப்பாற்றுகின்ற பண்பு வாய்ந்தவர்களாகவும் நம்பிக்கைக்கு உரியவர்களாகவும் இருந்தார்கள். இக்காரணத்தினால் மக்காவிலுள்ள மக்கள் அனைவரும் தம் விலைமதிப்புள்ள பொருள்களை நபி (ஸல்) அவர்களிடத்தில் பாதுகாப்பிற்காகக் கொடுத்து வைப்பார்கள்.

பெருமானார் அவர்களும் இறைவன் தமக்கு அளித்த பெரும் கருணையின் பொருட்டால், கொடுத்த பொருட்களை பத்திரமாக அப்படியே திருப்பி ஒப்படைப்பார்கள். இக்காரணத்தால் நபி (ஸல்) அவர்களை மக்கா மாநகர மக்கள்அனைவரும் அல்அமீன் (நம்பிக்கைக்குரியவர்) என்று அழைத்தார்கள். இந்தச் சிறப்புப் பொருந்திய பட்டத்தைக் கொண்டே பெருமானார் அவர்களை நேரில் காணாத மற்ற

இடங்களிலும்கூட பேசிக் கொள்வார்கள். பெருமானார் அவர்கள் வீதி வழியாகப்போய்க் கொண்டிருக்கும் போது நகர பெருமக்கள் இவர்களைப் பார்த்து அதோ செல்கின்றார் ஸாதிக் (உண்மையின் உறைவிடம்) பாருங்கள்,'' என்பதாகச் சொல்லுவார்கள்.

## கேள்வி: இளம் பிராயத்தில் நபிகள் பெருமானார் மக்களுக்கு எப்படித் தொண்டு செய்து வந்தார்கள்?

பதில் : பெருமானார் அவர்கள் இளம் வயதினராக இருக்கும் பொழுது கடைத் தெருவிற்கு சாமான்கள் வாங்கப் போவார்கள். அப்பொழுது வழியில் ஏழை எளிய மக்களின் வீட்டு வாயில் கதவுகளைத் தட்டி, ''முஹம்மது கடைத் தெருவிற்கு செல்லுகிறேன், தங்களுக்கு என்ன வேண்டும்? சொல்லுங்கள். நான் வாங்கித் தருகிறேன்,'' என்று பரிவோடு கேட்பார்கள். அவர்களும் (அம்மக்களும்) பெருமானாரின் அன்பான வேண்டுகோளுக் கிணங்கிப் பணம் கொடுத்து சாமான்களை வாங்கி வரச் சொல்லுங்கள்.

சற்று நேரத்திற்கெல்லாம் பெருமானார் அவர்கள் அம்மக்கள் சொன்ன பொருள்களை வாங்கிச் சுமந்து கொண்டு வந்து மீண்டும், முஹம்மது வந்து விட்டேன் என்று சொல்லிக் கதவைத் தட்டுவார்கள், மக்களும் பொருள்களை நன்றியோடு வாங்கிக் கொள்வார்கள்.

பெருமானார் அவர்கள் ஏழை எளிய மக்களுக்குப் பொருள்களை வாங்கிச் சுமந்து கொண்டு வந்து உதவி செய்ததைப் பார்த்த அபூஸுஃப்யானும் அவரைச் சார்ந்த நண்பர்களும் பெருமானார் அவர்கள் நிற்கின்ற காட்சியினைக் கண்டு, ''முஹம்மதே! நீர் இவ்வாறு உதவி செய்வது உம் குலத்திற்கு இழுக்கைத் தேடித்தரும், இது நல்லதல்ல'' என்று ஆட்சேபிப்பார்கள்.

அதற்கு நம் பெருமானார் ''நான் ஏழை என்றும் பணக்காரன் என்றும் பார்ப்பதில்லை. எல்லோரும் எனக்கு ஒன்றே. நான் உயர்வு தாழ்வுகளைப் பார்ப்பது இல்லை'' என்று பொறுமையோடு பதிலளிப்பார்கள். மேலும் பெருமானார் அவர்கள் ''நான் ஏழை எளிய மக்களின் குறைகளைக் கேட்பதற்கும் என் செவியும், இதயமும் இறைவனின் உதவியால் எப்பொழுதுமே திறந்திருக்கும்'' என்று பதில் கூறுவார்கள்.

# 17. வாணிபத்திற்காக வெளிநாடு செல்லுதல்

**கேள்வி: நபி (ஸல்) முதன் முதலில் எந்த வயதில் யாருடன் வர்த்தகத்திற்குச் சென்றார்கள்?**

பதில் : நபிகள் பெருமானார் முதன் முதலில் பன்னிரண்டாவது வயதில் தம் பெரிய தந்தையாகிய அபூதாலிபுடன் ஷாம் தேசத்திற்குச் சென்றார்கள்.

**கேள்வி: இரண்டாவது முறையாக வியாபாரத்திற்கு யாரோடு சென்றார்கள்?**

பதில் : நபிகள் நாயகம் இரண்டாவது முறையாக அரபு நாட்டிலே சிறந்த செல்வ சீமாட்டியாக விளங்கிய குவைலிதின்ச் மகளாரான கதீஜா என்ற சீமாட்டியின் வணிகக்குழுவுக்குத் தலைமைச் செயலாளராக ஷாம் தேசத்திற்குச் சென்றார்கள். அப்போது அவர்களுக்கு வயது 24 ஆகும்.

**கேள்வி: கதீஜா நாச்சியார் பெருமானாரைத் தம் வணிகக் குழுவுக்குத் தலைமைச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கக் காரணம் என்ன?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் பொது மக்களுக்குச் செய்கின்ற சேவையின் திறமையும், கொடுக்கல், வாங்கலில் நேர்மையாக நடப்பதையும், எக்காரணத்திற்காகவும் பொய் பேசாமல் இருக்கும் உறுதியான எண்ணத்தையும், அநாதைச் சிறுவர்களை

ஆதரிக்கும் தன்மையையும், மற்ற மக்களெல்லாம் அவர்களைப் பற்றிப் பெருமையாக பேசுகின்ற சிறப்பினையும் கேள்விப்பட்ட கதீஜா அவர்கள், இவர் தாம் தமது வணிகக் குழுவுக்குத் திறமையானவர் என்று முடிவு செய்து, நாயகத்தைத் தமது வணிகக் குழுவுக்குத் தலைமைச் செயலாளராக நியமித்தார்கள்.

**கேள்வி: கதீஜாவின் வர்த்தகக் குழுவிற்கு நபி (ஸல்) அவர்கள் தாமாக வந்தார்களா? இல்லை அழைக்கப் பட்டார்களா?**

பதில் : திரு நபி (ஸல்) அவர்களின் சிறப்பான குணங்களை நன்கு அறிந்து, இவரைவிடச் சிறந்தவர் தகுதி படைத்தவர் எவரும் கிடைக்க மாட்டார் என்பதை உணர்ந்து கதீஜா அவர்கள், பெருமானாருக்கு அழைப்பு அனுப்பினார்கள்.

**கேள்வி: கதீஜாப் பிராட்டியாரின் அழைப்பை பெருமானார் ஏற்றார்களா?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் அழைப்பை ஏற்றுக்கொண்டு நேரில் வந்து சந்தித்தார்கள். அப்போது கதீஜா பிராட்டியார், ''என்னுடைய வியாபாரக் குழுவிற்குத் தலைமைச் செயலாளராகவும், பொறுப்பாளராகவும் ஷாம் தேசம் சென்று வாருங்கள். அதற்காக நான் தங்களுக்கு மற்றவர்களுக்குக் கொடுக்கும் பிரதி பலனைவிட இரண்டு மடங்கு அதிகம் தருகிறேன். இதற்குத் தாங்கள் சம்மதிக்கிறீர்களா?'' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் தங்களுடைய பெரிய தந்தையார் அபூதாலிபைக் கேட்டு, அன்னாரின் அனுமதியின் பேரில் தான் நான் வரமுடியும் என்று பதில் உரைத்தார்கள்.

**கேள்வி: மீண்டும் எப்பொழுது பெருமானார் (ஸல்) அவர்கள் கதீஜா நாயகியைச் சந்தித்தார்கள்?**

பதில் : பல நாட்கள் கழித்து, தம் பெரிய தந்தையிடம் அனுமதி பெற்றுக் கொண்டு நேரடியாக கதீஜா பிராட்டியாரைச் சந்தித்து அன்னாரின் வியாபாரக் குழுவில் பங்கு கொள்ள

விருப்பம் இருப்பதாகச் சொன்னார்கள். இவ்வினிய வார்த்தைகளைக் கேட்ட கதீஜா பிராட்டியார் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்து பயண ஏற்பாடுகளை விரைவாகச் செய்தார்கள். மக்காவிற்கு அருகாமையிலும் மற்றும் அதன் சுற்று வட்டாரத்திலுமிருந்து பேரீச்சம் பழங்களும், மற்ற பொருள்களும் வாங்கிக் கொண்டு தயாரானார்கள்.

**கேள்வி: இக்குழுவில் கூட யார் சென்றார்கள்?**

பதில் : இக்குழுவில் நபி (ஸல்) அவர்கள், வியாபாரக் குழுவின் தலைவராகவும், கதீஜாவின் ஊழியரான மைசரா என்பார் பாதுகாப்பாளராகவும் சென்றார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களின் வாணிபச் சிறப்பு என்ன?**

பதில் : ஷாம் தேசத்துக்குச் சென்ற பெருமானார் இங்கிருந்து கொண்டுபோன பொருள்களை அங்கு விற்று விட்டு, அங்கு வாங்க வேண்டியவற்றை வாங்கிக் கொண்டு மக்காவிற்கு வந்தார்கள். வந்த அவர்களை கதீஜாப் பிராட்டியார் அன்போடும், மலர்ந்த முகத்தோடும் வரவேற்றார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் அங்கு வாங்கி வந்தவற்றை அவர் முன்பு வைத்தார்கள்.

இதற்கப்புறம், தாங்கள் மக்காவிலிருந்து கொண்டு போன பொருள்களை விற்றது எவ்வளவு? அந்த நாட்டிலே எவ்வளவுக்குப் பொருள் வாங்கப்பட்டது? போக்கு வரத்துச் செலவு எவ்வளவு? இது போக கிடைத்த இலாபம் என்ன? என்பதையும் விவரமாக எடுத்துச் சொன்னார்கள். மற்ற வியாபாரத் தலைவர்கள் பாக்கி சொல்வதைப் போன்று, இவர்கள் எந்தப் பாக்கியையும் சொல்லவில்லை.

நபி (ஸல்) அவர்கள் எந்த முறையில் வாணிபம் செய்தார்கள் என்பதை எல்லாம் சொல்லச் சொல்ல கேட்டுக் கொண்டிருந்தார்கள். இதுவரைக்கும் கதீஜா நாச்சியார் செய்த வியாபாரத்திலே, நபி (ஸல்) அவர்கள் தாம் அதிகமான

இலாபத்தைத் தேடித்தந்துள்ளார்கள் என்பதை அறிந்து மிகவும் சந்தோஷப்பட்டார்கள். மேலும் மேலும் திரு நபி (ஸல்) அவர்களிடத்தில் அன்பும் அளவுக்கு அதிகமான நம்பிக்கையும் ஏற்பட்டது. கதீஜாப் பிராட்டியார் அவர்கள், தாம் முன்னர் கூறியபடி இரட்டிப்பான ஊதியம் கொடுத்தார்கள். பெருமானாரும் அதைப் பெற்றுக் கொண்டார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களைப் பற்றி மைசரா கூறியதென்ன?**

பதில் : பெருமானார் கதீஜாப் பிராட்டியாரிடம், வியாபாரத்திற்குச் சென்று வந்த வரவு, செலவு கணக்கை ஒப்படைத்துவிட்டுச் சென்ற பிறகு மைசரா நபி (ஸல்) அவர்களிடத்தில் தாம் நேரே கண்ட செயல் முறைகளையும், மற்றவர்கள் நபி (ஸல்) அவர்களைப் பற்றி புகழ்ந்து பேசிய பேச்சுக்களையும், வியாபாரம் செய்த சிறப்பினையும் கூறினார்.

"நாங்கள் சரக்குகளை ஏற்றிக் கொண்டு மக்கா நகரை விட்டுப் புறப்பட்டு திமிஷ்கு நகரை நோக்கிச் சென்று கொண்டிருக்கும்போது, வழியில் புஸ்ரா என்ற ஊரில் ஒரு மரத்தடியில் எல்லாச் சரக்குகளையும் இறக்கிவைத்து விட்டுச் சற்று நேரம் இளைப்பாறினோம். அப்போது அங்கு நஸ்தூரி ராஹிபு என்ற பெரியவர் என்னிடம் வந்து, "அவர் யார்?" என்று கேட்டார். "எங்களுடைய வர்த்தகக் கூட்டத்தின் தலைவர், பெயர் முஹம்மது," என்றேன். "அவருடைய கண்களில் சிவப்பு இருக்கின்றதா?" என்றார்." ஆமாம்; இன்னும் அந்த சிவப்பு அவரை விட்டு நீங்குவதும் இல்லை, " என்றேன்.

என்னுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் ராஹிபு சொன்னார், "இவர் தாம் நபி, நபிமார்களிலே கடைசியாகத் தோன்றுபவர் இவர் தாம்".

"நடுப்பகல் வேளை சூரியன் உச்சியில் இருக்கும்போது நபி (ஸல்) அவர்கள் மீது வெயில் படாமல் இருந்தது. இதை நான் நேரில் பார்த்தேன்" என்று மைசரா சொன்னார்.

மேலும் வியாபாரம் செய்யும் சிறப்பு, வியாபாரம் செய்யும்போது அவர்களிடத்தில் இருந்த நேர்மை, வியாபார விஷயமாக யாரிடத்தில் பேசினாலும் முறையோடு பேசுகின்ற பேச்சு, யாரிடத்திலும் எதைப் பற்றியும் வாதாடினால் திறமையாக வாதாடுவது, இன்னும் வர்த்தகத்தில் கலப்படம் செய்து விற்கவோ கலப்படம் செய்து விற்கின்ற பொருள்களை வாங்கவோ மாட்டார்கள். இவற்றை மற்ற நண்பர்களுக்கும் சொல்கிறார்கள், என்பதாக மைசரா சொன்னார். இத்தனை சிறப்புகளையும் கேட்டு, கதீஜாப் பிராட்டியார் எல்லையில்லாத ஆனந்தம் அடைந்தார்கள். இத்துணை சிறப்புகளையும் பெற்றிருக்கும் இவர் இறைவனின் அருள் பெற்றவராகத்தான் இருப்பார் என்று உறுதி செய்து கொண்டார்கள்.

## 18. திருமணம்

**கேள்வி: நபி (ஸல்) அவர்களுக்குத் திருமணம் எங்கு நடந்தது?**

பதில் : அரபு நாட்டில் மக்காவில் நடந்தது.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களின் முதல் மனைவி யார்?**

பதில் : நபி (ஸல்) அவர்களுடைய முதல் மனைவி கதீஜா (ரலி)

**கேள்வி: நபி (ஸல்) அவர்களுக்கு எத்தனை வயதில் திருமணம் நடந்தது?**

பதில் : 25 வயதில் திருமணம் நடந்தது.

**கேள்வி: கதீஜா (ரலி) அவர்களுக்கு அதற்கு முன்பு திருமணம் நடந்திருக்கிறதா?**

பதில் : ஆம், அதற்கு முன்பு கதீஜா (ரலி) அவர்களுக்கு இரண்டு முறை திருமணம் நடந்திருக்கிறது. ஆனால் இரண்டு கணவர்களுமே இறந்து விட்டார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களை கதீஜா நாயகி திருமணம் செய்யும் பொழுது அவர்களுக்கு எத்தனை வயது? (மணாளராக)**

பதில் : நபி (ஸல்) அவர்கள் கதீஜா நாயகி மணாளராக ஏற்றுக் கொள்ளும் பொழுது சரியாக 40 வயது.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் கதீஜாப் பிராட்டியாரிடம் சீதனம் வாங்கினார்களா?**

பதில் : இல்லை, பெருமானார் (ஸல்) அவர்கள் கதீஜாப் பிராட்டியாருக்கு இருபது இளம் ஒட்டகைகளை மஹ்ராகக் கொடுத்தார்கள்.

**கேள்வி: கதீஜா (ரலி) அவர்கள் தந்தையின் பெயர் என்ன?**

பதில் : தந்தையின் பெயர் குவைலிது. அவர் மாபெரும் செல்வந்தர்.

**கேள்வி: கதீஜா (ரலி) அவர்களுக்கு முதலில் திருமணம் நடந்த இடத்தில் எத்தனை குழந்தைகள்? அதில் ஆண் எத்தனை? பெண் எத்தனை?**

பதில் : கதீஜா (ரலி) அவர்களை முதன் முதலில் அதீக் என்பவருக்குத் திருமணம் செய்து கொடுத்தார்கள். அங்கு முதன் முதலில் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்கு "ஹிந்தா" என்று பெயர். பிற்காலத்தில் ஹிந்தா இஸ்லாத்தைத் தழுவிக் கொண்டார். அதீக் இறந்ததற்குப் பின்பு கதீஜா (ரலி) அபூஹாலா என்பவரை மறுமணம் கொண்டார். இவருக்குப் பிறந்தது ஒரு ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும், அந்த ஆண் குழந்தைக்கு ஹிந்த் என்றும் பெண் குழந்தைக்கு ஹாலா என்றும் பெயர் வைத்தார். மகனார் ஹிந்த் அலீ (ரலி) அவர்களின் ஆட்சிவரை ஹயாத்துடன் இருந்தார்.

**கேள்வி: கதீஜா (ரலி) நபி (ஸல்) அவர்களைக் கணவராக தேர்ந்தெடுக்கக் காரணம் என்ன?**

பதில் : கதீஜா (ரலி) அவர்கள் பெருமானாரின் குணநலன்களை நேரிலும், அவர்களுடன் ஷாம் நகரத்திற்கு வியாபாரத்திற்குச் சென்று வந்த அவருடைய அடிமை மைசராவாலும், நன்கு அறிந்திருந்தார்கள். மேலும், பெருமானார் (ஸல்) அவர்களிடத்தில் இருந்த இயற்கையான அழகு, பொலிவான முகத்தோற்றம், உண்மையே பேசுகின்ற தன்மை, பிறருக்கு உதவி செய்கின்ற எண்ணம், ஏழை, எளியவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற பண்பு, வியாபாரம் கொடுக்கல் வாங்கல் ஆகியவற்றில், சொன்ன சொல்லைக் காப்பாற்றுதல் இவை போன்ற பல நேரிய குணங்களும் உறுதியான இறை நம்பிக்கையும், அமானிதத்தைக் காப்பாற்றுகின்ற தன்மையும் இவர்களிடத்தில் இருந்த காரணத்தால் நபி (ஸல்) அவர்களை கதீஜா (ரலி) அவர்கள் மனமுவந்து ஏற்றுக் கொண்டார்கள்.

**கேள்வி: திருமணத்தில் யார் யார் கலந்து கொண்டார்கள்?**

பதில் : திருமணத்தில் அரபு நாட்டு மக்களும் செல்வந்தர் களும் கலந்து கொண்டார்கள். பனூ ஹாஷிம் கோத்திரத்தைச் சார்ந்தோரெல்லாம் கலந்து கொண்டார்கள். கதீஜா பிராட்டியார் வீட்டின் சார்பாக முக்கியமாக சிறிய தந்தை அம்றுப்னு அஸத், பெரிய தந்தையின் புதல்வர் வரக்காவும் கலந்து கொண்டார்கள். நபிகள் நாயகம் சார்பாக அபூதாலிபும் கதீஜா பிராட்டியாரின் சார்பில் வரக்காவும் அம்றுப்னு அஸதும், திருமண ஒப்பந்தம் செய்து முடித்தார்கள்.

நபி (ஸல்) அவர்களின் திருமணத்தின் சிறப்பு விருந்தாளியாக நபி (ஸல்) அவர்களுக்கு அன்புடன் பாலூட்டி வளர்த்த ஹலீமா ஸஃதியாவும் வந்திருந்தார்கள். நபி (ஸல்) அவர்களின் திருமண விஷயம் கேள்விப்பட்டு வாழ்த்துக்

கூறுவதற்கு அவர்களாகவே வந்து கலந்து கொண்டார்கள். ஒரு மாதகாலம் இவர்களோடு தங்கி இருந்தார்கள். தங்களுடைய ஊருக்கு திரும்பிப்போகும்போது கதீஜா பிராட்டியாரும் நபி (ஸல்) அவர்களும் நாற்பது ஆடுகளைப் பரிசாகக் கொடுத்து வழி அனுப்பி வைத்தார்கள். ஹலீமா ஆனந்தக் கண்ணீருடன் புறப்பட்டார்கள்.

**கேள்வி: கதீஜா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களை நிக்காஹ் செய்து கொள்ள யாரைத் தூது அனுப்பினார்கள்?**

பதில் : கதீஜா (ரலி) அவர்கள் நபி முஹம்மது (ஸல்) அவர்களை மனப்பூர்வமாக மணந்து கொள்வதற்காக தன் உயிருக்குயிரான நபீஸா என்ற தோழியை முஹம்மது (ஸல்) அவர்களிடம் தூது அனுப்பினார்கள்.

**கேள்வி: தூதைக் கேட்டவுடன் நபி (ஸல்) அவர்களின் பதிலென்ன?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் தம் பெரிய தந்தை அபூதாலிப் அவர்களிடத்தில் கலந்து ஆலோசித்த பின்பு இதற்கு முடிவு சொல்வதாகக் கூறினார்கள்.

**கேள்வி: கதீஜா (ரலி) அவர்கள் எத்தனை வருடங்கள் நபி (ஸல்) அவர்களிடத்தில் வாழ்க்கை நடத்தினார்கள்?**

பதில் : கதீஜா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடத்தில் இருபத்தைந்து ஆண்டு காலங்கள் அமைதியான முறையில் வாழ்க்கை நடத்தினார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் ஸஹாபாக்களுக்குக் கூறியது என்ன?**

பதில் : பெருமானார் (ஸல்) அவர்கள் சொல்லிலும், செயலிலும் நேர்மையுடையவர்கள். எந்த நேரமும் யாரிடத்தில் எதைப்பற்றிப் பேசினாலும், முறையோடு பேசுவார்கள்.

நிறுத்தலிலும், அளத்தலிலும் சத்தியத்தைக் காப்பாற்று கின்றவர்கள். எண்ணிக்கையிலும் அப்படியே. வாதாடுவதாக இருந்தாலும் அவர்கள் முறையோடு வாதாடுவார்கள். வர்த்தகத்தில் கலப்படம் செய்யவோ கலப்படம் செய்திருக்கின்ற பொருள்களை வாங்கவோ இவர்களுக்குப் பிடிக்காது. தம் தோழர்களான சத்திய ஸஹாபாப் பெருமக்களுக்கும் கலப் படத்தை ஒழித்துவிடுங்கள் என்று போதித்து வந்தார்கள்.

**கேள்வி: கதீஜா (ரலி) அவர்கள் இருக்கும்போதே நபி (ஸல்) அவர்களுக்கு வேறு மனைவியர் இருந்தார்களா?**

பதில் : இல்லை.

**கேள்வி: கதீஜா நாச்சியார் உயிரோடு இருக்கும்போது நாயகம் (ஸல்) அவர்கள் வேறு திருமணம் செய்து கொள்ளாததற்குக் காரணம் என்ன?**

பதில் : "நான் ஏழையாக இருக்கும்போது, கதீஜா மனமார என்னை மணந்து என்னைச் செல்வச் சீமானாக்கினார்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொல்வார்கள். "நுபுவ்வத்" என்னும் தீர்க்கதரிசனம் எனக்கு அருளப்பட்ட காலத்தில் மக்கள் விசுவாசம் கொள்ளாமல், நான் பொய்யன் என்று சொல்லி என்னை வெறுத்து ஒதுக்கும் சமயத்தில் கதீஜா என்னை மனப்பூர்வமாக நபியென்று ஏற்றுக் கொண்டார். அரபு தேசத்தவர்கள் அனைவரும் எனக்கு விரோதமாகச் செயல்படும்போது, கதீஜா அந்த விரோதத்தைப் பொருட்படுத்தாது என்னுடனேயே இருந்தார்கள்."

ஒரு காலத்தில் அரேபியாவில் கடும் பஞ்சம் ஏற்பட்டது. அதில் ஆயிரக்கணக்கான மக்கள் மாண்டுபோனார்கள். ஆயிரக்கணக்கான பிராணிகள் மாண்டுபோயின. இந்த நேரத்தில் பெருமானார் (ஸல்) அவர்கள் கதீஜா (ரலி) கொடுத்த செல்வத்தைக் கொடுக்கவும், ஏழைகளுக்கு உதவவும் ஒரு வழிகாட்டியாக இருந்தார். சிக்கலான நேரங்களில் எல்லாம் பெருமானாருக்கு ஆறுதல் சொல்லித் தேற்றுவார்.

இக்காரணங்களால் நான் பெருமாட்டியார் உயிரோடு இருக்கும்பொழுது நாயகம் (ஸல்) அவர்கள் வேறு திருமணம் செய்து கொள்ளவில்லை.

**கேள்வி: கதீஜா (ரலி) அவர்கள் மரணிக்கும் போது அவருக்கு எத்தனை வயது?**

பதில் : நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு நபிப் பட்டம் கிடைத்த பத்தாவது ஆண்டு ரமலான் மாதம் தமது 65வது வயதில் மரணித்தார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களுக்கு மொத்தம் எத்தனை மனைவிகள்? அந்த மனைவிமார்களின் தந்தையார் பெயர்கள் என்ன?**

பதில் : 11 மனைவியர்.

| | பிராட்டிமார்களின் பெயர் | அவர்களுடைய தந்தை பெயர் |
|---|---|---|
| 1. | கதீஜா | குவைலிது |
| 2. | ஆயிஷா | அபூபக்ருஸித்தீக் (ரலி) |
| 3. | ஹஃப்ஸா | உமறுல் பாரூக் (ரலி) |
| 4. | உம்மு ஸலமா | அபூ உமைய்யா |
| 5. | உம்மு ஹபீபா | அபூஸுஃப்யான் (ரலி) |
| 6. | ஸவ்தா | ஸம்அத் |
| 7. | ஜைனப் | ஜஹ்ஷ் |
| 8. | ஜைனப் | குஸைமா |
| 9. | மைமூனா | அல்ஹாரிது |
| 10. | ஸபிய்யா | ஹுயை |
| 11. | ஜுவைரிய்யா | ஹாரிது |

# 19. திருகஃபாவைப் புதுப்பித்துக் கட்டல்

**கேள்வி: கஃபாவிற்கு உண்டான மற்ற பெயர்கள் யாவை?**

பதில் : திரு கஃபாவிற்கு மஸ்ஜிதுல் ஹரம், பைத்துல்லாஹ் பைத்துல் அதீக் போன்ற பெயர்கள் உண்டு.

**கேள்வி : இந்தப் புனித ஆலயம் யார் காலத்திலிருந்து இருக்கிறது?**

பதில் : இந்தப் புனித மிக்க இறை இல்லம் மனித வர்க்கத்தின் மூலபிதாவான ஹலரத் ஆதம் (அலை) அவர்கள் காலத்திலேயே இருந்தது.

அவர்களுக்குப் பின் ஹலரத் நூஹ் (அலை) அவர்கள் காலத்தில் ஏற்பட்ட பயங்கரமான பிரளயத்தில் இடிந்து போயிற்று. இதனைப் புதுப்பிக்குமாறு இப்றாஹீம் (அலை) அவர்களுக்கு இறைவன் கட்டளையிட்டதற்கு ஏற்ப அவர்கள் இதைப் புதுப்பித்துக் கட்டினார்கள்.

**கேள்வி: கஃபாவின் அமைப்பு எப்படி இருக்கும்?**

பதில் : இப்புனித மிகுந்த இறை இல்லத்தின் அமைப்பானது கிழக்கு பக்கம் தென்வடல் முப்பத்தி இரண்டு முழ நீளமும், மேற்குப் பக்கம் தென்வடல் முப்பத்தியொன்று முழ நீளமும், தெற்குப் பக்கம் கிழமேல் இருபது முழநீளமும், வடக்குப் பக்கம் கிழமேல் இருபத்திரெண்டு முழ நீளமும், இதன் உயரம் ஒன்பது முழமுமாக அமைந்துள்ளது. பண்டைக் காலத்தில் இதற்கு மேல் முகடு இல்லை. நான்கு புறங்களிலும் சுவர்கள் மட்டும்தான் இருந்தன. வாயிற்படிக்குத் தளங்கள் போட்டு உயர்த்தப்படவில்லை.

தரை மட்டத்தில் கிழக்குப் பக்கத்திலும் மேற்குப் பக்கத்திலும் உள்ளே செல்லவும் சென்றவர்கள் வெளியில் வரவும் இரண்டு வழிகள் இருந்தன. ஆனால் கதவுகள் இல்லை.

அக்காலத்தில் கட்டப்பட்ட இந்தப் புனித இல்லத்தைத் தான் தன்னுடைய சிறப்பு மிகுந்த திருமறையில், "இறைவனை மக்கள் வணங்குவதற்கு முதன் முதலாக ஏற்படுத்தப்பட்ட இறை இல்லம் மக்காவில் இருப்பது" என்று அல்லாஹ் கூறியுள்ளான்.

**கேள்வி: கஃபாவை மக்கத்து மக்கள் புதுப்பிக்கக் காரணமென்ன?**

பதில் : மக்கமா நகரமானது நான்கு புறங்களிலும் மலைகளால் சூழப்பட்டுள்ளது. இதன் நடுவில்தான் கஃபா அமைந்துள்ளது. இதனுடைய அமைப்பைப் பற்றி மேலே தெளிவாகக் குறிப்பிட்டுள்ளோம். மழை மிகுதியாகப் பெய்து விட்டால் தண்ணீர் மலைகளிலிருந்து வடிந்து நகரின் பற்பல பகுதிகளில் நுழைந்து, தெருக்களிலும், வீடுகளிலும் புகுந்து விடும். கஃபாவின் சுவர் மிகவும் தாழ்வாகவும், மேல் முகடும் இல்லாதிருந்த காரணத்தால் மழையின் காரணமாக பல முறை வெள்ளம் ஏற்பட்டு, சுற்றியுள்ள சுவர்களெல்லாம் இடிபாடுகளால் சிதைந்தோடின.

இதைக் கண்ணுற்ற மக்கத்து மக்கள் கஃபாவின் கட்டிடத்தை உறுதியாகவும், நல்ல உயரமாகவும், சிறப்புப் பொருந்திய அழகுடனும் கட்ட வேண்டும் என்று தீர்மானித்தார்கள்.

**கேள்வி: கஃபாவைக் கட்டுவதற்கான மரம் மற்ற தளவாடப் பொருட்களை எவ்வாறு சேகரித்தார்கள்?**

பதில் : மக்காவிலுள்ளோர் அனைவரும் கட்டிடத்திற்குத் தேவையான தளவாட சாமான்களைச் சேகரிக்க முற்பட்ட போது, மக்காவிற்கு அருகாமையிலுள்ள, ஜித்தா துறைமுகத்தில், நல்ல மரத்தினால் செய்யப்பட்ட வர்த்தகக் கப்பல் ஒன்று, பலத்த காற்று வேகத்தினால் திசை திரும்பி, தரை தட்டி நிலை தடுமாறி சாய்ந்து விட்டது.

இதுபற்றிக் கேள்விப்பட்ட குறைஷித் தலைவர்களில் ஒருவரான வலீதுப்னு முகீரா நேரடியாக ஜித்தா சென்று அந்தக்

கப்பலிலே உள்ள நல்ல உறுதியான பலகைகளை விலைக்கு வாங்கினார். மேலும் அக்கப்பலிலே, கட்டிட வேலைகளை திறமையாகச் செய்து முடிக்கும் பாக்கூஸ் என்ற ரோமானியர் ஒருவர் இருந்தார். அவரையும் அழைத்துக் கொண்டு மக்காவிற்கு வந்து வேலையினை துரிதமாகச் செய்வதற்கு அனைவரும் முற்பட்டார்கள். குறிப்பாக இக்கட்டிட வேலையிலே குறைஷிப் பெருமக்கள் எல்லோரும் கலந்து கொண்டார்கள்.

## 20. ஹஜருல் அஸ்வத்

**கேள்வி: ஹஜருல் அஸ்வத் என்றால் என்ன? யாரால் எடுத்துவரப்பட்டது?**

பதில் : அபூகுபைஸ் என்ற மலையிலிருந்து இஸ்மாயீல் (அலை) அவர்களால் எடுத்துக் கொண்டு வரப்பட்ட ஒரு சிறிய கல்லுக்குப் பெயர்தான் ஹஜருல் அஸ்வத் என்பது. இந்த மலை, கஃபத்துல்லாஹ்வுக்குச் சற்றுத் தொலைவில் உள்ளது. திருகஃபாவைத் 'தவாபு' செய்வோர் எந்த இடத்திலிருந்து தவாபை ஆரம்பித்து, எங்கு முடிக்க வேண்டும் என்பதை அறிவிப்பதற்கு அடையாளமாக கஃபாவின் தென்கிழக்கு மூலையில் சுமார், நாலடி உயரத்தில் வைக்கப்பட்டுள்ளது. இக்கல்லை ஹலரத் இப்ராஹீம் (அலை) அவர்கள். கஃபாவை புதுப்பித்துக் கட்டும்போது, அந்த இடத்தில் வைத்தார்கள்.

மூன்று நான்கு முறை கஃபாவை பழுது பார்க்கும்போது, மற்றச் சுவர்களிலுள்ள கற்களெல்லாம் மாற்றப்பட்டன. ஆனால் ஹஜருல் அஸ்வத் என்னும் இக்கருப்புக்கல் மட்டும் மாற்றப்படாமல், அந்த இடத்திலியே இருந்தது.

## கலகத்தின் கருமேகங்கள் சூழ்ந்தன

**கேள்வி: கட்டிட வேலை திடீரென நின்றதற்குக் காரணம் என்ன?**

பதில் : ஹஜருல் அஸ்வத் என்னும் கருங்கல் குறைஷியரின் மூலபிதாக்களான ஹலரத் இப்ராஹீம் (அலை) ஹலரத் இஸ்மாயீல் (அலை) ஆகியோரால் வைக்கப்பட்டது என்பது நிச்சயமாக தெரிந்ததால், தங்களுடைய மூலபிதாக்கள் வைத்த கல்லை தாங்களே தூக்கி அது இருந்த இடத்தில் வைக்க வேண்டும் என்று ஒவ்வொரு குறைஷித் தலைவரும் விரும்பினர். இவர்களைப் பின்பற்றி மக்கள் இவர்களுக்கு ஆதரவு தெரிவித்தார்கள். இதனால் போட்டியும், பூசலும், பொறாமையும் அதிகமாகி ஒற்றுமை குலைந்தது.

''எங்களுக்குத் தான் அந்த உரிமை வேண்டும்!'' என்றனர் ஒரு சாரார். மற்றொரு சாரார் ''எங்களுக்குத்தான் அந்த உரிமை வேண்டும். ஒருபோதும் உங்களுக்குத் தர இயலாது'' என்றனர். ''உங்களுக்கு நாங்கள் என்ன மட்டமானவர்களா?'' என்று சூளுரைத்து தங்களுடைய தோள்களை உயர்த்திக் காட்டினர். இன்னொரு பிரிவினர். பிறிதொரு பிரிவினர் ''எங்கள் உயிரே போனாலும் ஒரு போதும் உரிமையை விட்டுக் கொடுக்கமாட்டோம்'' என்று ஆவேசமாகப் பேசினார்கள். யாருக்கும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையோ சமாதான நோக்கோ இல்லை. ஏக காலத்தில் எல்லோருக்கும் இச்சந்தர்ப்பத்தை எப்படி வழங்க முடியும்? இக்காரணங்களினால் கட்டிட வேலை நின்றுவிட்டது.

**கேள்வி: கலகத்தைத் தடுக்க முதியவர் செய்த முறை யாது?**

பதில் : மக்களுக்குள் வாய்ப் பேச்சு அதிகமாகி தங்களுடைய சொல்வளத்தாலும், ஆயுத பலத்தாலும், ஒருவரை ஒருவர் மோதி செங்குருதி மழை பெய்து விடுமோ என்று அஞ்சப்பட்ட நேரத்தில்அங்கே வயது முதிர்ந்த பெரியாரான

அபூ உமைய்யா மக்ஸூமி என்பார்; ''அன்புக்குரிய உடன் பிறந்தார்களே! இது தீராத பிரச்சனையாக இருக்கின்றது. ஒருவருக்கொருவர் பணிந்துபோகாமல் இப்படியே பேசிக் கொண்டே போனால் அது எதில் போய் முடியுமோ என்பதை நாம் அறியோம். நாம் அனைவரும் இப்பிரச்சனையை மறந்து நாளைக்கு அதிகாலையில் கஃபாவின் வெளிப்புறத் தலைவாசல்களில் மிகவும் முக்கியமான பனீஷைபா வழியாக எவர் நுழைகிறாரோ அவரையே நீதிபதியாக நியமித்து, இந்தப் பிரச்சினைக்கு அவர் எவ்வாறு தீர்ப்பளிக்கின்றாரோ அதன்படி செய்வோம்'' என்றார். மக்களும் இதற்கு உடன்பட்டனர்.

## 21. தலைமை நீதிபதி

**கேள்வி: மறுநாள் பாபு பனீ ஷைபாவில் மக்கள் யாரைக் கண்டார்கள்?**

பதில் : மக்கத்து மக்கள் அனைவராலும் 'அல்அமீன்' என்று அன்போடு அழைக்கப் பெற்ற அண்ணலெம் பெருமானாரைக் கண்டார்கள். அனைவரும் பெருமகிழ்ச்சி அடைந்தார்கள்.

**கேள்வி: அண்ணலாரைக் கண்டதும் மக்களின் மகிழ்ச்சிப் பெருக்கு எவ்வாறிருந்தது?**

பதில் : மறுநாட்காலையில் இறைவனின் பேரருளால் அங்கு வந்து நின்ற பெருமானாரைக் கண்டதும், மக்கள் அனைவரும், ''இவர் அல்அமீன்; இவர் வழங்கும் தீர்ப்பை நாங்கள் முழு மனதோடு ஏற்றுக் கொள்வோம்,'' என்று மகிழ்ச்சிப் பெருக்கால் தங்கள் வலக்கரங்களை உயர்த்திக் காட்டினார்கள்.

**கேள்வி: கஃபாவின் நிலைமையைப் பற்றி யாரிடத்தில் தெரிந்து கொண்டார்கள்?**

பதில் : கூட்டத்திலிருந்த பெரியவர்களில் சிலர் அல்அமீனை அணுகி, ''ஹஜருல் அஸ்வதை'' யார் எடுத்துச் சுவரில் பதிப்பது என்று பற்றி எங்களிடையே நீண்ட விவாதமாக

இருக்கின்றது. இதை எப்படித் தீர்த்துக் கொள்வது என்று தெரியாத நிலையில், இன்றைக்கு அதிகாலையில் இந்த பாபு பனீ ஷைபா வழியாக, யார் முதன் முதலில் கஃபாவுக்குள் நுழைகின்றாரோ, அவரிடமே இப்பிரச்சினையைத் தீர்க்கும் பொறுப்பை ஒப்படைத்து அவர் என்ன முடிவு செய்கிறாரோ, அதன்படி நடப்பது என்று முடிவெடுத்தோம்.

அதன்படி தாங்கள் தாம் இன்று இந்த இடத்திற்கு முதன் முதலில் வந்திருக்கின்றீர்கள். தாங்கள் தாம் இதற்கு நல்ல முடிவு கூறவேண்டும் என்றார்கள்.

## வள்ளல் நபியின் வரலாறு போற்றும் தீர்ப்பு

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் எந்த முறையில் சிக்கலைத் தீர்த்தார்கள்?**

பதில் : குறைஷி மக்களின் வேண்டுகோளுக்கு இணங்கிய பெருமானார் அவர்கள் தம் சால்வையைத் தரையிலே விரித்து, தங்களுடைய புனிதக் கரங்களால் கருங்கல்லைத் தூக்கி அதன் மீது வைத்தார்கள். கூட்டத்திலே இருந்த குறைஷிக் கோத்திரத்திலிருந்து தோன்றிய மற்ற கிளைக் கோத்திரத் தலைவர்கள் அனைவரையும் ஒவ்வொருவராக அழைத்து கருங்கல் வைக்கப்பட்டிருந்த அங்கியின் ஓரங்களைப் பிடித்து அனைவரையும் தூக்கும்படி சொன்னார்கள்.

அவர்கள் அனைவரும் அப்படியே செய்தார்கள். அக்கல் வைக்க வேண்டிய இடத்திற்கு நேராக உயர்த்தப்பட்டபோது, அந்தத் தலைவர்கள் அனைவரின் அனுமதியோடு அவர்களின் பிரதிநிதி என்ற முறையில் பூமான் நபியவர்கள் தம் புனிதக் கரத்தால் கல்லைத் தூக்கி அது இருக்க வேண்டிய இடத்தில் அழகாகப் பதித்துவிட்டார்கள். இந்த நிலையைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்த குறைஷிப் பெருமக்கள் நீங்கள் செய்த தீர்ப்பே தீர்ப்பு. மேலும் எம் மூல பிதாக்களில் இரு நபிமார்களின் திருக்கரங்களால் வைக்கப்பட்ட புனிதக் கல்லை, அவர்களின் நேர் வாரிசுகளான நாங்கள் அனைவரும் சேர்ந்து எடுத்து

வைக்கும் பெரும் பேறு எங்களுக்குக் கிடைத்தது பற்றி பேரானந்தப்படுகிறோம் என்றார்கள்.

## கேள்வி: ஹஜருல் அஸ்வதை முத்தமிடுவது ஏன்?

பதில் : ஹஜருல் அஸ்வத் என்னும் அந்தக் கருங்கல் தங்கள் மூல பிதாக்களான இப்றாஹீம் (அலை) அவர்களின் குமாரர் இஸமாயீல் (அலை) ஆகிய இரு நபிமார்களின் புனிதக் கரங்களால் வைக்கப்பெற்றது என்பதற்காக அந்தப் பெரியார்களின் மீது தங்களுக்கு இருக்கும் அன்பையும், மதிப்பையும் காண்பிக்கும் பொருட்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உட்பட குறைஷியர்கள் அனைவரும் அதை முத்தமிட்டார்கள். நபிமார்கள் இருவரின் கரம்பட்ட காரணத்தாலும் நபி (ஸல்) அவர்கள் குறைஷியரின் பிரதிநிதி என்ற முறையால் தங்களின் புனிதக்கரங்களால் அதை எடுத்து வைத்தமையாலும் முஸ்லிம்கள் அனைவரும் அதனை முத்தமிடுகிறார்கள்.

இவ்வாறு செய்வது பெருமானார் பின்பற்றிய முறையை நாமும் பின்பற்றுவதாக உள்ளது.

## உன்னை நான் ஏன் முத்தமிடுகிறேன்?

அமீருல் முஃமினீன் உமறுல் பாரூக் (ரலி) அவர்கள் கலீபாவாக இருந்தபோது, கஃபாவை தவாபு செய்ய வந்தார்கள். அப்போது இந்த ஹஜருல் அஸ்வத் என்ற கருங்கல்லுக்கு எதிரில் நின்று கொண்டு "ஏ கருங்கல்லே! உன்னை முத்தமிடுவதால் நீ நன்மையோ, தீமையோ எதுவும் செய்ய முடியாது. இருந்தபோதிலும் எங்கள் பெருமானார் (ஸல்) அவர்கள் உன்னை முத்தமிட்டதை நான் நேரில் பார்த்ததால் நானும் உன்னை முத்தமிடுகிறேன். (அவர்களைப் பின்பற்றி)." என்று சொன்னார்கள்.

இக்காரணங்களால் இன்றைக்கும் ஹஜருல் அஸ்வத் நம்மிடையே சிறப்புப் பொருந்தியதாக உள்ளது.

## நாற்பதாவது வயதினிலே.....

பெருமானார் (ஸல்) அவர்களுக்கு நாற்பது வயது வந்தவுடன், கண்ணால் பார்ப்பவை, காதால் கேட்பவை பற்றிய சிந்தனைகள் அதிகமாயின. நான் யார்? நான் ஏன் பிறந்தேன்? நான் ஏன் இவ்வுலகிற்கு வந்தேன்? மக்கள் வாழும் இவ்வுலகைப் படைத்தவன் யார்? உலகத்திற்கு வெப்பத்தையும், வெளிச்சத்தையும் அளிக்கும் சூரியனைப் படைத்தவன் யார்? இருளை விரட்டியடித்து உலகை ஒளி மயமாக்கும் அந்த முழுமதியை உண்டு பண்ணியவன் யார்? வானில் ஒளி விட்டுக் கதிர் வீசும் விண்மீன் கூட்டத்தைத் தோற்றுவித்தவன் யார்? அண்ட கோளங்களை ஒன்றோடொன்று இணைத்து அல்லும், பகலும் சுழலச் செய்யும் அந்த மாபெரும் ஆற்றல் எது? இரவும், பகலும் ஏன் மாறி மாறி வருகின்றன? வாழ்வு என்றால் என்ன? நான் எதை நம்புவது, எதை நம்பாமல் இருப்பது? எதைச் செய்வது! எதைச் செய்யாமல் இருப்பது? என் வாழ்வினால் இந்த உலகிற்கு நன்மை ஏற்படாதிருப்பின் நான் ஏன் வாழ வேண்டும்? இவை போன்ற எண்ண அலைகள் அடிக்கடி வந்து அவர்களைச் சூழ்ந்து கொண்டன.

இன்னும் அவர்கள், வானத்தைப் பார்த்துப் பார்த்துக் கண்களும் பூத்துப் போயின. இயற்கை வினோதங்களைப் பார்க்கப் பார்க்க அவற்றைப் பற்றிய கேள்விக் குறிகளும் எழலாயின.

இத்தகைய வினாக்கள் அடிக்கடி அவர்களது மனச் சக்கரத்தில் சுழன்று கொண்டு இருந்தமையால் அவர்கள் தனிமையில் இருக்க நாடினார்கள்.

**கேள்வி: பெருமானார் (ஸல்) தனிமையில் எங்கு தங்கினார்கள்?**

பதில் : பெருமானார் (ஸல்) அவர்கள் ஹிரா என்ற மலைக்குகையில் தங்கினார்கள்.

**கேள்வி: அந்த மலைக் குகை எங்குள்ளது?**

பதில் : மக்காவிற்கு வடக்கே மூன்று மைல் தூரத்திலுள்ள ''அரபாத்'' பாதையிலிருந்து இடப்புறம் திரும்பும் ஒரு பள்ளத்தாக்கிலுள்ள குகைக்கு ஹிரா மலைக்குகை என்று பெயர். (குன்றின் மேல் உச்சியில் உள்ளது)

**கேள்வி: ஹிரா மலையில் எவ்வளவு காலம் தங்கினார்கள்; அங்கு அவர்கள் எந்த முறையில் வணங்கினார்கள்?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் ஹிரா மலைக்குகையில் நீண்ட நாட்கள் தங்கினார்கள். தொடர்ச்சியாக வணக்கம் செய்தார்கள். ஹலரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் வணக்க வழிபாட்டு முறையை மேற்கொண்டார்கள். மேலும் அல்லாஹ்வினால் இல்ஹாம் மூலம் அறிவிக்கப்பட்ட முறையில் அவர்கள் வணங்கிக் கொண்டிருந்தார்கள் என்று சொல்லப்படுகின்றது.

**கேள்வி: ஹிராமலைக் குகையில் இருக்கும்போது மனைவி கதீஜா பிராட்டியாரை வந்து பார்ப்பதுண்டா?**

பதில் : ஹிராமலைக் குகையில் இருக்கும்போது பெருமானார் அடிக்கடி வீட்டிற்கு வந்து, தம் அருமை மனைவி கதீஜா பிராட்டியாரையும் குழந்தைகளையும் பார்த்துவிட்டுப் பல நாட்களுக்குத் தேவையான உணவுகளைச் சேகரித்து தரச் சொல்லி வாங்கிக் கொண்டு மீண்டும் குகைக்கு சென்று விடுவார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் கனவு காண்பார்களா? அந்தக் கனவு எப்படிப்பட்டதாக இருக்கும்?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் கனவு காண்பார்கள். இரவிலே அவர்கள் காணும் கனவு பகலில் தத்ரூபமாகச் சிறிதும் மாற்றமில்லாமல் அப்படியே நடக்கும். இது தொடர்ச்சியாக ஆறுமாத காலம் நடந்தது. இதனாலே தான் தனிமையில் இருக்கப் பிரியப்பட்டார்கள்.

# 22. வஹியின் ஆரம்பம்

**கேள்வி: வஹி என்றால் என்ன?**

பதில் : வஹி என்றால் தெய்வ அறிவிப்பு

**கேள்வி: எவரிடத்திலிருந்து யாருக்கு வரும்?**

பதில் : எல்லாம் வல்ல இறைவனிடத்திலிருந்த அவனால் அங்கீகரிக்கப்பட்ட ரஸூல்மார்களுக்கு வானவர் (மலக்குகள்) மூலமாக வரும்.

**கேள்வி: பெருமானாருக்கு ஆரம்பகாலத்தில் வஹி எப்படி வந்தது?**

பதில் : பெருமானார் அவர்களுக்கு முதன் முதலாக (வஹியின் ஆரம்பம்) தூக்கத்தில் நல்ல சொப்பனம் காண்பதாக இருந்தது. இந்தக் கனவு மறுநாள் அப்படியே நடந்துவிடும். எந்த மாற்றமும் இருக்காது. இதனால் தான் அவர்கள் தனிமையை நாடி ஹிரா குகைக்குச் சென்றார்கள். இதே கேள்வியை நபி (ஸல்) அவர்களிடம் அல்ஹாரிதுப்னு ஹிஷாம் (ரலி) கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு பதில் கூறினார்கள்:

''சில சமயங்களில் மணியோசையைப் போன்ற ஓசை கேட்கும். அது எனக்கு மிகவும் கடுமையாயிருக்கும். பின் வானவரின் (மலக்கு) தோற்றம் தெரியும். அவர் சொன்னதை நான் பாடமிட்டுக் கொண்டவுடன் என்னை விட்டு விலகி விடுவார். இன்னும் சில சமயங்களில் (மலக்கு) வானவர் உருவில் என்னிடம் வந்து உரையாடுவார். நான் பாடமிட்டுக் கொண்டதன் பின் சென்று விடுவார்.''

**கேள்வி: நபி (ஸல்) அவர்களுக்கு வஹியினைக் கொண்டு வந்தவர் யார்? அவருடைய பெயர் என்ன?**

பதில் : நபி (ஸல்) அவர்களுக்கு வஹியியைக் கொண்டு வந்தவர் மலக்குகளின் தலைவர். இவர்களின் பெயர், ஹலரத் ஜிப்ரீல் (அலை).

**கேள்வி: முந்திய நபிமார்களுக்கும் இவர் தாம் வஹி கொண்டு சென்றிருக்கிறாரா?**

பதில் : ஆம். முந்திய நபிமார்களுக்கும் இவர் வஹி கொண்டு சென்றிருக்கிறார்.

**கேள்வி: எந்தெந்த நபிமார்களுக்கு எத்தனை முறை வஹி கொண்டு சென்றிருக்கின்றார்?**

| | |
|---|---|
| பதில் : பாவா ஆதம் (அலை) | 12 |
| நபி இத்ரீஸ் (அலை) | 4 |
| நபி நூஹ் (அலை) | 5 |
| நபி இப்றாஹீம் (அலை) | 4 |
| நபி மூஸா (அலை) | 400 |
| நபி ஈஸா (அலை) | 10 |

முஹம்மது நபி (ஸல்) அவர்களிடத்தில் 2400 முறைகளிலும் இறையறிவிப்பைக் கொண்டு வந்திருக்கின்றார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களுக்கு ஜிப்ரீல் (அலை) மூலமாக வஹி எப்பொழுது எங்கிருக்கும் போது வந்தது?**

பதில் : மதீனா யாத்திரைக்கு பதிமூன்று ஆண்டுகளுக்கு முன்பு அவர்களுடைய நாற்பதாவது வயது முடிவில் ரமலான் மாதம் பிறை 27 அன்று திங்கட்கிழமை இரவு வைகறை உதயத்தில் (கி.பி. 610 பிப்ரவரி மாதத்தில்) ஹிரா குகையில் இருக்கும்போது வஹி வரத் துவங்கிற்று.

**கேள்வி: முதன் முதலில் வஹீ வந்த போது என்ன நடந்தது?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் ஹிரா குகையில் தனிமையில் இறைவனை தியானித்த வண்ணமாக விரிப்பு எதுவும் இல்லாமல் அந்த கரடு முரடான பாறையில் படுத்திருந்தார்கள்.

அப்போது அந்தக் குகையே இடிந்து தரைமட்டமாவது போன்ற, இடியைவிட மேலான ஒரு சப்தம் கேட்டது. இந்த சப்தத்தைக் கேட்டவுடன், பெருமானார் அவர்கள் கண்விழித்து எழுந்து பார்த்தார்கள். எங்குப் பார்த்தாலும் ஒளிமயமாகக்காட்சி அளித்தது. அவர்களுடைய உடலும், உள்ளமும் ஒருங்கே அதிர்ச்சி அடைந்தன. ஏறிட்டுப் பார்த்தார்கள். ஒளிப்பிழம்பான ஒரு பேருருவம் அவர்கள் முன்னர் நின்றது. அதைப் பார்க்க ஆயிரமாயிரம் கண்கள் வேண்டும் போலிருந்தது. எனினும் மீண்டுமொரு முறை கூர்ந்து பார்த்தார்கள்.

தமக்குக் கனவிலும், நினைவிலும் தோற்றம் தரும் அந்தப் பெரிய பிரகாசமான உருவம் தான் அது என்பதைத் தெரிந்து கொண்டார்கள். மெய்சிலிர்த்தது. பேசலாம் என்று நினைத்தாலும் பேச அவர்களுக்கு நா வரவில்லை.

இவற்றை எல்லாம் பார்த்துக் கொண்டே நின்ற ஹலரத் ஜிப்ரீல் (அலை), ''ஓதுவீராக!'' என்றார்கள்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள்: ''நான் ஓதுபவன் அல்லனே! (அதாவது எனக்கு ஓதத் தெரியாதே!) என்று சொன்னார்கள். அப்பொழுது அவர்களை இறுகக் கட்டி அணைத்துவிட்டு விட்டு சிறிது தூரம் எட்டி நின்று, ''ஓதுவீராக!'' என்றார்கள். ஜிப்ரீல் (அலை).

அதற்கு மீண்டும் நபி (ஸல்) அவர்கள் நான் ஓதியவனல்லனே! என்று சொன்னார்கள்.

பிறகு இரண்டாம் முறையாக இறுகக் கட்டிப் பிடித்து பிடியிலிருந்து நாயகத்தைவிட்டு விட்டுச் சற்று விலகி நின்று ''ஓதுவீராக'' என்றார்கள்.

அதற்கும் நபி (ஸல்) அவர்கள்: ''நான் ஓதியவன் அல்லனே!'' என்றே சொன்னார்கள்.

மூன்றாம் முறையாக ஹலரத் ஜிப்ரீல் அவர்கள் நபி பெருமானாரைத் தம் நெஞ்சோடு நெஞ்சாக இறுகக் கட்டி

அணைத்து முன்பு போல் சற்று விலகி நின்று "ஓதுவீராக" என்றார்கள்.

அப்போது நாயகம் (ஸல்) அவர்கள் எதை ஓதுவது? என்றார்கள். "உம்முடைய இறைவனின் திருப்பெயரைக் கொண்டு ஓதுவீராக! எல்லாவற்றையும் படைத்த உம்முடைய இறைவனின் திருப்பெயரைக் கொண்டு ஓதுவீராக! இரத்தக் கட்டியிலிருந்து மனிதனைப் படைத்த உம் இறைவனின் திருப்பெயரைக் கொண்டு ஓதுவீராக! எழுதுகோலைக் கொண்டு எழுதக் கற்பித்தானே அந்த அருட்கொடையாளனான உம் இறைவனின் திருநாமத்தை கொண்டு ஓதுவீராக; அறியாத மனிதனுக்கு அவன் அறியாதவற்றைக் கற்றுத் தந்த இறைவனின்திருநாமத்தைக் கொண்டு ஓதுவீராக" என்று கருத்தைக் கொண்ட அத்தனை வாக்கியங்களையும் நபி (ஸல்) அவர்கள் அப்படியே ஓதினார்கள்.

இவ்வளவும், கல்லில் பதிவது போன்று அவர்கள் நெஞ்சத்தில் பதிந்துவிட்டது.

ஓதி முடிந்ததும் பெருமானார் அண்ணாந்து பார்த்தார்கள். ஹலரத் ஜிப்ரீல் (அலை) மறைந்து விட்டார்கள்.

**கேள்வி: ஜிப்ரீல் (அலை) மறைந்ததும் மாநபி (ஸல்) அவர்களின் நிலை எவ்வாறு இருந்தது?**

பதில் : ஓதி முடிந்ததும் தம் எதிரே நிற்கும் அந்த ஒளி உருவத்தைப் பார்த்தார்கள். அது திடீரென மறைந்து விட்டது. இதைக் கண்டதும் பெருமானாருக்குப் பெருத்த ஏமாற்றம் உண்டாயிற்று. அந்த இருளில் தட்டுத் தடுமாறி வெளியில் வந்து அந்த ஒளியை தேடிப் பார்த்தார்கள். காணவில்லை. மலையின் உச்சியை நோக்கி ஓடினார்கள். வானத்தை அண்ணாந்து பார்த்தார்கள், எங்கும் ஒளிமயமாக இருந்தது. இந்நிலையில் நபி (ஸல்) அவர்களை, அச்சமும், நடுக்கமும் கவ்விப் பிடித்துக் கொண்டன. இரு கைகளாலும் கண்களை மூடிக் கொண்டு தம்மை அறியாமல் அந்த இடத்திலேயே

விழுந்து கிடந்தார்கள். இதைப் பார்த்து கல்லும், முள்ளும், மரம், செடி, கொடிகள் அனைத்தும் "முஹம்மதே நீர் இறைவனுடைய தூதர்; நீர் இறைவனுடைய தூதர்" என்று முழங்குவது போல் அவர்களின் காதுகளில் ஒலித்தது. பொழுது விடிவதற்குள் வீடு வந்து சேர்ந்தார்கள்.

## குகையிலிருந்து வந்தபின்

**கேள்வி: குகையில் இருந்து பெருமானார் (ஸல்) அவர்கள் எப்போது வந்தார்கள்?**

பதில் : மறுநாள் காலையில் வந்தார்கள்.

**கேள்வி: கதீஜா நாயகி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்டது என்ன?**

பதில் : நடுங்கிய உடலுடனும், தளர்ந்த குரலுடனும் வீட்டிற்குள் வந்த பெருமானாரைப் பார்த்து; "அபுல்காசிம்! இத்தனை நாட்களாக எங்கு சென்று இருந்தீர்கள்? தாங்கள் வராதது கண்டு நேற்று ஹிரா மலைக்கு ஆள் அனுப்பினேன். ஆனால்அந்த ஆள் குகைக்கு அருகாமையில் இருந்து தங்களை அழைத்ததாகவும் அங்கிருந்து எந்தவித பதிலும் வரவில்லை என்பதாகவும் சொன்னார். தாங்கள் எங்கு சென்று இருந்தீர்கள்? தங்கள் முகம் எல்லாம் வெளுமையாகத் தோன்றுகிறதே! தங்களிடத்தில் சில மாற்றமும் தெரிகிறதே, என்ன காரணம்?" என்பதாக கேட்டார்கள்.

கதீஜா பிராட்டியார் அவர்களின் வினாவிற்கு எந்த விதத்தில் பதில் கூறுவது என்பதாக பெருமானார் (ஸல்) அவர்கள் தயங்கியவாறு இருந்தார்கள். காரணம் அவர்களது உடல் நடுங்கியது. உள்ளம் பதறியது. உதடுகள் துடித்தன. இந்நிலையில் இருந்த காரணத்தால் பெருமானார் (ஸல்) அவர்களிடத்திலிருந்து சிறிது நேரம் எந்தவித பதிலும் வரவில்லை.

**கேள்வி: மறுமுறை கதீஜாப் பிராட்டியார் தயவோடு நபி (ஸல்) அவர்களிடத்தில் வினவியது என்ன?**

பதில் : அபுல்காசிம், என்றைக்கும் இல்லாத அளவுக்கு இன்று உங்கள் உதடுகள் துடிக்கின்றன, வியர்வையும் தங்களின் உடலிலிருந்து கொட்டுகின்றது. முகத்தோற்றமும் மாறுதலாகத் தெரிகிறது. குகையில் நடந்தது என்ன? விளக்கமாக கூறுங்கள், என்றார்.

**கேள்வி : பெருமானார் (ஸல்) அவர்கள் குகையில் நடந்தவற்றை கதீஜா பிராட்டியாரிடம் எவ்வாறு விளக்கினார்கள்?**

பதில் : பெருமானார் (ஸல்) அவர்கள் தம் அருமை துணைவியார் கதீஜா பிராட்டியாருக்கு, மிகுதியான வணக்கத்தின் காரணமான ஹிராவின் குகையிலேயே எந்தவித விரிப்பும் இன்றி கரடுமுரடான பாறையில் உறங்கியது முதல், ஹலரத் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து அவர்களோடு நெருங்கி உரையாடியது வரையிலும் அக்கணமே மீண்டும் மறைந்தது குறித்தும், மறைந்த பின்னர், அந்த அளப்பரும் உருவமும் அதன், அளவுக்கு அடங்காத பிரகாசமும் மறைந்தது வரையிலும் விளக்கமாக கதீஜா அவர்களுக்கு எடுத்துரைத் தார்கள். இவ்வாறு இவர்கள் கூறிக் கொண்டு இருக்கும்போது மீண்டும் மீண்டும் அவர்களுக்கு உடல் நடுக்கம் ஏற்பட்டது. இந்நிலையைப் பார்த்த பிராட்டியார் அவர்கள் அவர்களின் அருகாமையிலே அமர்ந்து ஆறுதல் சொல்ல முற்பட்டார்கள்.

**கேள்வி: கதீஜா நாச்சியார் தம் கணவருக்கு எவ்வாறு ஆறுதல் கூறினார்கள்?**

பதில் : குகையில் நடந்த நிகழ்ச்சியினை துணைவியார் கதீஜா பிராட்டியாரிடம் கூறிக் கொண்டு இருக்கும்போது நாயகத்துக்கு மீண்டும் மீண்டும் உடல் நடுக்கமும், உதடுகளின் துடிப்பும் அதிகமாகியது. இந்நிலையைப் பார்த்த பிராட்டியார்

அவர்கள பெருமானார் (ஸல்) அவர்களுக்கு அன்பு கலந்த ஆறுதல் வழங்கினார்கள்.

''அபுல் காசிம், தாங்கள் எதற்கும் அஞ்ச வேண்டாம்! தாங்கள் எவருக்கும் எந்தக் கெடுதலும் மனதால் கூட நினைத்தது கிடையாது. இறைவன் நிச்சயமாக தங்களைக் காப்பாற்றுவான். நீங்களோ ஏழைகளின் மீது இரக்கம் காட்டுகின்றீர்கள். ஆதரவற்ற அனாதைகளுக்கு அடைக்கலமும், ஆறுதலும் அளிக்கின்றீர்கள். கடன் சுமையால் நசுக்கப் பட்டவர்களை அச்சுமையிலிருந்து விடுவிக்கின்றீர்கள். இன்னா செய்தாருக்கும் இனியவையே செய்கின்றீர்கள். இத்தகைய சிறப்புப் பண்புகள் பெற்ற தங்களுக்கு இறைவன் எத்தீங்கும் செய்ய நினைக்க மாட்டான். தங்களை ஏதோ ஒருநற்பெரும் செயலை சாதிப்பதற்காக தேர்ந்தெடுத்து இருக்கின்றான்'' என்று ஆறுதல் கூறினார்கள்.

இதற்குள் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு மீண்டும் உடல் நடுக்கமும், உதடுகளில் துடிப்பும், ஏற்பட்டு ''என்னைப் போர்த்துங்கள்'' என்பதாகச் சொன்னார்கள். பிராட்டியார் அவர்களும் கம்பளிப் போர்வையை எடுத்துப் போர்த்தினார்கள். பெருமானார் கண்ணயர்ந்து உறங்கினார்கள்.

## கதீஜாவின் நினைவலைகள்

பெருமானார் (ஸல்) அவர்களின் நிலைமையைக் கண்ட கதீஜா அவர்கள் என்னவென்று புரியாது மனக்கலக்கத்துடன் இருந்தார்கள். இதற்கு யாரிடத்தில் விளக்கம் தெரிந்து கொள்ளலாம் என்று சிந்தித்த வண்ணமாகவும் இருந்தார்கள். இறுதியிலே இதற்குரிய விளக்கத்தைப் பெற வரக்கத்துப்னு நவ்பல் என்ற ஞானியாரை அணுகினார்கள்.

### கேள்வி: வரக்கத்துப்னு நவ்பல் என்பவர் யார்?

பதில் : வரக்கத்துப்னு நவ்பல் என்பவர் கதீஜா பிராட்டியாரின் தந்தையுடன் பிறந்தவரின் மகனாவார். இவர் அக்கால வேதங்களையும் நன்கு கற்று உணர்ந்தவர். உருவ

வழிபாட்டை விட்டு விலகி இருந்தவர். வயது முதிர்ந்த வரக்கா, இப்ரானீ (ஹிப்ரு) மொழியை நன்கு எழுதும் சிறப்பினைப் பெற்றவராகவும் இருந்தார்.

**கேள்வி: கதீஜா பிராட்டியார் வரக்காவிடம் என்ன கூறினார்கள்?**

பதில் : பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களிடத்தில் குகையில் நடந்த விஷயத்தை எவ்வாறு கூறினார்களோ, அதை அப்படியே சிறிதும் மாற்றம் இல்லாமல் எடுத்துரைத்தார்கள். "இதற்குரிய விளக்கம் என்ன? என் கணவர் கனவில் தோன்றிய மாபெரும் உருவம் யாராக இருக்கலாம்?" என்பதாகவும் கேட்டார்கள்.

**கேள்வி: கதீஜாவுக்கு வரக்கதுப்னு நவ்பல் கூறிய பதில் என்ன?**

பதில் : கதீஜாப் பிராட்டியார் அவர்கள் கூறியவற்றைக் கூர்ந்து கேட்டுக் கொண்டே இருந்த வயது முதிர்ந்த வரக்காவின் உடல் சிலிர்த்தது. "குத்தூஸுன், குத்தூஸுன்" என்று மகிழ்ச்சிப் பெருக்கால் கூறினார்.

உன்னுடைய கணவரின் கனவில் தோன்றிய இவர் நிச்சயமாக நபி மூஸா (அலை) அவர்களுக்கும் நபி ஈஸா (அலை) அவர்களுக்கும் இறைவனிடம் இருந்து வஹியைக் கொண்டு வந்த "நாமூஸுல் அஃலமாவார்." உன்னுடைய கணவர் முஹம்மது உலக மக்கள் அனைவரும் எதிர்பார்த்துக் கொண்டு இருக்கும் "மாநபி" ஆவார். இவரிடம், வந்த வானவர் ஏதாவது பிரச்சாரம் செய்யும்படிச் சொன்னாரா? அவ்வாறு சொல்லிச் சென்று இருப்பாரேயானால், அந்தப் பிரச்சாரத்தை பின்பற்றி நடக்கக் கூடிய மார்க்கத்திலே நான் முதலாவது ஆளாகப் பின்பற்ற தயாராக இருக்கிறேன், என்று கூறியதோடு அல்லாமல், "விரைவாக வீட்டிற்குச் சென்று ஐயங்களையும், அச்சங்களையும் தூக்கி எறிந்துவிட்டு அவருக்கு தைரியத்

தையும், உற்சாகத்தையும் கூறி மகிழ்ச்சிகரமாக இருக்கச சொல்லுங்கள்,'' என்று கூறினார்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் வரக்காவைப் பார்த் தார்களா?**

பதில் : ஆம் பார்த்தார்கள்.

**கேள்வி: எங்கு பார்த்தார்கள்?**

பதில் : ஒரு நாள் பெருமானார் கஃபாவிற்குச் சென்று கொண்டிருக்கும்போது வழியில் ஓரிடத்தில் கண்டார்கள்.

**கேள்வி: பெருமானாரைப் பார்த்த வரக்கா என்ன கேட்டார்?**

பதில் :நபி பெருமானாரைப் பார்த்த வரக்கா அகமும், முகமும் மலர்ந்தவராக உரையாடினார். கதீஜா தம்மிடத்தில் கூறிய செய்திகளுக்கு விளக்கம் தந்ததையும் சொன்ன அவர், மீண்டும் பெருமானாரைப் பார்த்து அங்கு என்ன நடந்தது என்பதை தெளிவாகச் சொல்லச் சொல்லிக் கேட்டார். பெருமானார் அவர்களும் அவ்வாறே சொல்லி முடித்தார்கள்.

**கேள்வி: பெருமானாரின் உரை கேட்ட வரக்காவின் உணர்ச்சி மிகுந்த பதில் என்ன?**

பதில் : பெருமானார் அவர்கள் கூறிய வார்த்தைகளைக் கேட்ட வரக்காவின் ஒளி மங்கிய கண்களிலிருந்து மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடியது. சுருக்கம் விழுந்த அவருடைய நெற்றித்திரை விலகியது. ''முஹம்மதே, என்னுடைய உயிர் யார் கைவசம் இருக்கின்றதோ அவன் மீது ஆணையாகக் கூறுகிறேன். நீர் இறைவனால் இவ்வுலகுக்கு அனுப்பப்பட்ட இறுதி நபியாவீர். உம்மிடம் இறைவனின் அருட்செய்தியைக் கொண்டு வந்தவர் வானவர்கோன் ஜிப்ரீல் (அலை) தான். உம்மை இவ்வுலக மக்கள் பொய்யன் என்றும், பைத்தியக் காரன் என்றும் கூறுவார்கள். உம்மால் தாங்க

முடியாத துன்பங்களைத் தருவார்கள். ஊரை விட்டும் விரட்டிப்பார்கள்,'' என்றார்.

''உம்மை ஊரை விட்டும் விரட்டி விடுவார்கள்'' என்ற வார்த்தையைக் கேட்டவுடன், அவர்களின் இதயத்தில் ஆணி தைத்தது போன்றிருந்தது. உடனே பெருமானார் அவர்கள், ''என் மக்கள் என்னை ஊரை விட்டுமா விரட்டுவார்கள்?'' என்றார்கள், மாநபி (ஸல்) அவர்கள். ''ஆம்'' என்றார் வரக்கா. அந்த சமயத்தில் மட்டும் நான் இருந்தால் நிச்சயமாக உமக்கு உதவி செய்வேன்,'' என்றார்.

''முஹம்மது அவர்களே, நீங்கள் எந்த வேதத்தைக் கொண்டு வந்தீர்களோ இதே போன்று உங்களுக்கு முன்பு வந்த இறைத் தூதர்களும் கொண்டு வந்திருக்கின்றார்கள். அவர்கள் அந்தத் தூதை மக்களுக்கு முன்பு எடுத்துரைக்கும் போதெல்லாம், அந்த மக்கள் அவர்களுக்குத் தாங்க முடியாத கொடுமைகளைச் செய்வார்கள். இல்லை என்றால் அவர்கள் வசிக்கும் நாட்டை விட்டே துரத்துவார்கள். ஒரு சிலரைக் கொன்று விடவும் தயங்கினாரில்லை. உங்களுக்கு அந்தச் சமயத்தில் நான் மட்டும் உயிரோடு இருப்பேனேயானால் தளர்வுற்ற இக்கரங்கள் முறுக்கேறி உமக்காக வாளேந்திப் போர் செய்யும்'' என்று உணர்ச்சி வசத்துடன் பேசிய அவர் பெருமானார் அவர்களை இறுகக் கட்டி அணைத்து அவர்களுடைய நெற்றியிலே முத்தமிட்டார்.

## வஹி வராமையால்

**கேள்வி: இறைவனிடத்திலிருந்து வஹி வராமையால் நபி (ஸல்) அவர்களின் நிலைமை எப்படி இருந்தது?**

பதில் : பல மாதங்களாக இறைவனிடமிருந்து வஹி வராததால் மிகவும் மனவேதனையுடையவர்களாக இருந்தார்கள். இறைவன் தன் மீது அதிருப்தி அடைந்து விட்டானோ; இல்லை அவனது பொறுப்பிலிருந்து தம்மை கைவிட்டு விட்டானோ என்ற எண்ணங்கள் அவர்கள் நெஞ்சத்தில் தோன்றலாயின.

இப்பேர்ப்பட்ட சமயங்களில் அருமை மனைவியார் கதீஜாப் பிராட்டியார் அருகில் அமர்ந்து "இறைவன் தங்களுக்கு ஒருபோதும் எந்தத் தீங்கும் செய்ய மாட்டான்" என்று ஆறுதல் சொல்லிய வண்ணமாக இருப்பார்கள்.

இருந்த போதிலும் அண்ணலின் மனம் ஆறுதல் அடையவில்லை. "இறைவனால் நாம் கைவிடப்படுவதைவிட இழிந்த நிலை வேறொன்றும் இல்லை," என்று எண்ணி எண்ணி, மனம் கலங்குவார்கள். "இறைவனே! என் மனக் கலக்கத்தைப் போக்கி நல்லருள் பாலிப்பாயாக" என்று இறைஞ்சுவார்கள். "இந்த உலகமே என்னைக் கைவிட்டாலும், நீ என்னைக் கைவிட்டு விடாதே இறைவா" என்று உள்ளம் உருக மனம் நெகிழ்ந்து பிரார்த்திப்பார்கள்.

இதையே சதாகாலமும், நினைத்து நினைத்து உள்ளம் உருகி, உடல் சோர்ந்து, ஒரு நிமிடம் போவது ஒரு நாள் கழிவது போல், கரை காணாத கலக்கத்தில் மூழ்கி இருந்தார்கள். சில சமயங்களில் மலை உச்சியின் மீது ஏறித் தம்மை மாய்த்துக் கொள்ளலாமா என்றுகூட எண்ணுவார்கள். இந்த சந்தர்ப்பங்களில் ஜிப்ரீல் (அலை) அவர்கள் தோன்றி "முஹம்மதே வருந்தாதீர், நீர் நிச்சயமாக இறைவனின் தூதர்தான்!" என்று கூறுவார்கள். இதைக் கேட்டதும், மனம் ஆறுதல் அடையும்.

**கேள்வி: மீண்டும் நபி (ஸல்) அவர்களுக்கு வஹீ எப்போது வந்தது?**

பதில் : நபி (ஸல்) அவர்களுக்கு ஜிப்ரீல் அவர்கள் மீண்டும் எப்போது வஹியைக் கொண்டு வந்தார்கள் என்பது பற்றி அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன. பெரும்பான்மை யோரின் ஆதாரப்படி ஆறு மாதங்களுக்குப் பின் மீண்டும் அவர்களுக்கு வஹி வந்தது.

**கேள்வி: ஆறு மாதங்களுக்குப்பின் எவ்வாறு வந்தது?**

பதில் : வஹி வராமை கண்டு மனக்கலக்கத்துடன் பெருமானார் (ஸல்) அவர்கள் தனிமையில் வெளியில் சென்று கொண்டிருந்தார்கள். அப்பொழுது வானத்தில் இடியை விட மாபெரும் சப்தம் ஒன்று கேட்டது. பெருமானார் (ஸல்) அவர்கள் வானத்தை அண்ணாந்து பார்த்தார்கள். அங்கே ஹலரத் ஜிப்ரீல் (அலை) அவர்கள் ஒளிமயமாக அமர்ந்திருப்பதைக் கண்டார்கள்.

ஹிராவிலே அன்று தாம் பார்த்த அதே உருவம் தான், என்பதை நன்கு தெரிந்து கொண்டார்கள். முன்புபோல் மீண்டும் அவர்களுக்கு உடல் நடுக்கமும், அச்சமும் ஏற்பட்டது. நேரடியாக வீட்டிற்கு வந்து "என்னைப் போர்த்துங்கள், போர்த்துங்கள்" என்று சொல்லவும் கதீஜா நாச்சியார் அவர்கள் கம்பளிப் போர்வையை கொண்டு வந்து போர்த்தினார்கள்.

**கேள்வி: மீண்டும் ஜிப்ரீல் (அலை) பெருமானாரை எங்கு சந்தித்து என்ன செய்திகளை சொன்னார்கள்.**

பதில் : சற்று நேரத்தில் ஜிப்ரீல் (அலை) வீட்டிற்கு வந்து, நபி (ஸல்) அவர்களுக்குமுன் தோன்றி: "போர்வை போர்த்தியவரே எழுந்திரும்! உம்முடைய சமூகத்தாருக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும். உம் இறைவனை (ரப்பை)ப் பெருமைப்படுத்தும். உம் ஆடைகளைத் தூய்மையாக வைத்துக் கொள்ளும். (விக்கிரக வணக்கங்களிலிருந்து விலகிக் கொள்ளும்)" என்ற வஹீயை அறிவித்தார்கள்.

மேலும் (முஹம்மதே), உம்மை இறைவன் கைவிடவும் இல்லை. வெறுக்கவும் இல்லை. உமது வருங்காலம் மிகவும் மேன்மை பொருந்திய சிறப்புடையதாக இருக்கும். உமக்கு அருள் புரிந்த இறைவன் வருங்காலத்தில் பெரும் பதவிகளையெல்லாம் தருவான்.

நீர் அனாதையாக இருக்கும்போது உம்மை ஆதரிந்து பரிபாலிக்கவில்லையா? நீர் திகைத்துத் தயங்கியபொழுது உமக்கு நேர்வழி காட்டவில்லையா? நீர் வறுமையுற்ற பொழுது

அவன் உம்மை வாழ்விக்கவில்லையா? ஆதலால் நீரும் அனாதைகளை அலட்சியப்படுத்தாதீர். இரப்பவர்களை விரட்டாதீர். உம் இறைவனின் அருளைப்பற்றி மற்றவர்களுக்கு எடுத்துரைத்து அவனுக்கு நன்றி செலுத்திக் கொண்டே இருப்பீராக! என்ற கருத்துக்கள் பொதிந்த இறைவாக்கு களையும் ஜிப்ரீல் (அலை) கொண்டு வந்து அண்ணலாரிடம் சேர்ப்பித்தார்கள்.

## உறவினர்களை அழைத்தல்

**கேள்வி: நபிப்பட்டம் கிடைத்தது ஹலீமா நாச்சி யாருக்குத் தெரியுமா?**

பதில் : பெருமானார் (ஸல்) அவர்களுக்கு நபிப்பட்டம் அருளப்பட்டதை அவர்களின் வளர்ப்புத் தாயாரான ஹலீமாவும், கணவர் ஹாரிதும் கேள்விப்பட்டு பெருமகிழ்ச்சி அடைந்தார்கள். இருவரும் மக்கா நகரை நோக்கி விரைந்து நபி (ஸல்) அவர்களை நேரில் கண்டு மகிழ்ச்சிப் பெருக்கால் உரையாடி னார்கள்.

**கேள்வி: நுபுவ்வத்து வந்த பின்னர் நபிகள் பெருமானார் (ஸல்) இஸ்லாத்தில் சேருமாறு முதன் முதலில் யாரை அழைத்தார்கள்?**

பதில் : முதன் முதலில் தங்களுடைய உறவினர்களையே அழைத்தார்கள்.

**கேள்வி: அழைப்பு எங்கு எவ்வாறு கொடுக்கப் பெற்றது?**

பதில் : "நபியே, உம் உறவினர்களை அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும்," என்ற இறை கட்டளை வந்தது. அதனை நிறைவேற்ற நபிகள் பெருமானார் (ஸல்) தீவிரமாக முனைந்தார்கள்.

ஒரு நாள் ஹலரத் அலீ (ரலி) அவர்களை அழைத்து, கொழுத்த ஓர் ஒட்டகத்தை அறுத்துக் கறி சமைத்துத் தம்

உறவினர் அனைவரையும் அழைத்து வந்து விருந்துண்ணச் செய்தார்கள். விருந்து முடிந்ததும் நபி பெருமானார் (ஸல்) எழுந்து, இறைவன் தமக்கு அறிவித்த மார்க்கத்தைப் பற்றி விருந்துண்ண வந்திருந்த தம் உறவினர்களுக்கு எடுத்துரைக்க வாய் திறந்தார்கள். அதற்குள் அவர்களின் பெரிய தந்தை அபூலஹப் என்பார், "முஹம்மதே! எங்களை விருந்துக்குத் தானே அழைத்தீர். உம் போதனையைக் கேட்பதற்கு அல்லவே! எங்களுக்கு நேரம் அதிகமாகின்றது" என்று சொல்லி அனைவரையும் அழைத்துக் கொண்டு போய்விட்டார்.

பெருமானார் அவர்களுக்குப் பெருத்த ஏமாற்றமும், மனவேதனையும் உண்டாயிற்று. தம் பெரிய தந்தை அபூலஹப் வேண்டும் என்றே திட்டமிட்டுக் கூட்டத்தைக் கலைத்து விட்டார் என்று ஹலரத் அலீயிடம் கூறினார்கள்.

**கேள்வி: நபிகள் பெருமானார் (ஸல்) மீண்டும் தம் உறவினர்களை அழைத்தார்களா?**

பதில் : முதல் நாள் நடந்தது குறித்துச் சிறிதும் மனம் தளராது மீண்டும் அலீ (ரலி) அவர்களிடம் "இன்றும் ஓர் ஒட்டகத்தை அறுத்துக் கறி சமைத்து, நேற்று அழைத்த அனைவரையும் விருந்துண்ணச் செய்ய வேண்டும்," எனச் சொன்னார்கள்.

ஹலரத் அலீ அவர்களும் அவ்வாறே ஏற்பாடுகளைச் செய்தார்கள்.

உறவினர்கள் அனைவரும் விருந்துண்டு முடித்தார்கள். என்ன நேரினும் இன்றைக்கு இறைவன் தமக்கிட்ட கட்டளையினை இம்மக்களுக்கு எடுத்து இயம்பிவிட வேண்டும் என்று அவர்கள் உறுதி கொண்டார்கள். சபையில் உள்ள மக்களை நோக்கி, "அன்பிற்குரிய உறவினர்களே! நான் இப்பொழுது உங்களுக்கு மத்தியில் நல்ல கருத்துள்ள செய்திகளைத் தருகிறேன். நான் இப்பொழுது உங்களுக்குக் கொண்டு வந்திருக்கும் மகிழ்ச்சியுள்ள செய்தியை விட மேலான

செய்தியினை மற்றவர்கள் கொண்டு வந்ததில்லை. இச்செய்தி உங்களுக்கு இவ்வுலகத்திற்கும், மறு உலகத்திற்கும் வெற்றியுடன் கூடிய நல்வாழ்வினை அளிக்கும். இதனை உங்களுக்கு அறிவிப்பதற்காகத்தான் இறைவன் உங்களுக்கு மத்தியில் என்னை நபியாக அனுப்பியுள்ளான். இது அவனால் எனக்குப் பிறப்பிக்கப்பட்ட கட்டளையாகும். "இந்தப் புனிதமான பணியில் எனக்கு ஆதரவளித்து உதவி செய்வதற்கு இக்கூட்டத்திலே இருக்கும் உங்களில் யாராவது முன்வர முடியுமா?" என்று கேட்டார்கள்.

விருந்துண்ண வந்த மக்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்த வண்ணமாக இருந்தனர். சிலர் கூட்டத்தை விட்டு நழுவ ஆரம்பித்தார்கள். அப்பொழுது அந்தக் கூட்டத்தின் மத்தியில் இருந்து ஒரு குரல் கேட்கிறது. "இறைத்தூதர் அவர்களே! உங்களுடைய அழைப்பிற்கு என் செவிகளைத் தாழ்த்தியதோடல்லாமல் உங்களோடு இணைந்து முழு ஒத்துழைப்புத் தருகிறேன். உங்களை எதிர்ப்பவர்களை நான் முன்னின்று எதிர்க்கிறேன். உங்களை ஆதரிப்பவர்களை நான் மனமுவந்து ஆதரிக்கிறேன்" என்ற குரல் கணீரென்று ஒலித்தது. குரல் வந்த திசையை நோக்கி மக்கள் பார்த்தார்கள். அங்கே பெரிய தந்தையின் மகனார் இளம் வீரர் அலீ அவர்கள் அனல் தெறிக்கும் கண்களோடு அகன்ற மார்போடு, வீரத்தைச் சுமந்திருக்கும் தோள்களோடு காட்சியளித்தார்கள். பெருமானார் அலீயவர்களை அன்பின் மிகுதியால் இறுக அணைத்து "சபையோர்களே; இவர் யாரென்று உங்களுக்குத் தெரியும். இவர் என் அருமை சகோதரர், என் உதவியாளர். இவர் கூறுகின்றவற்றைச் செவி தாழ்த்திக் கேளுங்கள்" என்று மகிழ்ச்சியோடு சொன்னார்கள். இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் சபையில் உள்ளவர்கள் "இவரா இறைத்தூதர்? இவர் இறைத் தூதராம். இவருக்கு உதவியாளர் அலீயாம்!" என்று சொல்லிக்கொண்டே கைகொட்டிச் சிரித்தார்கள். மேலும் அங்கு அமர்ந்திருந்த அபூதாலிபைப் பார்த்து, "அபூதாலிபே! உம் சகோதரர் மகனின் உபதேசத்தையும் உம் மகன் அலீயின்

கட்டளையையும் கேட்டுத்தான் நீர் நடக்க வேண்டும்!'' என்று கேலியும் கிண்டலாகவும் பேசிக் கொண்டே அந்த வீடு அதிரச் சிரித்தார்கள்.

# 23. என்னை அழையுங்கள்; கதீஜா (ரலி) இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுதல்

''போர்வையால் போர்த்திக் கொண்டிருப்பவரே, எழுந்து நின்று மக்களுக்கு, அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும். உம் இறைவனைப் பெருமைப்படுத்தும். உம்முடைய உடைகளைத் தூய்மையாக வைத்துக் கொள்ளும். தூய்மை அல்லாதவற்றை விட்டு தூரமாக விலகிவிடும். பிறருக்கு நன்றி செய்து அதைவிட அதிகமான பலனை அவரிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டாம். உம்முடைய இறைவனுக்காக வேண்டி இன்னல்களைப் பொறுத்துக் கொள்ளும்,'' என்ற இறைவனின் உத்தரவு பெருமானாருக்கு அருளப்பட்டது. அதனை அப்படியே தம் மனைவியிடம் ஒப்புவித்தார்கள். இதைக்கேட்டதும் கதீஜா நாச்சியார் பெரிதும் மகிழ்வடைந்தார்கள்.

## மனக் கலக்கம்

நபிகள் பெருமானாரிடத்தில் ஜிப்ரீல் (அலை) வந்து சென்றதும்,''யாரை அழைப்பது, எப்படி அழைப்பது, நம்முடைய அழைப்பை யார் ஏற்றுக் கொள்வார்கள். நம்முடைய அழைப்புக்கு மதிப்புக் கொடுத்து நம்மோடு யார் வருவார்கள்?'' என்று எண்ணிய வண்ணமாக இருந்தார்கள். இந்த எண்ணங்கள் வெகுவாக அவர்களது மனதைத் துன்புறுத்திக் கொண்டே வந்தன.

பெருமானார் (ஸல்) அவர்கள், யாரை அழைப்பது? எப்படி அழைப்பது? என்ன சொல்லி அழைப்பது என்றெல்லாம் நினைத்து நினைத்து நித்தம் மனம் உருகிக் கொண்டிருக்கும் வேளையில், அண்ணலாரின் அருமை மனைவியார் கதீஜா

(ரலி), ''அபுல் காஸிம்! யாரை முதலில் அழைப்பது, நாம் சொல்வதை யார் மதித்து வருவார்கள்? என்று நீங்கள் ஏங்க வேண்டாம். உண்மையை உரைக்கும் தங்கள் நாவால் முதலில் என்னை அழையுங்கள்'' என்று உணர்ச்சி பொங்கக் கூறினார்கள்.

உணர்ச்சியும், உற்சாகமும் மிக்க இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன், பெருமானாரின் கண்களிலிருந்து மலர்கள் உதிர்வதுபோல் மகிழ்ச்சிக் கண்ணீர் கொட்டியது. உதடுகள் மலர்ந்து உள்ளத்திலே கொதிப்பு அடங்கியது. நாயகம் அவர்கள் கதீஜாவை அழைத்தார்கள். அழைப்பை ஏற்று ''வணக்கத்திற்கு உரிய இறைவன் ஒருவன் என்று நம்புகிறேன். அவனுடைய திருத்தூதர் தாங்கள் என்பதை ஒப்புக்கொள்கிறேன்'' என்றார்கள்.

பெண்களிலே முதன் முதலாக இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு, தம் வாழ்க்கையை தீனுக்காக அர்ப்பணித்துக் கொண்டவர் கதீஜா பிராட்டியார் ஆவார்கள்.

## 24. இளைஞர்களில் முதல்வர் ஹலரத் அலீ (ரலி)

ஹலரத் அலீ நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தையான, அபூதாலிபின் குமாரராவார்கள். அபுல் ஹஸன் என்னும் புனைப் பெயரும் ஹைதர் என்ற காரணப் பெயரும் இவர்களுக்கு உண்டு. அபுஸ்ஸிப்தைன் (இரு பேரர்களின் தந்தை) என்ற பெயரும் உண்டு. இவர்கள் கி.பி. 600 -ல் கஃபத்துல்லா வில் பிறந்தார்கள்.

இவருடைய தாய் தந்தை இருவரும் ஹாஷிம் கிளையினர். நபி (ஸல்) அவர்களுக்கு நபித்துவம் வருவதற்கு முன்னர் குறைஷியருக்கு கடுமையான பஞ்சம் வந்தது. அக்காலத்தில், அபூதாலிபு பெருங்குடும்பஸ்தராக இருந்ததால், கையில் போதிய பொருள் இல்லை. குடும்பத்தை நிர்வாகம் செய்வதில்

கஷ்டம் வரக்கூடாது என்பதற்காக, ஹலரத் அலீயை வளர்க்கும் பொறுப்பை நபி (ஸல்) அவர்களும், மற்றும் சில பிள்ளைகளை அபூதாலிபின் சகோதரர்களான ஜஃபர் (ரலி) அப்பாஸ் (ரலி) ஆகியோரும் ஏற்றுக் கொண்டார்கள்.

## ஹலரத் அலீ (ரலி) இஸ்லாத்தைத் தழுவுதல்

ஒரு நாள் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்கள் வீட்டிற்கு வந்தார்கள். அங்கே பெருமானாரும், கதீஜாப் பிராட்டியாரும் தொழுது கொண்டிருந்தனர். இருவர் வணங்குவதையும் இமை கொட்டாது பார்த்துக் கொண்டிருந்த அலீ அவர்கள், தொழுது முடிந்ததும் பெருமானாரை அணுகி, "நீங்கள் இப்போது என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?" எனக் கேட்டார்கள்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள்: "இது அல்லாஹு தஆலாவின் சன்மார்க்கம். இதனைப் பரப்பவே தன்னுடைய தூதர்களை அனுப்பி இருக்கின்றான். இணையற்ற அல்லாஹு தஆலாவின்பால் உம்மை அழைக்கிறேன். அவனை நீர் வணங்க வேண்டும். லாத்து, உஸ்ஸா போன்றவற்றை நீர் நிராகரித்து விட வேண்டும். (லாத்து உஸ்ஸா என்பவை சிலைகளின் பெயர்கள்)" எனப் பெருமானார் கூறினார்கள். இவ்வார்த்தைகளைக் கேட்ட அலீயவர்கள் இம்மாபெரும் பிரச்சனை பற்றி தந்தையார் அபூதாலிபிடம் தெரிவிக்க வேண்டும் என்றார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு சன்மார்க்கத்தை உரிய முறையில் பகிரங்கப்படுத்துவதற்கு முன்னதாக அம்பலமாவதை விரும்பவில்லை. ஆதலால் "இஸ்லாமை நீர் தழுவவில்லையாயின் இதனை மறைத்து வைத்துக் கொள்ளும்," என்றார்கள்.

அலீயவர்கள் ஓர் இரவு மட்டும் அப்படியே இருந்தார்கள். இரக்கமுள்ள இறைவன் அவர்களுக்கு நேர் வழியைக் காட்டினான். காலையில் எழுந்தவுடன் பெருமானாரிடம் வந்து, இஸ்லாமைத் தழுவினார்கள். அப்பொழுது இவருக்கு வயது பத்து!

தாம் இஸ்லாத்தில் இணைந்து தம் தந்தைக்கு தெரியக் கூடாது என்று மறைத்து வைத்திருந்தார்கள். தற்செயலாக, நாயகம் (ஸல்), கதீஜாப் பிராட்டியார், அலீ (ரலி) ஆகிய மூவரும் வணங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்து, "இது என்ன மார்க்கம்" என்று அபூதாலிபு கேட்க, அதற்கு பெருமானார் பதில் சொல்ல, பதிலைக் கேட்டதும் தம் மகன் அலீயைப் பார்த்து நீ எந்த மதத்தைப் பின்பற்றி இருக்கின்றாயோ அதில் முழுமையாக இருந்து செயல்படு என்று கட்டளை இட்டார். இளைஞர்களிலே இஸ்லாமை முதலில் ஏற்றுக் கொண்டவர் ஹலரத் அலீ (ரலி) அவர்கள் தாம். சட்டப்படி வழக்குகளைத் தீர்க்க நாயகத்தினால் நியமிக்கப் பெற்ற நீதிபதிகளில் இவர்கள் முதன்மையானவர். எமன் நாட்டுக்கு நீதிபதியாக நியமிக்கப்பட்டார். "அறியாமைக் காலத்திலுங்கூட இவர்கள் சிலை வணக்கம் செய்ததில்லை."

"அல்லாஹ், இவர்களின் வதனத்தை மேன்மைப் படுத்துவானாக (கர்ரமல்லாஹு வஜ்ஹஹு)" என்று சிறப்பாக இன்றும் இவர்களுடைய திருப் பெயரைக் கேட்போர்களால் பிரார்த்திக்கப்படுகின்றது.

எந்த இரவில் நபி பெருமானாரை குறைஷி கூட்டத்தினர் கொலை செய்யச் சதிசெய்து, அந்நபியவர்களின் வீட்டை முற்றுகை இட்டார்களோ, அந்த இரவில் நாயகம் அவர்கள் அலீயாரை தம் படுக்கையில் படுக்கச் செய்து தம்முடைய போர்வையினால் அவர்களைப் போர்த்தி விட்டு யாரும் அறியாமல் வீட்டை விட்டு வெளியேறினார்கள். இங்கு அலீ (ரலி) அவர்கள் பெருமானாருக்காகத் தம் உயிரையும் தியாகஞ் செய்யத் தயாராக இருந்தார்கள்.

தபூக் யுத்தம் ஒன்றைத் தவிர மற்ற எல்லா யுத்தங்களிலும் கலந்து கொண்டார்கள். தபூக் யுத்தத்தின் போது பெருமானார் அவர்கள் தம்முடைய வீட்டு மக்களுக்கு ஹலரத் அலீயைக் காவலாக வைத்துவிட்டுச் சென்றதால் அந்த யுத்தத்தில் அவர்கள் பங்கு கொள்ள முடியவில்லை. அது பற்றி அவர்கள் நபி பெருமானாரிடம் "தாங்கள் என்னை பெண்டு பிள்ளைகளோடு வைத்துவிட்டுச் செல்வதாயிருப்பின் நான்

இந்த யுத்தத்தில் கலந்து கொள்ள முடியாதே'' என்று வருந்திக் கூற நபி பெருமானார் '' மூஸாவிற்குத் துணையாக அவருடைய இடத்தில் ஹாரூன் அமர்ந்தது போன்று நீர் என் இடத்தில் அமர்வது கண்டு திருப்தி அடைய மாட்டீரா'' என்று கூறினார்கள்.

## வீரம்

ஹலரத் அலீ அவர்கள் அஞ்சா நெஞ்சம் படைத்த மாவீரர். பராக்கிரமசாலி கலைவல்லார் என்றும் மக்களால் பெரிதும் கௌரவிக்கப்பட்டவர்கள். திருக்குர்ஆனை மனனம் செய்து, அதைத் திரு நபி அவர்கள் முன்னிலையில் ஓதி அவர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினார்கள்.

## வாழ்த்துரைகள்

எவருக்கு மறுமையில் மோட்ச வீடு உண்டென உத்தமத் திரு நபி உறுதி கூறினார்களோ அவர்களில் ஹலரத் அலீயும் ஒருவர். நபி பெருமானின் திருப்புதல்வியான மாதர்க்கரசி பாத்திமா நாச்சியாரை அலீ மணந்தார்கள். இமாம் ஹஸன், இமாம் ஹுஸைன் ஆகிய நன்மக்களுக்குத் தந்தை. மதீனாவில் முஹாஜிரீன்களுக்கும் அன்ஸாரிகளுக்கும் இடையே நபி பெருமானார் சகோதர இணைப்பை ஏற்படுத்தியபொழுது ஹலரத் அலீக்கு ஒரு சகோதரர் இல்லாது தனித்தமைக்காக வருந்தினார்கள். அதனை அறிந்த நபி பெருமானார் முன்வந்து, ''நானே உம் சகோதரன்'' எனக் கூறியதனால் அவர்கள் திருப்தி அடைந்தார்கள். மேலும், ''நான் ஆதமுடைய மக்களுக்கெல்லாம் தலைவன். அலீ அரபிகட்கெல்லாம் தலைவர். நான் எவருக்கு நண்பனாக இருப்பேனோ அவருக்கெல்லாம் அலீயும் நண்பனாகயிருப்பார். அவரை நேசிப்பவரே உண்மையான நம்பிக்கையாளர். அவரை வெறுப்பவரே நயவஞ்சகராவர். இகபரமிண்டிலும் என் சகோதரர். நான் அறிவெனும் மாநகரம்! அலீ அதன் தலைவாயில். எவருக்குக் கல்வி மீது ஆசையோ அவர் அவ்வாயிலை அடையவும்'' எனப் பலவாறாகப் பாராட்டிப் பெருமானார் பேசியுள்ளார்கள்.

ஹலரத் அலீ (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுடன் சேர்ந்து கொள்வதற்காக, மதீனாவிற்கு கரடு முரடான பாதையில் நடந்து சென்றதால் அவர்களுடைய இரு கால்களும் வீங்கி இருந்தது மட்டுமல்லாமல் இரத்தமும் கொட்டிக் கொண்டிருந்தது. அவர்களைப் பார்த்த பெருமானார் (ஸல்) அவர்கள் பாசத்தால் கட்டித் தழுவி கண்ணீர் வடித்தார்கள். பிறகு தங்களின் உமிழ் நீரினால் அவர்களின் இரு கால்களிலும் தடவி விட்டார்கள். உடனே வீக்கம் வற்றி, வேதனை நின்றது. குருதி சொட்டிய இடங்கள் காய்ந்தன. அப்புறம் அவர்களுடைய மரண காலம் வரையில் கால் வீக்கமோ காலில் நோவினையோ ஏற்படவில்லை.

மூன்றாம் கலீபா உத்மான் (ரலி) திருமதீனாவில் கொலை செய்யப்பட்ட பிறகு அலீயவர்கள் அங்குள்ள மக்களால் ஹிஜ்ரீ 35ம் ஆண்டு துல்ஹஜ் மாதம் 25ம் தேதி வெள்ளிக்கிழமை கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஐம்பத்தேழு மாதங்கள் கலீபாவாக ஆட்சி புரிந்தார்கள்.

ஒரு நாள் அதிகாலை ஸுப்ஹுத் தொழுகைக்காகப் பள்ளிக்குச் செல்லும்போது, அப்துல் ரஹ்மானிப்னு முல்ஜிம் என்பவனால் தாக்கப்பட்டு மூன்று நாட்கள் வரை வேதனையால் அவதிப்பட்டு ஹிஜ்ரீ 40 ரமலான் பிறை 17 அன்று வெள்ளிக்கிழமை இரவு தம் 63 வது வயதில் மரணித்தார்கள். (இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்).

# 25. ஹலரத் அபூபக்கர் ஸித்தீக் [ரலி] இஸ்லாமைத் தழுவுதல்

## பிறப்பு:

ஹலரத் அபூபக்ரு ஸித்தீக் அவர்கள் கி.பி. 573 துல்கஃதா மாதம் ஏழாம் நாள் திங்கள் கிழமை பிறந்தார்கள். இவருடைய தந்தையின் பெயர் உத்மான்: (அபூகுஹாபா என்பது

தந்தையாரின் மறுபெயராகும்.) தாயாரின் பெயர் உம்முல் கைர் ஸல்மா என்பதாகும்.

## பெயர்

அப்துல் கஃபா அதாவது கஃபாவின் அடிமை என்பது இவர்களில் இயற்பெயர். இதனை நபி பெருமானார் அப்துல்லாஹ் (அல்லாஹ்வின் அடிமை) என்று மாற்றினார்கள். இன்னும் இவருடைய குடும்பத்தாரே அப்துல்லாஹ் என்று பெயர் வைத்ததாகவும் சொல்லப்படுகின்றது. ஆதி காலங்களிலிருந்தே அரபு நாட்டில் அப்துல்லாஹ் என்று பெயர் வைக்கும் வழக்கம் இருந்ததால் அவருடைய பெற்றோர்கள் இப்பெயரை வைத்திருக்கலாம் என்று சொல்லப்படுகின்றது.) அல்அதீக் அதாவது அடிமைகளை விடுவிப்பவர் என்ற மற்றொரு பெயரும் உண்டு. அழகாக இருந்தார்கள். அதனால்தான் இப்பெயர் வந்தது, என்று அல் லைதுப்னு ஸஃது போன்றோர் கூறுகின்றார்கள். மேலும் களங்கப்படுத்தக் கூடிய குறைகள் எதுவும் அவர்களுடைய வம்சத்தில் இல்லை; அதனால் இப்பெயர் வந்தது என்று ஜுபைருப்னு பக்ரு கூறியுள்ளார்கள். நீர் நரகத்தை விட்டு விடுவிக்கப்பட்டவர் ''அதீக்'' என்று பெருமானார் கூறி இருக்கின்றார்கள். இதனால் இப்பெயர் வந்தது என்றும் சொல்லப்படுகிறது.

ஸித்தீக் (உண்மையாக்குபவர், சத்தியத்தை உறுதிப் படுத்துபவர்) என்பது இவர்களுக்கிருந்த மற்றொரு காரணப் பெயர். இளமையிலிருந்தே அவர்களுக்குப் பலநற்குணங்கள் இருந்தமையால், அபூபக்கர் நற்குணங்களின் தந்தை என்று அழைக்கப்பட்டார்கள்.

## தோற்றம்

நேர்த்தியான வளர்த்தி, வெளிறின நிறம், மிகவும் ஒல்லியான உருவம், ஒடுங்கிய கன்னங்கள், உயர்ந்த நெற்றி ஆகிய அமைப்புள்ளவர்கள், தாடிக்கு மருதோன்றியையும், கத்திம் என்பதையும் கொண்டு சாயமிட்டுக் கொள்வார்கள். பெருமானாரைவிட வயது குறைந்தவர்கள்.

## தொழில்

அரபியர்களின் தலைசிறந்த தொழில் வர்த்தகமாக இருந்தது. இத்தொழிலிலேயே தம் முழுக் கவனத்தைச் செலுத்தி மக்களிடையே சிறந்த வர்த்தகரானார்கள். வியாபாரத்தில் கலப்படப் பொருள்களை வாங்க, விற்கமாட்டார்கள். நிறுவையிலும், அளவையிலும் நேர்மையானவர்கள். வாக்குத் தவற மாட்டார்கள். மறந்தும் பொய் பேச மாட்டார்கள். "நான் அல் அமீனுக்குத் தோழன், பொய்யுரைக்க மாட்டேன்" என்பார்கள். தொழிலில் ஈட்டிய பொருளை இஸ்லாத்தில் இணைந்ததும், அதற்காகச் செலவு செய்தார்கள்.

## இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட நிகழ்ச்சி

ஹலரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் சிரியாவில் வாணிபம் செய்து விட்டு மக்காவுக்குத் திரும்பி வந்து கொண்டிருக்கின்றார்கள். நகரை நெருங்குவதற்கு சற்றுமுன் குறைஷிகள் சிலரைச் சந்தித்து, "தாங்கள் எல்லோரும் நலமா, ஊர் மக்கள் எப்படி இருக்கின்றார்கள், ஊரிலுள்ள முக்கிய செய்திகள் ஏதேனும் உண்டா?" என்று கேட்டார்கள். அதற்கு அந்தக் குறைஷிகள், "ஊர் மக்களெல்லாம் நலமாகத்தான் இருக்கிறார்கள். ஆனால் ஊரில் எங்கு பார்த்தாலும் ஒரே குழப்பமாக இருக்கின்றது. மக்கள் கூட்டம் கூட்டமாகக் கூடி நின்று பேசிக் கொண்டிருக்கின்றார்கள்" என்றார்கள்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் அபூபக்கர் (ரலி) காரணத்தை வினவ "அபூதாலிபுவின் தம்பி மகனான அந்த அநாதை தன்னை நபி என்று சொல்லிப் பிதற்றிக் கொண்டிருக்கிறார்," என்றார்கள். இதைச் செவிமடுத்த அபூபக்கர் அவர்கள், "குறைஷி நண்பர்களே! "தாம் நபி" என்று முஹம்மது சொன்னார்களா?" என்று கேட்டார்கள். குறைஷிகளும் "ஆம்! நாங்கள் கூறுவதெல்லாம் முஹம்மது நாவால் சொன்னது தான்" என்றார்கள். இதைக் கேட்ட அபூபக்கர் அவர்கள், "நீங்கள் சொன்னவாறு அல்அமீன் கூறி இருப்பாரேயானால் நிச்சயமாக அவர்கள் இறைவனின்

நபியாகத் தான் இருக்க வேண்டும். இதில் எனக்கு சிறிதேனும் ஐயமில்லை, அவர் எப்பொழுதும் பொய்யுரைத்ததும் இல்லை, எனவே அந்த அல்அமீனிடம் நேரில் இதுபற்றிக் கேட்கும் முன்னரே நான் அதனை ஒப்புக் கொள்கிறேன்'' என்றார்.

இதற்குப்பின் முழுவிபரங்களையும் நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக ஆவலோடு தம் ஒட்டகையை நகரை நோக்கி ஓட்டினார்கள். நபி பெருமானாரைக் கண்டார்கள். அருகில் அமர்ந்து விபரங்களைக் கேட்டார்கள். பொறுமையே உருவான பூமான் நபி அவர்கள் இறைவனது சன்னிதானத்திலிருந்து தமக்கு அருளப்பட்ட செய்திகள் அனைத்தையும் தெளிவாகச் சொன்னார்கள்.

இவற்றையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த அபூபக்கர் அவர்கள் அந்த இடத்திலேயே ''வணக்கத்திற் குரியவன் ஏக இறைவனான அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. முஹம்மது (ஸல்) அவர்கள் அவனுடைய அடியாரும் திருத்தூதருமாவார்கள் என்று உறுதி கூறுகிறேன்'' என்றார்கள்.

இதனைப் பெருமானார் அவர்கள், மலர்ந்த முகத்தோடு ஏற்றுக் கொண்டு இறைவனுக்கு நன்றி செலுத்தினார்கள். (இஸ்லாமை ஏற்றுக் கொள்ளும்போது ஹலரத் அபூபக்கர் சுமார் 40 ஆயிரம் திர்ஹங்களுக்கு மேல் ஆஸ்தியுடையவராக இருந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.)

## அழைப்பு விடுத்தவர்

இஸ்லாத்தை ஏற்ற அபூபக்கர் அவர்கள் தம்மைச் சார்ந்த மற்ற நண்பர்களையும் இஸ்லாத்தில் இணைந்து செயல்படும்படி ஆர்வமூட்டி பகிரங்கமாகப் பிரச்சாரம் செய்தார்கள். இவர்களது அழைப்பால் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்கள் உதுமான் இப்னு அப்பான், ஜுபைர் இப்னு அவ்வாம், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்பு, ஸஃதுப்னு அபீவக்காஸ், தல்ஹா இப்னு

உபைதுல்லாஹ், அபூ உபைதா இப்னு ஜர்ராஹ், அபூஸல்மா அர்க்கம் மக்ஸூமி, உபைதா இப்னு ஹாரித், ஸஃதுப்னு ஜைது(ரலியல்லாஹு தஆலா அன்ஹும்) ஆகிய சான்றோராவர். சுவர்க்கவாதிகள் என்று அறிவிக்கப்பட்ட பத்துப் பெயர்களில் ஐந்து பேர்கள் இவர்களிடத்தில் இஸ்லாத்தைத் தழுவினார்கள்.

## தியாகம்

நபி (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து குடிபெயர்ந்து சென்று தௌர் குகையில் ஒளிந்து கொண்டிருக்கும்போது, அவர்களுடன் சேர்ந்து இருந்த ஒப்பற்ற துணைவர். பின்னர் அங்கிருந்து மதீனாவுக்கு உடன் சென்று அங்கே குடியேறிய தியாக சீலர்.

திருநபி (ஸல்) அவர்களிடமிருந்து சன்மார்க்க விவரங்களை ஆழ்ந்த சிந்தனையோடு கேட்டு மற்ற ஸஹாபா பெருமக்களுக்கு அறிவித்தவர்கள். உமறுப்னு கத்தாப், உதுமானுப்னு அப்பான், அலீ, அப்துர் ரஹ்மானுப்னு அவ்ப், அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத், அப்துல்லாஹ் இப்னு உமறு, ஹுதைபத்துப்னுல் யமான், ஜைதுப்னு தாபித், அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி யல்லாஹு அன்ஹும்) போன்ற பிரபல ஸஹாபிகளெல்லாம் இவர்களிடம் சன்மார்க்க விஷயங்களை நன்கு கேட்டு மற்ற மக்களுக்கு அறிவித்திருக்கின்றார்கள்.

இஸ்லாமியப் பிரச்சாரத்துக்கு முன்னரே குறைஷித் தலைவர்களில் ஒருவராகவும் அவர்களால் விரும்பி நேசிக்கப்பட்டவராகவும் இருந்தார்கள். குறைஷி குலத்தின் சார்பாக நஷ்டஈடு கொடுப்பதும் நஷ்டஈடு வாங்குவதும் அவரிடத்தில் ஒப்படைக்கப் பட்டிருந்தது. அவர்கள் எதற்காவது பொறுப்பேற்றுக் கொண்டால் அதை குறைஷியர்கள் அப்படியே ஏற்றுக் கொள்வார்கள்.

குறைஷி காபிர்களின் இம்சைகள் கடுமையான போதும்கூட, அவர்கள் அபிசீனியாவிற்குச் செல்லாமல்

பெருமானாருடனேயே இருந்தார்கள். நாயகத்துடன் மதீனாவிற்குக் குடிபெயர்ந்து செல்லும்போது கூட, தம் மனைவி மக்கள் குடும்பத்தார் எவரையும் அழைத்துச் செல்லவில்லை.

ஒரு நாள் பூமான் நபி (ஸல்) அவர்கள் கஃபாவின் அருகில் தொழுது கொண்டிருந்தார்கள். சன்மார்க்க விரோதிகள், துண்டைப்போட்டு முறுக்கி அவர்களுடைய கழுத்தை நெறிக்க முற்பட்டபோது ''என் சமூகத்து மக்களே; 'என்னுடைய ரப்பு அல்லாஹ்' என்று சொல்லுகிற இந்த மனிதரையா நீங்கள் கொல்லப் போகின்றீர்கள்? அவர் உங்களுடைய இறைவனிடமிருந்து தக்க அத்தாட்சிகளுடன் வந்திருக்கின்றார். அவரை விட்டு விடுங்கள்'' என்று கூறி அவர்களின் பிடியிலிருந்து அண்ணலைக் காப்பாற்றினார்கள். இன்னும் சன்மார்க்கத்தைத் தழுவியதற்காகச் சித்திரவதை செய்யப்பட்ட ஏழு அடிமைகளை, அதிகப் பொருள் கொடுத்து விலைக்கு வாங்கி, அவர்களுக்கு சுதந்திரம் அளித்தார்கள்.

## உமருல் பாரூக் கூறியது

''நாங்கள் தர்மம் செய்யவேண்டும் என்று முஹம்மது (ஸல்) அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். அந்த சமயத்தில் என்னிடம் பணமிருந்தது. ''இன்று தர்மம் செய்வதில், அபூபக்கரை மிஞ்சி விடுவேன்,'' என்று என் மனதினில் கூறிக்கொண்டே விரைந்து சென்று ''என்னிடமிருந்த பணத்தில் பாதியை கொண்டு வந்தேன்,'' என்று சொன்னேன். அதற்கு திருநபி (ஸல்) அவர்கள் ''உம் குடும்பத்தாருக்கு எவ்வளவு வைத்திருக்கின்றீர்கள்? ''என்று கேட்டார்கள். அதற்கு'' நான் இதைப் போல் ஒரு பகுதியை வைத்திருக்கிறேன்,'' என்றேன்.

பின்னர் அபூபக்கர் தம்மிடமுள்ள யாவற்றையும் கொண்டு வந்தார்கள். அவரைப் பார்த்த பெருமானார் அவர்கள், ''அபூபக்கரே, உமது குடும்பத்திற்கு எவ்வளவு வைத்திருக்கின்றீர்?'' என்று கேட்டார்கள். அதற்கு அபூபக்கர் அவர்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் வைத்துவிட்டு வந்திருக்கின்றேன் என்றார்கள். இதைப்பார்த்த

நான் எந்த விஷயத்திலும் எந்தக் காலத்திலும் அபூபக்கரை நான் மிகைக்க முடியாது என்று என் மனதிலேயே சொல்லிக் கொண்டேன்,'' என ஹலரத் உமறுல் பாரூக் கூறினார்கள். இது அவர்களின் தர்ம சிந்தனைக்கு மாபெரும் எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது.

## அடக்கமும் பணிவும்

பெருமானாரின் கட்டளைப்படி இஸ்லாத்திற்கு பொருளுதவி செய்ய முன் வந்த மனிதர்களில் இவர்களே தலைசிறந்தவர். தமது ஆடுகளைத் தாமே மேய்த்து வந்ததல்லாமல், தாமே பால் கறந்து ஏழை எளிய மக்களுக்குப் பகிர்ந்து கொடுப்பார்கள். மதீனா யாத்திரையின் போது அவர்கள் செய்த பேருதவி பெருமானாரை அகமகிழச் செய்தது.

''என்னுடைய செல்வம் எனக்குரியதல்ல. அல்லாஹ்வினாலேயே அதனை யான் அடைந்தேன், ஆகவே அல்லாஹ்வின் வழியிலேயே அதனை நான் செலவிடுகிறேன்'' என்று அவர்கள் மக்களுக்கு மத்தியில் கூறினார்கள். கலீபாப் பதவி ஏற்று, நபி (ஸல்) அவர்களின் பிரதிநிதியாகவும், மாபெரும் அந்தஸ்து உடையவராகவும் இருந்தும்கூட முன்னர் செய்து வந்த அத்துணை உதவி உபகாரங்களையும் மறந்துவிடாமல், அவற்றில் கண்ணும் கருத்துமாயிருந்து செவ்வனே நடத்தி வந்தார்கள்.

''மனிதர்களில் தோழமையிலும் பண உதவியிலும் எனது நோக்கப்படி சிறந்த பரோபகாரியாக உள்ளவர் அபூபக்கர்தாம்; என் இறைவனைத் தவிர்த்து ஒரு நண்பனை யான் அடைய விரும்பின், அபூபக்கரைத்தான் ஒரு நல்ல நண்பராக அடைவேன்'', எனப் பெருமானார் (ஸல்) கூறியுள்ளார்கள்.

தமது வாழ்நாளில் நடந்த இஸ்லாமியப் போர்களுக்கெல்லாம் ஹலரத் அபூபக்கர் (ரலி) சென்று தமது தியாகச் செயலை எடுத்துக் காட்டினார்கள். ஹிஜ்ரீ 10ம் ஆண்டு நபி பெருமானாரின் இறுதி ஹஜ்ஜான ஹஜ்ஜத்துல் விதாவின் போது

பெருமானாரின் ஆணைப்படி ஓரிலட்சம் சஹாபாப் பெருமக்களுக்கு அவர்களே தலைமை வகித்தார்கள். தெரியாதவற்றைத் தெரிவிக்க ஹஜ்ஜின் மகத்துவத்தை நன்கு விளக்கிக்காட்ட சட்டக் கலைகளிலும் மார்க்கத் தீர்ப்புக்களிலும் அன்று அவர்களுக்குச் சமமானோர் எவரும் இலர்.

## பதவி ஏற்றல்

நபி (ஸல்) மறைவிற்குப்பின் மக்களின் ஏகோபித்த அபிப்பிராயத்தின்படி ஹலரத் அபூபக்கரே முதல் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இரண்டேகால் ஆண்டும் 10 நாட்களுமே அவர்களின் கிலாபத் ஆட்சியாகும். தாம் கலீபாப் பதவி ஏற்றபொழுது அரேபியாவில் ஏற்பட்ட உள்நாட்டுக் கலகங்களை அடக்கி ஒடுக்கினார்கள். சத்திய இஸ்லாத்தை எங்கும் மேலோங்கச் செய்தார்கள், நீதியையும், நேர்மையையும், சமாதானத்தையும், சகோதரத்துவத்தையும் நிலை பெறச் செய்தார்கள். நபி (ஸல்) பெருமானாரின் அடிச்சுவட்டைப் பின்பற்றியே, சகல காரியங்களையும் வெற்றிகரமாகச் செய்து முடித்தார்கள். 'மறுமையில் எவர்க்கு மோட்ச வீடு உண்டு என'' நபி (ஸல்) நன்மாராயம் கூறி இருந்தார்களோ அந்த பத்துப் பேர்களில் ஹலரத் அபூபக்கர் ஒருவராவார்கள். பெருமானாரிடமிருந்து அதிகமான ஹதீஸ்களைப் பெற்று அவற்றை மனப்பாடம் செய்திருந்த சஹாபாக்களிலே முதலிடம் வகித்தவர்கள். ஆனால் நபிபெருமானாருக்குப்பின் சொற்ப காலமே உயிருடன் இருந்ததால், அவர்களிடமிருந்து சொற்பமான ஹதீஸ்களே மற்றவர்கள் எடுக்க முடிந்தது.

## மரணம்

அவர்களின் தாய் தந்தையர் இஸ்லாத்தைத் தழுவியவர்கள். அவர்களின் குழந்தைகளும் சகோதரர்களும் சஹாபிகள். அதாவது நான்கு தலைமுறையினர் சஹாபியாகவே இருக்கும் பேறு பெற்றவர்கள். அவர்களுக்கு நஞ்சூட்டப்பட்டதால் மரணித்தார்கள் என்றும் திருநபி (ஸல்) அவர்களின் மறைவின் ஏக்கத்தால் மரணித்தார்கள் என்றும் சொல்லப்படுகிறது. ஹிஜ்ரீ

13ஆம் வருடம் ஜமாதுல் ஆகிர் மாதம் 22ம் தேதி வெள்ளிக்கிழமையன்று மஃரிபுக்கும் இஷாவுக்கும் இடையில் தம் 63வது வயதில் காலமானார்கள். அவர்களின் முன் அறிவிப்பின்படி அஸ்மாஉ என்ற தம்முடைய மனைவியால் ஜனாஸா குளிப்பாட்டப்பட்டு ஹலரத் உமர் பாரூக்கினால் ஜனாஸாத் தொழுகை தொழுவிக்கப்பட்டு பெருமானாரின் கபுருக்கு அருகாமையில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

## 26. ஜைதுப்னு ஹாரிதா

நபிகள் பெருமானாரால் சுதந்திரம் அளிக்கப்பட்ட அடிமைகளில் தலைசிறந்த ஹலரத் ஜைது ஒரு பெரிய குடும்பத்தைச் சார்ந்தவர்கள். சுதந்திரம் பெற்ற முன்னாள் அடிமைகளில் முதலில் இஸ்லாத்தைத் தழுவியவர்கள். நாயகத்துக்கு மிகப் பிரியமானவர்.

இவருடைய தகப்பனார் பெயர் ஹாரிதா. தாயின் பெயர் ஸுஃதா, இவருக்கு அபூஉஸாமா என்ற காரணப் பெயரும் உண்டு. அரபு நாட்டில் இஸ்லாம் பரவுவதற்கு முன்பு, இவர் சிறுவராக இருந்தபோது இவரைச் சிறைசெய்து உக்காள் சந்தையில் விற்றிடக் கொண்டுவந்தார்கள். அங்கு இவரை கதீஜாப் பிராட்டியாருக்காக அன்னாரின் சகோதரனின் புதல்வரும், செயலாளருமான ஹகீமுப்னுஹிஸாம் இவரை வாங்கினார்.

கடத்திக் கொண்டு வந்து சந்தையில் விற்கப்பட்டதால், இவருடைய பெற்றோர் மிகவும் துயரமடைந்தார்கள். பல இடங்களில் தேடி அலைந்தும் கிடைக்கவில்லை. இறுதியில் மக்காவில் இருக்கிறார் எனக் கேள்விப்பட்டு தந்தை ஹாரிதும் சிறிய தந்தை கஃபும் மக்காவிற்கு வந்து, திரு நபி (ஸல்) அவர்களைச் சந்தித்து; "அப்துல் முத்தலிபின் பேரரே! சமூகத்தலைவரின் புதல்வரே; தங்களிடத்தில் இருக்கும் எங்கள் புதல்வரை எங்களோடு அழைத்துச் செல்ல வந்திருக்கின்றோம். அவனுக்குரிய நஷ்ட ஈட்டைத் தருகிறோம். தாங்கள் பெற்றுக்

கொண்டு தயவு செய்து அவனை எங்களிடத்தில் ஒப்புவித்துவிட வேண்டும்'' என்று கேட்டார்கள்.

''சரி! நான் அவரை அழைக்கிறேன். உங்களை அவர் தேர்ந்தெடுத்துக் கொண்டால், அவரை தடையின்றி நீங்கள் அழைத்துச் செல்லலாம். ஆனால் என்னை அவர் தேர்ந்தெடுத்துக் கொண்டால், என்னை நம்பிய அவரை மறந்தும் பிறரிடம் ஒப்படைக்கமாட்டேன்!'' என்றார்கள். அதற்கு வந்த இருவரும் சம்மதித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ஜைதுப்னு ஹாரிதாவை அழைத்து, வந்திருப்போர் இருவரையும் தெரியுமா எனக் கேட்டார்கள். ''ஆம்! என் தந்தையும், சிறிய தந்தையும்'' என்று ஜைது பதிலளித்தார்.

அப்பொழுது நாயகம் (ஸல்) அவர்கள்: ''நான் யார் என்பதை நீர் நன்கு அறிந்திருக்கின்றீர்! என்னைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்; அல்லது அவ்விருவரையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்'' என்று சொன்னார்கள். ''தங்களை விட ஒரு புனிதமானவரை நான் பார்த்ததில்லை. தாங்களே எனக்குத் தந்தையாகவும் சிறிய தந்தையாகவும் இருக்கிறீர்கள்'' என்று உணர்ச்சி பொங்கக் கூறினார் இளைஞர் ஜைது.

அப்பொழுது, தந்தையும், சிறிய தந்தையும்: ''ஜைதே! நீ சுதந்திரத்திற்குப் பதிலாக அடிமைத் தனத்தை தேர்ந்தெடுத்துக் கொள்கிறாயே ஏன்?'' எனக் கேட்டார்கள்.

அதற்கு ஜைது: ''ஆம்! இம்மனிதரில் நான் ஒன்றைப் பார்க்கிறேன்! இவர்களுக்கு விரோதமாக நான் எவரையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளப் போவதில்லை''என்று தீர்க்கமாகக் கூறிவிட்டார்.

அவருடைய இந்த உறுதியைக் கண்ட நாயகம் (ஸல்) அவர்கள், ஜைதை நேரடியாக கஃபாவில் ஹஜ்றுல் அஸ்வதுக்கு அருகாமையில் அழைத்துச் சென்றார்கள். அங்கு கூட்டம் அதிகமாக இருந்தது. கூட்டத்தினரைப் பார்த்த பெருமானார், நீங்கள் அனைவரும் சாட்சியாக இருங்கள்! ஜைது என் புதல்வர், எனக்கு அவர் வாரிசு அவருக்கு நான் வாரிசு, என்றார்கள்.

இந்தக் காட்சியைக் கண்ட அவருடைய தந்தையும், சிறிய தந்தையும் சந்தோஷமடைந்து, ''ஜைதே, நீ நாயகத்திடம் இருந்துகொள்'' என்று முழு மனதுடன் சொன்னார்கள். பின்னர் சுவீகாரம் பற்றி இறையறிவிப்பு வரும்வரை பெருமானாரின் மகனாகவே அவர்கள் கணிக்கப்பட்டு வந்தார்கள்.

## திருமணம்

ஆமினா நாச்சியாரின் பணிப்பெண்ணான உம்மு ஐமன் (ரலி) அவர்களை ஜைதுக்குப் பெருமானார் திருமணம் செய்து வைத்தார்கள். இவர்கள் இருவருக்கும் பிறந்தவர் தாம் ஹலரத் உஸாமா. முன்னதாக தன் மாமி மகளான ஜைனபு பின்து ஜஹ்ஷ் அவர்களை ஜைது (ரலி) அவர்களுக்குப் பெருமானார் திருமணம் செய்து வைத்தார்கள்; ஆனால் இத்திருமணத்தில் இவர்களிடத்தில் ஒற்றுமை இல்லாததால் ஜைது, ஜைனபு (ரலி) அவர்களை விவாகரத்து செய்து விட்டார்கள். இதன் பின் ஜைனபு நாச்சியாரை நாயகமே திருமணம் செய்து கொண்டார்கள். இதனால் இவர் உம்முல் முஃமினீன் (விசுவாசிகளின் தாயார்) என அழைக்கப்படலானார்.

## வீரம்

நபி (ஸல்) அவர்களின் கட்டளைப்படி மக்காவை விட்டு மதீனாவிற்குக் குடியேறிய ஜைது, பத்று, உஹது, கன்தக், கைபர் ஆகிய போர்களில் கலந்து கொண்டு தீரப் பணியாற்றினார். பத்ருச் சண்டையில் வெற்றி கிடைத்த செய்தியை முதன் முதலில் மதீனாவில் அறிவித்தவர் ஹலரத் ஜைது அவர்கள் தாம். வில்வித்தையில் தலை சிறந்த வீரர்களில் ஒருவராக இருந்தார்.

## மரணம்

மூத்தா என்ற களத்துக்குப் பெருமானார் (ஸல்) அனுப்பிய படைக்கு இவரையே தலைமைத் தளபதியாக நியமித்தார்கள். இப்போரில் ஹிஜ்ரீ எட்டாம் ஆண்டு ஜமாதுல் அவ்வல் மாதம் ஷஹீதானார்கள்.

# 27. இரகசியமாக இஸ்லாமிய பிரச்சாரம் செய்தல்

**கேள்வி: இஸ்லாத்தின்பால் மக்களை இரகசியமாக நபி (ஸல்) எப்பொழுது அழைத்தார்கள்?**

பதில் : திருக்குர்ஆனிலுள்ள "யா அய்யுஹல் முத்தத்திர்," (துப்பட்டி போர்த்தியவரே) என்ற வாசகத்தை முதலாவதாகக் கொண்ட ஸூரா (அத்தியாயம்) அருளப்பட்ட பின்னர், சன்மார்க்கத்தின்பால் மக்களை நபி (ஸல்) அவர்கள் இரகசியமாக அழைக்கலானார்கள்.

**கேள்வி: ஏன் அப்பொழுதே பகிரங்கமாகப் பிரச்சாரம் செய்யாத காரணம் என்ன?**

பதில் : இறைவனிடத்திலிருந்து பகிரங்கமாகப் பிரச்சாரம் செய்யச் சொல்லி பெருமானாருக்குக் கட்டளை வரவில்லை. இதனால் மூன்றாண்டுகள் இரகசியமாகவே இஸ்லாத்தின் பக்கம் மக்களை அழைத்து வந்தார்கள்.

**கேள்வி: இரகசியமாக இஸ்லாத்தில் இணைந்த மக்கள் எங்கு தொழுதார்கள்?**

பதில் : இரகசியமாக இஸ்லாத்தைத் தழுவிய மக்கள் தொழ நாடினால், மறைவான இடத்திற்குச் சென்று, இணைவைப்போருக்குத் தெரியாமல் பயந்து பயந்து வணங்கிக் கொண்டிருந்தார்கள்.

**கேள்வி: மறைவான இடத்தில் வணங்கி வந்ததை ஏன் திடீரென்று நிறுத்தினார்கள்?**

பதில் : ஒருமுறை ஸஃதுப்னு அபீவக்காஸும் இன்னும் சில முஸ்லிம்களும் மலைக்கணவாய் ஒன்றில் மறைவாகத் தொழுது கொண்டிருப்பதைப் பார்த்த முஷ்ரிக்குகள் அவர்களைக் கண்டித்தார்கள். குறை கூறினர். இது பெரிய தகராறாக மாறி

பெரும் கலகமாகி விட்டது. இதன் பின்னர் அவர்கள் மறைவான இடத்தில் தொழுவதை விட்டு விட்டார்கள்.

**கேள்வி: மீண்டும் நபி (ஸல்) அவர்களும், தோழர்களும், எங்கு தொழுதார்கள்?**

பதில் : மலைக் கணவாய்களில் பகுதி பகுதியாகப் பிரிந்து தொழுது கொண்டிருந்த முஸ்லிம்கள் மேலே கூறப்பட்ட சம்பவத்திற்குப் பின் மறைந்து தொழ முடியாதவர்களாகி விட்டனர். அதன் பின்னர் பெருமானார் அவர்கள் இதர முஸ்லிம்கள் அனைவரையும் ஒன்றுகூட்டி அர்க்கம் (ரலி) அவர்களுடைய வீட்டில் தொழ ஆரம்பித்தார்கள். இஸ்லாமைப் பகிரங்கமாக பிரச்சாரம் செய்ய வேண்டுமென இறைவனிடமிருந்து கட்டளை வரும் வரை இந்த வீட்டிலேயே தொழுகை நடைபெற்றது. இந்த வீடானது ஸபா மலைக்குன்றின் அடி வாரத்தில் உள்ளது. ஆரம்ப காலத்தில் இஸ்லாத்தில் இணைந்து செயல்பட்டவர்களுள் ஹலரத் அபூபக்ரு (ரலி) அவர்களைத் தவிர்த்து மற்றவர்களெல்லாம் ஏழைகளாகவே இருந்தார்கள்.

## 28. பகிரங்கப் பிரச்சாரம்

**கேள்வி: திருநபி (ஸல்) அவர்கள் எப்போது இஸ்லாத்தைப் பற்றி பகிரங்கமாக பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தார்கள்?**

பதில் : நபிப் பட்டம் கிடைத்து சுமார் மூன்று ஆண்டுகளுக்கு மேலாக பெருமானார் இஸ்லாத்தை பற்றி மறைமுகமாக போதித்து வந்தார்கள். பின்பு இறைவனிடத்தில் இருந்து ''முஷ்ரிக்குகளின் எதிர்ப்பை பெரிதாகக் கருதாமல், உமக்கு இடப்பட்ட கட்டளையை முறைப்படி மக்களுக்கு போதிப்பீராக,'' என்று இறைவனிடமிருந்து நபி (ஸல்) அவர்களுக்கு கட்டளை பிறந்தது. ''உம்முடைய நெருங்கிய உறவினர்களுக்கும் அச்சமூட்டி, எச்சரிக்கை செய்வீராக!'' என்று

இறைவன் கட்டளையிட்டான். இந்தக் கட்டளையை ஏற்று திருநபி (ஸல்) அவர்கள் பகிரங்கமாக இஸ்லாமியப் பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தார்கள்.

**கேள்வி: பகிரங்கமாக இஸ்லாமிய போதனையை எங்கிருந்து நபி (ஸல்) அவர்கள் ஆரம்பித்தார்கள்?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் இஸ்லாத்தைப் பற்றி பகிரங்கமாக முதன் முதலில், மக்காவில் உள்ள அபூகுபைஸ் என்ற மலையின் வடக்குப்புறத்திலே அடிவாரத்தில் உள்ள ஸபா என்ற மலை உச்சியின் மீது ஏறி, பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்கள் பிரச்சாரத்தில் என்ன சொன்னார்கள்?**

பதில் : நபி (ஸல்) அவர்கள் ஸபா மலையின் மீது ஏறி நின்று மக்களை உரத்த குரலில் கூவி அழைத்தார்கள். இந்த சப்தத்தைக் கேட்டவுடன் குறைஷியர்கள், தங்களுக்குள் ஒருவருக்கொருவர், ''அப்துல் முத்தலிபின் பேரர் முஹம்மது அழைக்கிறார். எல்லோரும் அவரிடத்திலே சென்று கூடுங்கள்'' என்று சொல்லியவர்களாக அனைவரும் ஒன்று சேர்ந்தார்கள். அப்பொழுது அங்குள்ளவர்கள், ''முஹம்மதே! எங்களை ஏன் அழைத்தீர்? உமக்கென்ன நடந்து விட்டது?'' என்று கேட்டார்கள். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் அக்கூட்டத்தில் இருந்த அனைவரையும் பார்த்து, ''ஏ, அன்புக்குரிய மக்களே! இந்த மலைக்குப் பின்புறத்தில் இருந்து மாபெரும் படை ஒன்று உங்களைத் தாக்குவதற்காக வந்து கொண்டிருக்கிறது என்று சொன்னால், (என்னுடைய சொல்லை) நீங்கள் நம்புவீர்களா?'' என்றார்கள். அதற்கு அவர்கள் எல்லோரும் 'உம் வார்த்தையை நாங்கள் அனைவரும் நம்புவோம். ஏனென்றால் நீர் எப்பொழுதும் உண்மையே பேசக்கூடியவர்களாக இருப்பதாலும், எங்களால் சந்தேகப்பட முடியாத நபராகவும் இருப்பதாலும் உம்முடைய சொல்லை நாங்கள் ஏற்றுக் கொள்வோம்' என்று சொன்னார்கள்.

நபி (ஸல்) அவர்கள் உடனே, ''எனக்கு முன்னர் உங்களுக்குக் கடுமையான வேதனையிருக்கிறது என்பதை நான் அச்சமூட்டி, எச்சரிக்கை செய்கிறேன். அன்புக்குரிய அப்துல் முத்தலிபின் மக்களே! எனக்கு எதிர்ப்புறத்தில் இருக்கும் அப்துமுனாபின் மக்களே! ஜஹ்ராவின் மக்களே! என்று அரபிக் கோத்திரங்களின் ஒவ்வொரு தலைவரின் கூட்டத்தாரையும் பார்த்துக் குறிப்பிட்டு, ''எனக்கு நெருக்கமுள்ள உறவினர்களாக இருக்கும் உங்களுக்கு நான் அச்சமூட்டி எச்சரிக்கை செய்ய வேண்டும் என்பதாக எனக்கு இறைவன் கட்டளையிட்டிருக் கிறான். அந்தக் கட்டளை யாதெனில், உலகத்தில் இருளைப் போக்கி, சத்தியத்தை நிலைநிறுத்தக் கூடிய, நான் போதித்து வருகின்ற லாஇலாஹ இல்லல்லாஹு என்ற கலிமாவை நீங்கள் கூறி அதன்படி நடக்காவிட்டால் இந்த உலகிலிருந்து எந்தப் பிரதிபலனையும் மறுமையின் நாளில் எந்தப் பங்கையும் நீங்கள் பெற முடியாது'' என்பதாக உபதேசித்தார்கள். இந்த வார்த்தையைக் கேட்டவுடன் அனைத்து மக்களும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்த வண்ணமாக இருந்தார்கள். கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டது.

**கேள்வி: இதைக் கேட்டதும் அபூலஹப், நபி (ஸல்) அவர்களைப் பார்த்து என்ன சொன்னார்?**

பதில் : போதனையைக் கேட்டு முடிந்ததும், அப்துல் முத்தலிபின் குமாரர்களில் ஒருவரும் நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தையுமான அபூலஹப் ஆத்திரத்தோடும் ஆவேசத்தோடும், பெருமானாரை பார்த்து, ''நீ நாசமாய்ப் போவாயாக. இந்த வார்த்தைகளைச் சொல்லத்தானா எங்கள் அனைவரையும் இந்த இடத்திலே ஒன்று கூட்டினீர்'' என்பதாகக் கேட்டார். மேலும் மண்ணை அள்ளி வீசி பெருமானார் அவர்களின் புனித மேனியை புழுதி அடையச் செய்தார்.

பின்னர் நபி பெருமானாரின் போதனையைக் கேட்ட திலிருந்து மன வெறுப்படைந்து, வெளியூர்க்காரர்கள் யாராகிலும் வந்து அபூலஹபிடம் நபி (ஸல்) அவர்களைப் பற்றி

விசாரித்தால் அவர்களைப் பற்றி அவதூறாகப் பேசுவார். அதாவது நபி (ஸல்) அவர்கள் சூனியக்காரர் என்றும், பைத்தியக்காரர் என்றும் கூறுவதையே வழக்கமாக வைத்துக் கொண்டார். யாராவது பெருமானாரைச் சந்திக்க வேண்டுமென்று சொன்னால் கூட அவர்களைச் சந்திக்கவிடாமல் தந்திரமாக ஏதேனும் சொல்லி, அன்னாரைக் காணமுடியாதபடி செய்துவிடுவார். அபூலஹபின் மனைவி உம்மு ஜமீல் என்பவள் நபி (ஸல்) அவர்கள் நடக்கும் பாதையில் அதிகாலை ஸுப்ஹு தொழுவதற்காக பள்ளிவாசலுக்கு செல்லும் இடங்களில் முட்களையும், கரடு முரடான கற்களையும் போட்டுவைப்பாள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களோடு இஸ்லாத்தைப் பற்றி பகிரங்கமாக பிரச்சாரம் செய்த ஸஹாபாக்கள் யார்?**

பதில் : நபி பெருமானாரின் தோழர்களும் அவர்களுடன், பகிரங்கமாக மக்காவில் தெருவெங்கும் பிரச்சாரம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். ஒரு மூலையில் ஸய்யிதுனா அபூபக்கர் (ரலி) அவர்கள் பிரச்சாரம் செய்தார்கள். மற்றொரு பக்கம் ஸயீதுப்னு ஜைது, உத்மானுப்னு அப்பான், ஹம்ஸா (ரலி) அபூஉபைதா (ரலியல்லாஹு அன்ஹும்) ஆகியோரும் சிறிது கூட பயமில்லாமல் பகிரங்கமாகப் பிரச்சாரம் செய்தனர். இதனால் குறைஷியர்களுக்கு நபி (ஸல்) அவர்களின் மீது அதிகப் பொறாமையும் அவர்களின் பிரச்சாரத்தை எப்படியும் தடை செய்ய வேண்டும் என்ற எண்ணமும் உண்டாகி குறைஷியர்கள் அனைவரும் பகிரங்கமாகவும், மறைமுகமாகவும் எதிர்க்க ஆரம்பித்தார்கள்.

**கேள்வி: நபி (ஸல்) அவர்களின் போதனையை பகிரங்கமாக எதிர்த்தவர்கள் யார் யார்?**

பதில் : நபி (ஸல்) அவர்களின் இஸ்லாமியப் பிரச்சாரத்தினை பகிரங்கமாகவே நேருக்கு நேராக, எதிர்த்தவர்கள் அபூஜஹலும், அபூலஹபும், அக்பத்துப்னு அபீமுயீதும், இம்மூவரின் தலைமையில், ஹாரிதுப்னு கைஸ், வலீதுப்னு முகைரா, உபைய்யுப்னு கலப், நுலருப்னுல் ஹாரித்

போன்றார் நாயகம் அவர்களையும் அவர்கள் பிரச்சாரத்தையும் பகிரங்கமாக எதிர்த்தார்கள். இவர்களைத் தவிர, ரபீஆவின் புதல்வர்களான ஷைபாவும், உத்பாவும் அபூஸுப்யானும் விரோதிகளாகவே இருந்தனர்.

# 29. அபூதாலிப் அவர்களிடம் குறைஷியர்கள் தூது செல்லுதல்

**கேள்வி: குறைஷியர்கள் பெருமானாரைப் பற்றி அபூ தாலிபிடம் ஏன் முறையிட்டார்கள்?**

பதில் : பெருமானார் (ஸல்) அவர்கள் அளித்த விருந்து உபச்சாரத்தில் அரிய சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினார்கள். அச்சொற்பொழிவை முடித்த பின்பு, ஹலரத் அலீ அவர்கள் இஸ்லாத்தைத் தழுவினார்கள். மேலும் அன்றிலிருந்து, குறைஷிகளிடம் பெருமானார் (ஸல்) அவர்கள் ஒரே இறைவனை வணங்கும்படியும் விக்கிரக ஆராதனைகளை விட்டுவிடும் படியாகவும், புனித இஸ்லாத்தின் கொள்கைகளை ஏற்று, அதன் பக்கம் வரும்படியாகவும், பகிரங்கமாக அழைத்தார்கள். இந்த அழைப்பானது குறைஷியர்களுக்கு கடும் கோபத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கியது. இதனால் குறைஷியர்கள் அனைவரும் அண்ணலாரைப் பற்றி அபூதாலிபிடம் முறையிட்டார்கள்.

**கேள்வி: அபூதாலிபிடம் நபி (ஸல்) அவர்களைப்பற்றி தூது சொல்லச் சென்ற முக்கியமான குறைஷியர்கள் யார் யார்?**

பதில் : நபி (ஸல்) அவர்களைப் பற்றி அபூதாலிபிடம் முறையிடச் சென்ற குறைஷியர்களில் முக்கியமானவர் கள் ஷைபா, உத்பா, வலீதுப்னு முகீரா, அபூஜஹ்லு, முனப்பஹ் ஆகியோராவர்.

**கேள்வி: தூது கோஷ்டியினர் அபூதாலிபிடம் என்ன வென்று முறையிட்டார்கள்?**

பதில் : அபூதாலிப் அவர்களே, தங்களுடைய சகோதரர் அப்துல்லாஹ்வின் புதல்வர் முஹம்மது எங்களையும் எங்களது மத ஆச்சாரங்களையும், எங்களுடைய மதக் கொள்கைகளையும் குறை கூறுகிறார். எங்கள் முன்னோர்கள் அனைவரும் வழி தவறியவர்கள் என்கிறார். எங்களது தெய்வங்கள் அதாவது நாங்கள் உயர்வாக மதித்து வணங்குகின்ற விக்கிரகங்களைப் பழிக்கிறார். அவற்றை முறையோடு வணங்குகின்ற மக்களையும் வணங்காதவாறு தடுக்கின்றார். இவ்வாறு செய்கின்ற அவரைத் தாங்கள் தடுத்து நிறுத்த வேண்டும். இல்லையென்றால், நீங்கள் எங்களையும், அவரையும் விட்டு விட்டு விலகிவிட வேண்டும். மத விஷயத்தில் அவருக்கு மாறாக, நாங்கள் எவ்வாறு நடந்து கொள்கிறோமோ, நீங்களும் அவ்வாறே இருக்காமல், நேர் மாற்றமாக இருக்கிறீர்கள். ஆனபடியினால், ஒன்று நீங்கள் அவரோடு இருக்க வேண்டும். இல்லையென்றால், எங்களோடு இருக்க வேண்டும் என்பதாகக் கூறினார்கள்.

**கேள்வி: குறைகளைக் கேட்ட அபூதாலிப் அவர்கள் குறைஷியர்க்கு என்ன பதில் சொன்னார்கள்?**

பதில் : அபூதாலிப் அவர்கள் குறைஷியர்களைப் பகைத்துக் கொள்வதற்கும் பிரியமில்லை. ஆறுதல்களைச் சொல்லி அனுப்பி வைத்தார்கள். இந்த சந்திப்பால் குறைஷியர்க்கு எந்தப் பலனும் கிட்டவில்லை. ஆனபடியினாலும் இரண்டாவது முறையாகவும் தூது சென்றார்கள்.

**கேள்வி: இரண்டாவது முறையாக சென்ற தூதுக் கோஷ்டி அபூதாலிபிடம் சொன்னது என்ன?**

பதில் : அபூதாலிப் அவர்களே! தாங்கள் எங்களைவிட வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்தவர்கள், அனைத்திலும் திறமையுள்ளவர்களாகவும் இருக்கிறீர்கள். நீங்கள் எங்களால்

மதிக்கப்படுகின்றவர்களும் கூட. ஆனால், தங்களின் சகோதரர் மகன் முஹம்மதைத் தடுத்து வைக்குமாறு, உங்களை முதலில் கேட்டுக் கொண்டோம். நாங்கள் கேட்டுக் கொண்டதற் கிணங்கி, நீங்கள் இது வரைக்கும் எந்த நடிவடிக்கையும் எடுக்கவில்லை. எங்கள் தெய்வங்களையும், எங்கள் முன்னோர் களையும் அவர் அலட்சியப்படுத்தி திட்டுகின்ற பேச்சுக் களையும் எங்களால் இனியும் பொறுத்துக் கொண்டு இருக்க முடியாது. உடனடியாக அவர் செய்கின்ற போதனைகளிலிருந்து அவரைத் தடுத்து நிறுத்துங்கள். இல்லையென்றால், 'அவருக் கும் எனக்கும் தொடர்பில்லை' என்று சொல்லி, அவரை விட்டு விலகிக் கொள்ளுங்கள் என்றார்கள். ஒன்று எங்களை முழுமையாக ஆதரிக்கக் கூடியவர்களாக இருங்கள். அல்லது அவரையே பின்பற்றக் கூடியவராக இருங்கள். ஏதாவது ஒன்றைச் செய்யுங்கள் என்று கடுமையாகப் பேசி, கண்டித்து விட்டு வந்தார்கள்.

**கேள்வி: அபூதாலிப் அவர்கள் குறைஷியர்களின் முறையிடு பற்றிப் பெருமானாரிடம் என்ன கேட்டார்கள் ?**

பதில் : அபூதாலிப் அவர்களுக்கு தங்கள் சமூகத்தாரை விட்டு விலகிக் கொள்ள பிரியமில்லை. அதைவிட பெருமானாரை போதனை செய்வதை விட்டுவிட்டு நின்று கொள்ளுமாறு சொல்லவும் மனமில்லை. எனவே குறைஷியர் தம்மிடம் கூறிய விவரங்களை நேரில் சொல்லாமல், மற்றவர்கள் மூலமாக நாயகத்துக்கு அறிவித்தார்கள். அறிவித்தது மட்டு மின்றி, " உம்முடைய காரியத்தில் நீர் உறுதியாக இருந்து கொள்ளும். அத்துடன் என்னையும் கவனித்துக் கொள்ளும். எனக்கு வயது அதிகமாகிவிட்டது. இப்பொழுது சக்தி இல்லை இத்தருணத்தில் எனக்குச் சுமையை ஏற்படுத்தி விடாதீர்" என்பதாகச் செய்தியாளர் மூலமாக நபி (ஸல்) அவர்களிடம் அறிவித்தார்கள்.

உடனே பெருமானார் நேரடியாகத் தம் பெரிய தந்தையிடம் வந்து கூறினார்கள்:''அன்பு பெரிய தந்தை அவர்களே! நீங்கள் எனக்கு உதவி செய்தாலும் சரி உதவி செய்யாமல் போனாலும் சரி; எனக்கு இறைவன் இட்ட முக்கிய கடமையைச் செய் வதிலிருந்து நான் விலகமாட்டேன். என்னைப் படைத்து நபியாக அனுப்பிய அந்த சத்திய நாயனின் கட்டளையினை மக்களுக்கு எடுத்துக் கூறுவேன்.''

''நியாயத்திற்கு விரோதமாக இவர்கள் வழிபடுகின்ற விக்கிரகங்களை நான் அங்கீகரிக்க மாட்டேன். இவர்கள் வணங்குகின்ற விக்கிரகங்களுக்கு உயிரில்லை; அறிவும் இல்லை. எந்தத் தத்துவமும் இல்லை. எந்த வகையிலும் குறைஷியர்களுக்கு அவர்கள் வணங்கும் சிலைகள் உதவி செய்யா. ஆபத்திலிருந்து காப்பாற்றுவதற்கும் அந்த சிலை களுக்கு சக்தி கிடையாது. இவர்களின் கோரிக்கைகளை நிறை வேற்றவும் அந்தச் சிலைகளால் முடியாது. எப்படி நாம் இறைவனால் படைக்கப்பட்ட மனிதர்களாக இருக்கிறோமோ, (அதே போன்று அவனால் ஆக்கப்பட்ட) மனிதர்களினால் உண்டாக்கப்பட்ட சிலையேயாகும்.''

''நான் அந்த மனிதர்களைப் பார்த்து: மனிதர்களே! உங்களுக்கும் எனக்கும் அறிவுண்டு; வளர்ச்சியுண்டு. இங்குமங்கும் அசையக் கூடிய சக்தியும் உண்டு. ஒருவருக் கொருவர் உதவி செய்யத் திறமையும் உண்டு. நீங்கள் பேசுவதை நான் கேட்கலாம். நான் பேசுவதை நீங்கள் கேட்கலாம். இத்தனை சக்தியையும் இறைவன் நமக்குத் தந்திருக்கிறான். ஆனால் இவ்விக்கிரகங்களிடத்திலோ, இந்த சக்திகள் எதுவும் இல்லை. அப்படியிருந்தும் அவற்றை நீங்கள் எதற்காக வணங்குகிறீர்கள்?'' என்று கேட்பேன்.

''அவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும். இவ்வுண்மைகளை நான் அனைத்து மக்களுக்கும் எடுத்துச் சொல்வேன். என்னை அவர்கள் அவர் களிஷ்டப்படி எது வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும்.

எனது வலக்கையிலே சூரியனையும், இடக்கையிலே சந்திரனையும் கொடுத்து, நீ செய்கிற இப்பணியை விட்டுவிடு,'' என்று சொன்னாலும் நான் ஒரு போதும் விடமாட்டேன். ஆண்டவன் தன்னுடைய அதிசய சக்தியை வெளியாக்க வேண்டும், இல்லையென்றால், இம்முயற்சியிலே நான் அழிந்து விட வேண்டும். அதுவரை நான் பகிரங்கப் பிரச்சாரத்தை விட மாட்டேன்.

எந்த ஆண்டவன் இந்தப் பிரச்சாரத்தை செய்யும்படி எனக்குக் கட்டளையிட்டானோ அந்த இறைவனே இவர்கள் எனக்குச் செய்கின்ற கெடுதியில் இருந்தும் தாக்குதலிலிருந்தும் என்னைக் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கை எனக்கு உறுதியாக, முழுமையாக இருக்கிறது. இவர்களுக்காக நான் எனது நம்பிக்கையை இழக்கப்போவதில்லை. இது முக்காலும் உறுதி'' என்று சொல்லி விட்டார்கள். இவ்வளவு பெரிய அறிவுரைகளைக் கேட்டதும் அபூதாலிப் அவர்கள் நாயகத்தை நோக்கி, ''என் அருமை மகனே! நீர் இனிமேல் பயப்படாதீர்! உம் சேவையைத் துணிவாகச் செய்யும். எந்த விதத்திலும் உமக்குத் தீங்கு ஏற்படாமல் நான் பார்த்துக் கொள்கிறேன். ஏனெனில், நீர் உண்மையினையே உருவாகக் கொண்டவர். முழு நம்பிக்கைக்கு உதாரணமானவர், உம்முடைய மதமானது மற்ற மதங்களைவிட எளிமையானதாகவும், இனிமையானதாகவும் இருக்கிறது'' என்று சொன்னார்கள்.

இதன்பின் பெருமானார் (ஸல்) அவர்கள் துணிச்சலுடன் போதிக்கலானார்கள். குறைஷியர்கள் பல இன்னல்களைச் செய்தார்கள். என்ன கொடுமைகள் செய்தபோதிலும் நபி (ஸல்) அவர்கள் தம் மன உறுதியால் இஸ்லாமியப் பிரச்சாரத்தினைச் செய்வதை நிறுத்திக் கொள்ளவில்லை.

# 30. மூன்றாவது முறை தூது செல்லுதல்

**கேள்வி: மூன்றாவது முறையாக தூது செல்லும் பொழுது யாரை அழைத்துச் சென்றார்கள்?**

பதில் : தமது சகோதரனின் புதல்வர் முஹம்மது (ஸல்) அவர்களுக்குத் தாம் செய்ய வேண்டிய கடமைகளையும், முக்கியப் பொறுப்புகளையும் பூரணமாகக் காப்பாற்றுவதிலும், அவர்களுக்கு எந்தவிதத் தீங்கும் வராமல் தடுப்பதிலும் அபூதாலிப் அவர்கள் உறுதியாக இருந்தார்கள். இருப்பினும் அவர்கள் தம் முன்னோர்களின் மதத்தினையே நம்பி, அதன்படியே நடந்து வந்தார்கள். இஸ்லாத்தைத் தழுவவில்லை. ஒரு பக்கதில் மத வைராக்கியம் உள்ள குறைஷியர்களின் எதிர்ப்பு, மறுபுறத்தில் இஸ்லாமைப் பரவச் செய்வதில் நபி (ஸல்) அவர்களுக்கு இருந்த மன உறுதி. அபூதாலிப் அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு முழு ஒத்துழைப்புத் தந்ததோடு இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு இருப்பார்களேயானால், அவருடைய பாதுகாப்பு தக்க பயனுள்ளதாகவும் ஆதாரமுள்ள தாகவும் இருந்திருக்கும். ஆனால் அவர்கள் தம்முடைய உறவினர்களைக் காக்கும் கடமையை நிறைவேற்ற வேண்டும் என்ற உணர்ச்சியிலேயே இருந்துவிட்டார்கள்.

இதனால் மூன்றாம் முறையாக நபி (ஸல்) அவர்களிடத்தில் குறைஷியர்கள் தூது சென்றார்கள். இந்த முறை வலீதுடைய புதல்வர் உம்மாரத் என்பரை குறைஷியர் தங்களுடன் அழைத்துச் சென்றார்கள். அவர்கள், அபூதாலியைப் பார்த்து எங்களுடைய மதிப்பிற்குரிய பெரியவர் அபூதாலிப் அவர்களே, இவர் யார் தெரியுமா? இவர்தான் வலீதுடைய புதல்வர் உம்மாரத் என்பவர் ஆவார்.

இவருடைய முகத்தைப் பாருங்கள். இவர் தாம் குறைஷி இளைஞர்களில் வெகு அழகானவர். மிகவும் வீரமுள்ளவர். எதையும் திறமையாகச் செய்யக் கூடியவர். ஆனபடியால்,

இவரை வைத்துக் கொள்ளுங்கள். இவருடைய அறிவும், பூரண உதவியும் உமக்குக் கிடைக்கும். அவரைப் புதல்வராக நீர் ஏற்றுக் கொண்டு, உம்முடைய சகோதரரின் புதல்வர் முஹம்மதை எங்களிடத்தில் ஒப்படைத்துவிடுங்கள். ஏனென்றால், ஏற்கனவே நாங்கள் இரண்டு முறை அவருடைய தவறான செயல்களைப் பற்றியும், எங்களையும் நாங்கள் வணங்குகின்ற தெய்வங்களையும் வழி தவறியவர்கள் என்றும், எங்களிடத்தில் இருக்கக் கூடிய சிறந்த அறிவாளிகளை மடையவர்கள் என்றும் பேசுகிறார். உம்முடைய முன்னோர்களின் மார்க்கத்தை முழுமையாக எதிர்க்கிறார். உம்முடைய சமூகத்தாரின் ஒற்றுமையைக் கெடுத்துச் சின்னாபின்னமாக்கி விட்டார். ஆனபடியினால் மறுபடியும் சொல்கிறோம்; இந்த அழகான இளைஞனை நீர் வைத்துக்கொண்டு முஹம்மதை எம்மிடம் ஒப்படைத்துவிட வேண்டும்,'' என்றார்கள்.

**கேள்வி: குறைஷியர்கள் வார்த்தைகளுக்கு அபூதாலிப் அவர்கள் அளித்த இறுதியான பதில் என்ன?**

பதில் : குறைஷியரின் வார்த்தைகளைக் கூர்ந்து கேட்டுக் கொண்டிருந்த அபூதாலிப் அவர்கள் பின்வருமாறு உறுதியாகவும் இறுதியானதாகவும் கூறினார்கள்: ''குறைஷி மக்களே! நீங்கள் இதுநாள் வரை எனக்கு நன்மை செய்வதாகவே கூறி வந்தீர்கள். ஆனால் இன்று எனக்கு மாபெரும் கெடுதலைச் செய்ய வந்திருக்கிறீர்கள். உங்களுடைய சுய நலனுக்காக, உங்களுடைய புதல்வனைத் தந்துவிட்டு, நீங்கள் கொலை செய்வதற்காக என்னுடைய புதல்வரை நான் உங்களுக்குத் தர வேண்டும் என்று கேட்கிறீர்கள். இது ஒரு காலும் நடைபெறாது. உங்களின் இக்கோரிக்கையை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை,'' என்று சொல்லிவிட்டார்கள்.

அபூதாலிப் இவ்வாறு சொன்னது குறைஷியர்களுக்கு மாபெரும் வருத்தத்தையும், விரோதத்தையும் ஏற்படுத்தி விட்டது. உடனே குறைஷியர்கள் அனைவரும் நபி பெருமானாரின் போதனைகளைக் கேட்டு, யார் யார் மனம்மாறி

இருக்கிறார்களோ, அவர்கள் அனைவரையும் மீண்டும் தம்வசப்படுத்துவதில் மும்முரமாக ஈடுபட்டார்கள். இதையறிந்த அபூதாலிப் அவர்கள் பனூஹாஷிம்களை அழைத்து, "என் அருமைப்புதல்வர் முஹம்மதுக்கு எந்த விதத்திலும் ஆபத்தில்லாமல் பாதுகாக்க வேண்டும்" என்று கட்டளை யிட்டார்கள். இதற்கு ஹாஷிம் கோத்திரக்காரர்கள் இணங்கினார்கள்.

## 31. திருநபி [ஸல்] அவர்களுக்கு ஆசை காட்டுதல்

குறைஷியர்கள் அபூதாலிப் அவர்களிடத்தில் மூன்று முறை தூது சென்றும் எந்தவித பலனும் இல்லை. நாளுக்கு நாள் இஸ்லாமானது, குன்றின் மேலிட்ட விளக்கைப் போன்று பிரகாசிக்கத் தொடங்கியது. இதைப் பார்த்த குறைஷியர்களுக்கு பெருமானாரின் மீது விரோதம் அதிகமாயிற்று.

ஒரு நாள் நாயகம் அவர்கள் கஃபாவில் தனிமையாக உட்கார்ந்து, இறைவனிடத்திலே பிரார்த்தனை செய்துகொண்டு இருந்தார்கள். குறைஷி மக்களும் இன்னொரு இடத்தில் அமர்ந்திருந்தனர்.

அப்பொழுது அவர்களோடு சேர்ந்து அமர்ந்திருந்த உத்பா "குறைஷி மக்களே, அதோ! நமக்கு எதிர்ப்பாகப் பிரச்சாரம் செய்யும் முஹம்மது அமர்ந்திருக்கிறார். அவரிடத்திலே சென்று நான் பல ஆசை வார்த்தைகளைக் கூறி, எப்படியாவது அவருடைய பிரசாரத்தில் இருந்து அவரைத் தடை செய்வதற்கு முயல்கிறேன். இதன் மூலமாக முஹம்மதுடைய பிரசாரத்தைக் கட்டுப்படுத்தலாம்" என்றார். அதுவும் எப்பொழுது என்றால், ஹம்ஸா (ரலி) அவர்கள் இஸ்லாத்தைத் தழுவிய சில நாட்களுக்குப் பிறகு!

உடனே குறைஷியர் "இனிமேல் முஹம்மதை மிரட்டியோ, அதட்டியோ பணியவைக்க முடியாது. தந்திரத்தால்தான் அவரைப் பணியவைக்க முடியும்" என்று கருதி உத்பா சொன்னதை ஏற்று, உத்பாவையே அண்ணல் நபி அவர்களிடத்தில் அனுப்பி வைத்தார்கள்.

## கேள்வி: உத்பா பெருமானாரிடத்தில் சென்று என்ன ஆசை வார்த்தைகள் சொன்னார்?

பதில் : நாயகம் அமர்ந்திருந்த இடத்திற்கு நேராக உத்பா சென்று அவர்களுக்கு அருகில் அமர்ந்து "என் அன்புக்குரிய சகோதரரின் புதல்வரே! நீங்கள் ஏன் எங்கள் மத்தியில் நாங்கள் வெறுக்கக் கூடிய அளவு நடந்துகொள்கிறீர்கள்? நமது சமூகக் கட்டுப்பாட்டை மதிக்காமல் அதற்கு மாற்றமாக நடக்கின்றீர்களே, எங்களின் ஒற்றுமையைக் கெடுத்து விட்டீர்களே? எங்கள் தெய்வங்களைக் குறை கூறுகிறீர்களே? எங்கள் முன்னோர்களை வழிதவறியவர்கள் என்று கூறுகிறீர்கள்; எங்களிலே உள்ள திறமை மிக்க சமூகஅறிவாளிகளையும், புத்தியில்லாதவர்களாக்கி விட்டீர்கள். எனினும் சில நல்ல காரியங்களைச் செய்வீர் என்ற நம்பிக்கையில் உம்மிடம் வந்திருக்கிறேன். நான் அதை உமக்குச் சொல்லட்டுமா?" என்றார்.

அதற்கு முஹம்மது (ஸல்) அவர்கள்; சரி; நீங்கள் என்ன செய்தியைக் கொண்டு வந்திருக்கிறீர்கள்? என்று நீங்கள் கூறுங்கள்: அதைக் கேட்கிறேன்" என்றார்கள்.

முதலாவதாக, "முஹம்மதே! மக்களிடையே நீங்கள் பிளவு" ஏற்படுத்துவதால் யாதொரு பயனும் இருக்காது. நீங்கள் இந்த அரபு நாட்டிற்கே தலைவராக வேண்டுமானால் இப்போதே கூறிவிடுங்கள். இந்த நாட்டின் அரசியல் அதிகாரங்களையே உங்களிடம் வழங்கிவிடுகிறோம். அல்லது அழகிய மங்கையர் மீது அவாவிருப்பின் அதையும் கூறிவிடுங்கள். அரபு நாட்டு அழகிகளை உங்கள் பாதங்களில் பணிய வைக்கிறோம். அரபு நாட்டுச் செல்வச் சீமானாக விரும்பின் அதையும் கூறிவிடுங்கள்.

எங்கள் செல்வமனைத்தையும் உங்கள் முன் கொட்டி விடுகிறோம். ஆனால் நீங்கள் இஸ்லாமியப் பிரச்சாரத்தை விட்டுவிட வேண்டுமென்பதே நாங்கள் வேண்டுவது,'' எனக் கூறினார்.

இதைக் கேட்ட அண்ணலார்,''எனது ஒரு கரத்தில் நிலவையும், மறுகரத்தில் சூரியனையும் கொண்டு வந்து வைப்பினும் எனது ஏகத்துவக் கொள்கையைவிடமாட்டேன்'' என்றார்கள். பின்னர் 41ம் ஸூராவான ஹாமீம் ஸஜ்தாவிலுள்ள திருவசனங்களை ஓதிக் காட்டினார்கள். உத்பா இவற்றைக் கூர்ந்து செவிமடுத்துக் கேட்டார். ஸஜ்தாவுடைய ஆயத்து வரை ஓதி ஸஜ்தா செய்து விட்டு,''உத்பாவே! நீர் எவ்வித கருத்து மிகுந்த உண்மையான வார்த்தைகளைக் கேட்க வேண்டியதை நீர் கேட்டு இருக்கிறீர், இனிமேல் நன்கு சிந்தித்துக் கொள்வீர் என்று நான் கருதுகிறேன்'' என்றார்கள். அண்ணலாரின் மறுமொழியைக் கேட்ட உத்பாவிற்கு ஏற்கனவே மனதில் ஓர் அதிர்ச்சி ஏற்பட்டிருந்தது. இதைவிட திருமறையின் திருவசனங்களைக் கேட்டதும், அவற்றின் அரும்பெரும் கருத்துகள் அவரின் உள்ளத்தில் ஆழப்பதிந்து ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியது. ஏதோ ஓர் உணர்வால் கவரப்பட்டவராக தோல்வி தோய்ந்த முகத்தோடு பள்ளியில் தங்கியிருந்த குறைஷித் தலைவர் களிடம் வந்தார்.

**கேள்வி: திரும்பி வந்த உத்பா மக்கத்து குறைஷித் தலைவர்களுக்கு என்ன பதில் சொன்னார்?**

பதில் : நபிகள் பெருமானாரிடமிருந்து திரும்பிய உத்பாவிடம் ''நீர் இங்கிருந்து போனது போலத்திரும்பி வரவில்லையே, போன செய்தி என்ன ஆனது?'' என்று கேட்டார்கள். அதற்கு உத்பா, ''அன்புத் தோழர்களே! முஹம்மது திருக்குர்ஆன் வசனம் சிலவற்றை ஓதிக் காண்பித்தார். அவை கவிஞர்களின் கற்பனைத் திறனால் உண்டாக்கப்பட்டவையும் அல்ல. மந்திரக்காரர்களின் மந்திரமும் அல்ல. அது ஏதோ ஒரு தெய்வீக ஆற்றலாய்த்தான் இருக்க வேண்டும். ஆகவே நீங்கள்

அனைவரும் அவரின் எண்ணப்படியே விட்டு விடுங்கள்; அவருக்கு எந்த விதத்திலும் கெடுதல் செய்ய வேண்டாம். அவரது கொள்கையில் அவர் முழுமையாக வெற்றி பெற்றால், அது நமக்குத் தானே பெருமை. அதில் அவர் தோல்வியடைந்து விட்டால், அவரது கொள்கையை ஏற்றிருக்கக் கூடிய மக்கள் சும்மா விட்டுவிட மாட்டார்கள். மக்களே அவருக்குச் சரியான தண்டனை வழங்குவார்கள். நீங்கள் அவரை விட்டு விடுவீர்களேயானால் அவருக்கு ஏற்படுகின்ற கண்ணிய மனைத்தும் உங்களுக்கும் ஏற்படும். நீங்கள் அவர் மூலமாக பாக்கியவான்களாகி விடலாம்'' என்பதாகச் சொன்னார்.

இதனைக் கேட்டவுடன் ''உத்பாவே! முஹம்மது தம்முடைய சாமர்த்தியமான பேச்சால் உம்மை மயக்கிவிட்டார்!'' என்று சிரித்தவாறு அந்த குறைஷியர் பதில் கூறினார்கள்.

**கேள்வி: உத்பாவின் ஆசை வார்த்தைகளுக்கு இணங்க மறுத்த நாயகத்திடம் குறைஷியர்கள் மீண்டும் என்ன வேண்டினார்கள்?**

பதில் : மீண்டும் குறைஷியர்கள் நபி (ஸல்) அவர்களை சோதித்துப் பார்த்தார்கள். என்னவென்றால் ''ஓ அபூதாலிபின் வளர்ப்புப் பிள்ளை முஹம்மதே! நாங்கள் உம்முடைய நன்மையைக் கருதி பல வெகுமதிகளைத் தந்தோம். அவற்றை நீர் ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டீர். மற்றும் நாங்கள் கூறுகிற எதையுமே நீர் ஏற்றுக் கொள்ள மறுக்கிறீர். இதையாவது நீர் செய்யலாமே?'' என்றார்கள். அப்போது பெருமானார் ''என்ன செய்யச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டார்கள்.

அதற்கு குறைஷியர் ''மக்காவில் நாம் மிக நெருக்கடியாக வாழ்ந்து வருகிறோம். நமக்கு எப்பொழுதும் தண்ணீர் குறையாக இருப்பதால் வறட்சி ஏற்படுகின்றது. உண்ணவும் உடுக்கவும் கஷ்டமாக இருக்கிறது. இந்த விஷயம் உமக்கு நன்கு தெரியும். எனவே உம்மை நபியாக அனுப்பி வைத்த உம் இறைவனிடத்தில் உமக்கும் எங்கள் அனைவருக்கும் நெருக்கத்தை உண்டாக்கிக் கொண்டு இருக்கிற இந்த

மலைகளைஅப்புறப்படுத்திவிட வேண்டிக்கொள்ளும். இன்னும் ஷாம் இராக் தேசங்களில் ஆறுகள் இருப்பது போல், நமக்கும் ஆறுகளை உண்டு பண்ணித் தரவேண்டும் என்றும் உம்மை நபியாக அனுப்பிய இறைவனிடத்திலே கேட்டுத் தரவேண்டும்.

மேலும் எங்களுக்கு முன்பாக, மரணித்த எங்களுடைய முன்னோர்களையும், உம் உறவினர்களையும் உயிர்பெறச் செய்யவேண்டும். அவ்வாறு, உயிர் பெற்றெழுந்து வரும் பொழுது, எங்களிலே உண்மை பேசக்கூடிய தலைவராக விளங்கிய குஸைய்யுப்னு கிலாபும் உயிர்பெற்று வரவேண்டும். அவர் அவ்வாறு வந்தவுடன் நீர் கொண்டு வந்து இருக்கக் கூடிய இப்புதிய மார்க்கமும் நீர் கூறுகின்ற செய்திகளும் உண்மை தானா என்று அவரைக் கேட்போம். அப்போது அவர் உண்மைதான் என்று கூறி, உம்மை ஆதரித்தால் நாங்கள் கூறிய மற்ற காரியங்களையும் செய்து முடித்துவிட்டால் உம்மை நாங்கள் ஏற்றுக் கொண்டு நீர் இடுகின்ற கட்டளைக்கெல்லாம் கீழ்படிந்து நடப்போம். மேலும், அல்லாஹ்விடத்தில் உமக்கு நிறைய அந்தஸ்து இருக்கின்றது என்பது முற்றிலும் உண்மை என்றும் அவன் உம்மை நபியாக அனுப்பியிருப்பது உண்மையென்றும் நம்புவோம் என்றனர்.

குறைஷிகள் சொன்ன அனைத்தையும் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த நாயகம் அவர்கள் உறுதியான முறையிலே, பதில் கூறினார்கள். மக்கத்துத் தலைவர்களே! குறைஷிப் பெருமக்களே! நீங்கள் என்னிடம் கேட்ட மந்திர தந்திர காரியங்களைச் செய்வதற்காக இறைவனால் உங்களுக்கு நான் அனுப்பப்படவில்லை. எதற்காக நான் இறைவனால் அனுப்பி வைக்கப்பட்டேனோ, அதனை நான் உங்களுக்கு அறிவித்து விட்டேன். நீங்கள் அனைவரும் அதனை ஏற்றுக் கொள்வீர்களேயானால், அது உங்களுடைய இவ்வுலக வாழ்வு, மறுஉலக வாழ்வு இரண்டிற்கும் மாபெரும் செல்வமாக அமையும். இதனை நீங்கள் ஏற்றுக் கொள்ளாமல் நிராகரித்து விடுவீர்களேயானால், உங்களுக்கும் எனக்கும் மத்தியில்

இறைவனாகிய அவன் நியாயம் வழங்கும் வரையில் பொறுமையுடன் காத்திருப்பேன்."

**கேள்வி: மீண்டும் குறைஷி மக்கள் நபி (ஸல்) அவர்களிடத்திலே என்ன கேட்டனர்?**

பதில் : "முஹம்மதே! நாங்கள் கேட்டவற்றை நீர் செய்து தராவிட்டாலும் உமக்குத் தேவையான வசதிகளையாவது நீர் செய்து கொள்வீராக. உம்மை ஆதரித்து, நீர் கூறுவது மெய்தான் என்று சாட்சியம் கூறுவதற்காக, ஒரு மலக்கை உம்முடன் அனுப்புமாறு உம்மைப் படைத்த இறைவனிடத்தில் கேளும். அப்படி இறைவன் உம் வேண்டுதலுக்கு இசைந்து ஒரு மலக்கைத் தந்தால், அந்த மலக்கை அழைத்துக் கொண்டு நேராக எங்களிடம் வாரும். வந்து உமக்குத் தேவையான தோட்டங்களையும், மாட மாளிகைகளையும், இன்னும் பொன்னையும், பொருளையும் தரவேண்டும் என்று (அவனிடம்) வேண்டிக் கொள்ளும். இதன் மூலமாக உமக்குச் செல்வம் அதிகம் உண்டாகும். நாங்கள் எப்படி கடைவீதிக்குச் சென்று வியாபாரம் செய்து எங்களது குடும்பத்திற்குத் தேவையான உணவையும், உடையையும் சேகரித்துக் கொள் கிறோமோ, அதுபோன்று நீரும் கடைக்குச் சென்று வர்த்தகத்தைச் செய்து, உம் தேவைக்குத் தகுந்த உணவையும் சம்பாதித்துக் கொள்ளும். நீர் அப்படிச் செய்தால், எங்களைப் போன்ற சிறந்த பணக்காரராகி விடுவீர். அப்படி நீர் செய்தால், உம்முடைய இறைவனிடத் திலே, உண்மையிலே உமக்கு எவ்வளவு அந்தஸ்து இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வோம் என்று அவர்கள் கூறினார்கள்.

இதனையும் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. இதனை நான் செய்யப்போவதுமில்லை. இதற்காகவும் நான் உங்களிடத்தில் இறைவனால் அனுப்பப்படவில்லை. நற்செய்தி சொல்பவனாகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காகவுமே நான் அனுப்பப் பட்டு இருக்கிறேன் என்று கூறினார்கள்.

'உம்முடைய இறைவன், எதைநாடுகிறானோ அதைச் செய்வான் என்பதாக நீர் சொல்கிறீர். வானம் இடிந்து அதில் ஒரு பகுதி எங்கள் மீது விழும்படி செய்யும். இதனை நீர் செய்யாத வரைக்கும் உம்மை நாங்கள் மெய்யாக விசுவாசிக்க மாட்டோம்' என்றும் குறைஷியர் சொன்னார்கள். அதற்கு முஹம்மது நபி (ஸல்) அவர்கள் இது இறைவனுக்கு உரிமையான விஷயம். அவன் நாடினால் உங்களுக்கு இப்படிச் செய்வான், என்றார்கள்.

முஹம்மதே! இது நாள் வரைக்கும் உம் செயல்களை நாங்கள் பொறுத்துக் கொண்டே வந்தோம். இனிமேல் இனிமேல் பொறுத்துக் கொண்டு இருப்பதற்கு எங்களால் முடியாது. நாங்கள் பொறுத்துக்கொண்டுதான் இருக்க வேண்டும் என்ற அவசியமும் இல்லை. நாங்கள் வணங்கும் தெய்வங்களின் மீது சத்தியமாக இனி உம்மைச் சும்மா விடமாட்டோம். ஒன்று உம்மை நாங்கள் நாசமாக்க வேண்டும் அல்லது நீர் எங்களை நாசமாக்க வேண்டும் என்று பலவாறாகப் பேசினார்கள். இவ்வாறு அவர்கள் கூறியதும் அவர் களோடு உட்கார்ந்திருப்பதை விட்டும் நாயகம் எழுந்து சென்று விட்டார்கள்.

இதைக் கண்ட அங்கிருந்த மூன்று குறைஷியர் பின் தொடர்ந்து வந்து முஹம்மதே! உம் சமூகத்தார் உமக்குக் கூற வேண்டியவற்றைக் கூறி விட்டார்கள். நீர் எதையும் ஏற்றுக் கொள்வதில்லை. நான் சொல்கிறேன். நீர் ஒரு ஏணியைக் கொண்டு வந்து வானத்திற்கு அதன் வழியாக ஏறிச்சென்று நான்கு மலக்குகளை அழைத்து வரவேண்டும். அவர்கள் உம்முடன் வந்து, எம்மைப் பார்த்து நீர் கூறுவது அனைத்தும் உண்மைதான் என்று சாட்சியம் கூறவேண்டும். இதனை நாங்கள் கண்ணால் காணாத வரையிலும் உம்மை நாங்கள் நம்பமுடியாது. இதை நீர் செய்தால் நிச்சயமாக நாங்கள் அனைவரும் விசுவாசிப்போம் என்று சொன்னார்கள்.

(ஆதாரம்: இந்த விவாதங்களை திருமறையின் பதினேழாம் அத்தியாயமான ஸூரத்து பனீ இஸ்ராயீல் 90-95 வசனங்கள் குறிப்பிடுகின்றன.)

# 32. நபி [ஸல்] அவர்களை குறைஷியர்கள் பரிசோதித்தல்

**கேள்வி: நபி பெருமானாரை குறைஷியர் எந்த விதத்தில் பரிசோதித்துப் பார்த்தார்கள்?**

பதில் : பெருமானார் அவர்கள் போதிக்கின்ற பிரச்சாரத்திலிருந்து நிறுத்திவிடவேண்டும். அவர்கள் நெருங்கிய நண்பர்களையும் அவர்களை விட்டுப் பிரித்து விட வேண்டும் என்று பெரிய தந்தையாகிய அபூதாலிப் அவர்களிடத்தில் மூன்று முறை தூது சென்று முயன்றார்கள். ஆனால் அபூதாலிப் அவர்களோ குறைஷியர் பக்கம் சார்ந்து கொள்ளாமல் நடுநிலைமை வகிப்பது போல் இருந்து விட்டார்கள். மேலும், நபி பெருமானாரிடத்தில் "உம் விருப்பப்படி, நீர் பின்பற்றக் கூடிய மார்க்கத்திலேயே நிலைத்திருப்பீராக!" என்று சொல்லிவிட்டார்கள். இதற்கு அடுத்தாற் போன்று பெருமானாருக்கு குறைஷியர்கள் உலக ஆசையைக் காட்டினால், அந்த ஆசைக்கு இணங்கி, தம் போதனைகளிலிருந்து விலகினாலும் விலகலாம் என்று எண்ணி, உத்பாவை தூதுவராக அனுப்பினார்கள்.

அவர் அங்கு சென்று நபி (ஸல்) அவர்களுக்கு உலக ஆசைகளையும், குறிப்பாக செல்வங்களையும் அழகு மிகுந்த பெண்மணிகளையும் அரசாங்கத்தையும் தருகிறோம், என்பதாக ஆசை காட்டி, நாயகத்தை வசப்படுத்தப் பார்த்தார்.

"அழியும் உலகத்திலே மறைந்து போகும் இந்த இச்சைகளுக்கு நான் தலைவணங்குபவன் அல்ல. நான் இவ்வுலகத்திற்கு ஏன் அனுப்பப்பட்டேன் என்றால், நன்மையை ஏவி, தீமை செய்கின்ற மக்களைத் தடுத்து நல்வழிப்படுத்துவதற்காக அனுப்பப்பட்டிருக்கிறேன். எனவே

இந்த இச்சைகளுக்கு நான் செவிசாய்க்கமாட்டேன்'' என்று பெருமானார் சொல்லி விட்டார்கள்.

இதைக் கேட்ட குறைஷி மக்களுக்கு ''எரிகிற நெருப்பில் எண்ணெயை வார்த்து ஊற்றுவது போல'' இருந்தது. ஏற்கனவே நபி (ஸல்) அவர்களின் மீது இருந்த பகைமை இப்பொழுது அளவுக்கு அதிகமாகிவிட்டது. எப்படியும் அவர்கள் போதிக்கின்ற வழியிலிருந்து அவரைத் தடை செய்ய வேண்டும் என்பதற்காக ஒரு திட்டத்தை வகுத்து மதீனாவிலுள்ள யூத அறிஞர்களிடம் நள்ருப்னு ஹாரித், அக்பத்து என்ற இருவரை அனுப்பினார்கள். ஏனென்றால் அந்த யூதர்களிடத்தில் முற்காலத்து வேதநூல்கள் இருந்தன, அவர்களுக்கு நபிமார்களைப் பற்றிய செய்திகள் அனைத்தும் தெரியும். ஆனால் குறைஷி மக்களுக்கு நபிமார்களைப் பற்றியே தெரியாது.

எனவே நீங்கள் இருவரும் முஹம்மதுடைய தன்மைகள், குணங்கள் ஆகியவற்றையும் அவருடைய உபதேசங்களைப் பற்றியும் யூத அறிஞர்களிடம் விவரித்துக்கூறி, அவரைப் பற்றி விசாரித்து, அவர்களிடத்தில் நாயகத்தைப் பற்றியும், போதனைகளைப் பற்றியும் எடுத்துச் சொல்லிவிட்டு ''நீங்களோ தௌராத் வேதக்காரர்கள், எங்களுடைய இந்த நண்பரைப் பற்றிய உங்களது கருத்தை விளக்கமாகத் தெரிவிக்க வேண்டும்,'' என்பதாகக் கேட்டனர்.

அதற்கு யூதர்கள், ''மூன்று காரியங்களைக் குறித்து அவரிடத்தில் நீங்கள் கேளுங்கள். அந்த மூன்று கேள்விகளுக்கும் அவர் சரியாகப் பதில் கூறிவிட்டால், அவர் மெய்யான நபி தான். அவரை நீங்கள் பின் தொடரலாம். ஆனால், அவற்றுக்கு அவர் சரியான பதில் அளிக்காவிடில், அவர் சொல்வதும் செயல்படுவதும் அத்தனையும் பொய்மை நிறைந்ததாகவே இருக்கும். பொய்மை நிறைந்த அவரை நீங்கள் பின்பற்ற வேண்டியதில்லை'' என்பதாகச் சொல்லி, மூன்று வினாக்களைத் தொடுத்தார்கள். 1. குகை வாலிபர்களைக்

குறித்துக் கேள்வி கேளுங்கள். அவர்கள் முன் காலத்தில் வாழ்ந்தவர்கள். அவர்களைக் குறித்து ஆச்சரியமான செய்திகளும் இருக்கின்றன. 2. உலகப் பரப்பில் கீழ் கோடியிலிருந்து மேல் கோடிவரை பிரயாணம் செய்த ஒருவரைப் பற்றி விசாரியுங்கள். 3. ஆன்மாவைப் பற்றிய தெளிவான விளக்கத்தையும் கேளுங்கள் என்றார்கள். இவற்றைக் கேட்டுக் கொண்டு தூதுவராகச் சென்ற இருவரும் மக்காவுக்குத் திரும்பி விட்டார்கள்.

**கேள்வி: யூதர்கள் சொல்லித் தந்ததை குறைஷியர் எப்படிச் செயல்படுத்தினார்கள்?**

பதில் : யூதர்கள் சொல்லிக் கொடுத்த மூன்று கேள்விகளையும் பெற்றுக் கொண்டு, குறைஷித் தூதுவர்கள் மக்காவிற்குத் திரும்பி வந்து நபி பெருமானாரிடம் அக்கேள்விகளைக் கேட்டனர்.

அதற்கு நாயகம் அவர்கள், ''இந்த கேள்விகளுக்கெல்லாம் நாளை பதில் கூறுகிறேன்'' எனச் சொன்னார்கள். இறைவன் தங்களுக்கு நிச்சயமாக வழிகாட்டுவான் என்ற உறுதியான நம்பிக்கையிலே அவ்வாறு சொன்னார்கள்.

**கேள்வி: குறைஷியர்களின் கேள்விகளுக்கு நபி (ஸல்) அவர்கள் மறுநாள் பதில் சொன்னார்களா?**

பதில் : இல்லை, இவர்கள் குறைஷியர்களிடத்திலே நாளைய தினம் உங்களது கேள்விகளுக்கு பதில் சொல்கிறேன் என்று சொல்லும் பொழுது, அந்த நாளைய தினம் என்ற வார்த்தைக்கு முன்னதாக, இன்ஷா அல்லாஹ் என்று சொல்லவில்லை: (இன்ஷா அல்லாஹ் என்றால் இறைவன் நாடினால்). ஆனபடியினால், இறைவனிடத்தில் இருந்து அவர்களுக்கு வஹி வரவில்லை. நாட்கள் பதினைந்தாயின. குறைஷிக் காபிர்களுக்கு, இது பெரிதும் கொண்டாட்டமாக மாறியது. ''நாளை பதில் கூறுகிறேன்'' என்று சொல்லி விட்டுச் சென்ற முஹம்மது இன்றைக்கு பதினைந்து நாட்களாகி

விட்டன. இன்னும் பதில் சொல்ல முடியாமல் தடுமாறுகிறார். இவரை எப்படி நபி என்று ஏற்றுக் கொள்வது? இவரா உண்மையைப் போதிப்பவர்,'' என்று சொல்லி, இழிவாகப் பேசினார்கள்.

இவ்வாறு இவர்கள் இழிவாகப் பேசுவது, நபி(ஸல்) அவர்களுக்குப் பெரிதும் கவலையை தந்தது. பின்பு, ஹலரத் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்தார். அவர்கள் வரும்போது, ஸூரத்துல் கஹ்பு என்ற ஸூராவுடன் வந்தார்கள். வந்ததும் இன்ஷா அல்லாஹ் என்று கூறாமல் யாருக்கும் வாக்களிக்கக் கூடாது என்ற விபரத்தையும், குறைஷியர்கள் கேட்ட மூன்று கேள்விகளுக்குரிய பதிலையும் அறிவித்தார்கள். மூன்று கேள்விகளுக்குரிய பதில்கள் பின்வருமாறு: 1. நிச்சயமாக குகையையுடையவர்களும் ரக்கீமும், நம்முடைய ஆச்சரியகரமான சான்றுகளில் நின்று முள்ளவர்களாயிருந் தார்கள் என்றெண்ணுகிறீர்களோ? (18.:9)

2. நபியே துல்கர்னைனைப் பற்றி (அந்த யூதர்கள்) உம்மிடம் கேட்கின்றனர். ''அவருடைய சரித்திரத்தில் சிறிது நான் உங்களுக்கு ஓதிக் காண்பிக்கிறேன்'' என்று நீர் கூறுவீராக. நிச்சயமாக நாம் அவருக்கும் பூமியில் ஆதிக்கத்தைக் கொடுத்து மிக்க வசதியளித்தோம். ஒவ்வொரு பொருளையும் (தமது இஷ்டப்படி) செய்யக் கூடிய வழியையும் நாம் அவருக்கு அளித்தோம்.

அவர் பூமியில் ஒரு வழியைப் பின்பற்றிச் சென்றார். சூரியஸ்தமன (மேற்குத்) திசையை அவர் அடைந்த போது சேற்றுக் கடலில் சூரியன் அஸ்தமிப்பதைக் கண்டார் அவ்விடத்தில் ஒருவகை ஜனங்களையும் கண்டார். (நாம் அவரை நோக்கி) துர்கர்னைனே நீர் (இவர்களைத் தண்டித்து) வேதனை செய்யலாம். அல்லது அவர்களுக்கு நன்றி செய்யலாம். (இது விஷயத்தில் உமக்குப் பூரண சுதந்திரம் அளித்திருக் கிறோம்) என்று கூறினோம்.

3. இன்னும் ஆன்மாவைக் குறித்து உம்மிடம் அவர்கள் வினவுகின்றனர். "ஆன்மா என் றப்பின் கட்டளையில் நின்றுமுள்ளது. மேலும் கல்வியில் நின்றும் மிகச் சொற்பத்தை யல்லாமல் நீங்கள் கொடுக்கப்படவில்லை" என்று கூறுவீராக. (17:85)

# 33. ஹிஜ்ரத்து

## கேள்வி: ஹிஜ்ரத்து என்றால் என்ன?

பதில் : ஓர் இடத்தை விட்டு வேறாரு இடத்திற்கும் ஒரு நாட்டை விட்டு இன்னொரு நாட்டிற்கும் ஒரு நகரத்தை விட்டு இன்னொரு நகரத்துக்கும் குடி பெயர்ந்து செல்லுதல் ஹிஜ்ரத் ஆகும்.

## கேள்வி: ஏழை முஸ்லிம்கள் ஹிஜ்ரத் செய்யக் காரணம் என்ன?

பதில் : மக்காவிலுள்ள குறைஷி காபிர்கள் நபி (ஸல்) அவர்களையும், அவர்களைச் சார்ந்த ஏழை முஸ்லிம்களையும் தாங்க முடியாத அளவுக்கு துன்பத்தைத் தந்து மகிழ்ந்தார்கள். இந்த துன்பங்களைத் தாங்க முடியாத ஏழை முஸ்லிம்கள் எல்லோரும் ஒரு நாள் பெருமானாரிடம் வந்து இறைத்தூதர் அவர்களே, இக்குறைஷி மக்கள் தரும் கஷ்டங்களை தாங்கள் பொறுத்துக் கொள்கிறீர்கள். ஏழைகளாகிய எங்களாலும் தாங்க முடியும், இருந்தாலும் நிம்மதியாக இறைவணக்கம் செய்யவும், எங்களை தற்காத்துக் கொள்ளவும் அனுமதியுங்கள் என்று வேண்டினர். இதைக் கேட்ட பெருமானார் அவர்கள், தோழர்களை இறைவனின் உத்தரவு வரும்வரை பொறுத்திருங்கள் என்றார்கள். ஆனால் இறைவனிடமிருந்து முன்னைய நபிமார்கள் இன்னல்களைப் பொறுத்துக் கொண்டு உறுதியாக இருந்தது போல் நீங்களும் இருங்கள் என்ற உத்தரவுதான் வந்தது. இதை அறிந்த ஸஹாபா தோழர்கள், இறைதூதர் அவர்களே, இம்மக்கா நகரைவிட்டு வெளியேறு வதற்காவது எங்களுக்கு அனுமதி தாருங்கள் என்றார்கள்.

இவர்களின் துயரினைக் கண்ட அண்ணல் நபி அவர்களின் கண்களில் கண்ணீர் கசிந்தது. சரி, அப்படியே செய்யுங்கள் என்றார்கள். எங்கு செல்வது என்று ஸஹாபாக்கள் கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அபிஸீனிய நாட்டின் எல்லையைச் சுட்டிக்காட்டி அதோ அங்கு செல்லுங்கள். அந்த நாட்டின் பெயர் அபிஸீனியா என்பதாகும். இந்த நாட்டின் மன்னன் சிறப்பு மிகுந்த பண்புகளையுடையவன். உங்களை நன்கு ஆதரிப்பான். நீங்கள் இங்கு திரும்பி வருவதற்கு ஏற்ற சூழ்நிலை வரும் வரைக்கும் அங்கு தங்கி வாழுங்கள் என்று உத்தரவு கொடுத்தார்கள். இது நபிப் பட்டம் கிடைத்த ஐந்தாம் ஆண்டு ரஜப் மாதம் (கி.பி.615)ல் நடந்தது.

(அன்பார்ந்த வாசகப் பெருமக்களே, இத்துடன் இந்த முதலாவது பாகம் முடிவடைகின்றது. ஹிஜ்ரத்திற்குப் பின் உள்ள தொடர்ச்சி இரண்டாம் பாகத்தில் இடம் பெற்றுள்ளது.)

